ஓம்

[illegible]

சற்குருபரப்ராஹ்மணேநம:

# திருவருட் பிரகாச வள்ளலார் மரபு

ஸ்வகீயாநந்தசொரூபராகிய

ப. அருணாசல சுவாமிகள்

பாதசேகரர்

காஞ்சீபுரம்

நிர்ச்சல, இராமாநந்த சுவாமிகள்

இயற்றியருளிய

# பரமார்த்த நியாயத்தீர்ப்பு.

மகாமஹோபாத்யாய

உ. வே. சாமிநாதையர்

இது

சென்னை-ஹிந்து தியலாஜிகல் ஐஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமத். கோ. வடிவேலுசெட்டியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

பிறைசை சேணியத் தெருவு

ப. சி. தவசுமுத்துநாடார் மனைவியார்

அலர்மேலம்மாளவர்களால்

சென்னை, கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதாநந்தம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

ஜனவரி 1913.

[இதன் விலை] [0-12-0

ஓம்.

தத்வமஸி.

ஸ்ரீசற்குரு பரப்பிரஹ்மணே நம:.

# பரமார்த்த நியாயத்தீர்ப்பின்

# முகவுரை.

—

"துர்லபம பிராப்ய மாநுஷ்யம், ஜந்தூநாம் நரஜந்ம துர்லபம்" என்றும், "அரிதரிது மானிட ராதலரிது" என்றும், "மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிது" என்றும் கூறியுள்ளவாறு அரியதிலுமரியதாகிய மானிடப் பிறப்புடைய ஜீவர்களுக்கு முக்கியப் பிரமாணங்களாக விருப்பன வேதம், வேதாங்கம், நியாயம்,மீமாஞ்சை, தருமசாஸ்திரம், புராணம் என்பனவாம். இவையே சதுர்த்தசவித்தைகளாம் இந்தசதுர்த்தச(பதினான்கு)வித்தைகளும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்த நான்கினையுமடையு மார்க்கங்களை விளக்குவனவாம். இவற்றுள்,"மோட்சயேவ பரமபுருஷார்த்த:,நித்யத்வாத் நசபுநராவர்த்தே நசபுநரா வர்த்ததஇதி சுருதே:" என்றபடி மோட்சமேபரமபுருஷார்த்தமாம் (புருஷனடையத்தக்க பிரயோஜனமாம்). "நித்தியத்தன்மையுடைமையால் அவன் மறுபடியும் பிறக்கிறதில்லை; அவன் மறுபடியும் பிறக்கிறதில்லை" என்று சுருதிகள் கோஷித்து வருகின்றமையால், நித்தியமாயும் பரமபுருஷார்த்தமாயும் விளங்குகின்ற தன்னையறிந்து தன்மயமாக நிற்றலே ஜன்மமெடுத்ததற்கு முக்கியப் பிரயோஜனமாம். ஆகையால், பரமபுருஷார்த்தமாகிய தன்னை யறியுமளவும் ஜன்மவடிவ துக்கம் ரஹிதமாகாதென்பது "வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து, தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப், பேராத காலநேமிப் பிரமையிற் றிரிவன் போதம், ஆராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே" என்று கைவல்லிய நவநீதமும், "தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும், உருவத்தா லாய பயன்" "உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம், உடம்பினி லுத்தமனைக் காண்" என்று ஔவைகுறளும், "தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை யறியாமற் றானே கெடுகின்றார்" "தன்னை யறிய தறிவா மஃதன்றிப் பின்னை யறிவது பேயறி வாமே" என்று திருமந்திரமும், பிறவும் கூறுவதனால் நன்கு விளங்கும். தேகேந்திரியாதி சர்வப் பிரபஞ்சங்களுக்கும் விலக்ஷணமாயிருக்குந் தன்னை அறிந்து தன்மயமாகவிருப்பதே முக்கியப் பிரயோஜனமாமென் றிதனால் வெளியாகின்றமையால், ஜன்ம பரம்பரைக் கேதுவாயுள்ள காமிய கருமங்களைச் செய்யாது, நிஷ்காமிய கருமஞ்செய்து, சித்தசுத்தியடைந்து, சற்குருவையடுத்துத் தன்னையாரென்று விசாரித்தறிந்து, தானே பொருளாயும், தானே யினபுருவாயும், தானே வீடுருவாயும் இருக்கின்றமை

யைத்தெளிந்து, தனக்கன்னியமாக அறம் பொருளின்பம் வீடுமெ அவற்றை யடைபவனும் இல்லையென்றுகண்டு, பிரபஞ்சம் உண்மையில் வந்தியா புத்திரன், ககனாரவிந்தம்போலச் சொன்மாத்திரமாயுள்ளதென்று துணிந்து, சர்வாகாரமாயும் சர்வாதாரமாயும் துவிதரகிதமாயும், நிர்விகாரமாயும், சர்வ பரிபூரணமாயும், சகுணநிர்க்குண விலட்சணமாயும் சர்வசாட்சியாயும், சோதித்திரயங்களை விளங்கச்செய்யுஞ்சுயஞ்சோதியாயும் விளங்கும் பரமாத்துமாவே தானென்றிருக்கவேண்டும்; அதுவே பரமபுருஷார்த்த சாதனமாமென்பது ஆத்மானுபவிகளுக்குக் கரதலாமலகம்போன்று விளங்குவதாம். "பூதலயமாகின்ற மாயைமுத லென்பர்சிலர் பொறிபுல னடங்கு மிடமே, பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம் போனவிட மென்பர் சிலபேர்; நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர் நட்டநடு வேயிருந்த, நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி நாடிலரு வென்பர் சிலபேர்; பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர் பேசிலரு ளென்பர் சிலபேர், பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர் பிறவுமே மொழிவரிவை யாற்; பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற் பரமசுக நிட்டைபெறுமோ, பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே" என்று தாயுமான சுவாமிக ளருளியபடி தெய்வ நிச்சயத்தை நானாவாகக் கொண்டிருக்கும் பேதமதவாதிகளின் அபிப்பிராயங்களை யெல்லாம் மிதவாதமென்று கழித்து, சுருதி யுத்தி யனுபவங்களுக்கொப்ப, தேகேந்திரியாந்தக்கரணாதிக திருசிய பிரபஞ்சங்களை "நேதி நேதி (இதுவல்ல, இதுவல்ல)" என்னும் மகாவாக்கியப்படி நியதிசெய்து, சர்வசாட்சியாயும் சர்வாந்தரமாயும் விளங்கும் பரமாத்மாவே தானெனவறிந்து, அதுவே தானென்று நிருவிகற்ப சகஜாமனஸ்க சிவராஜயோக சமாதி பெற்று, சங்கல்பசாட்சியாய்த் தன்மய சுபாவமுற்ற ஜீவன் முத்தர்களின் ஒழுக்கத்தை யனுசரித்து, யாவரும் தனுகரண புவனபோகங்களுக்கு விலக்ஷணமாயத் தன்னை (ஆத்மாவை) யறிந்து சர்வதுக்க நிவர்த்தி, பரமானந்தப் பிராப்திவடிவமான பரமபதத்தை யடையும்பொருட்டும் இப்பரமார்த்த நியாயத் தீர்ப்பு எழுதப்பட்டது. இதுகாறும் பெரியோர்க ளேற்படுத்தியிருந்த ஜட்ஜிமெண்டென்னும் ஆத்மார்த்த நியாயத் தீர்ப்புக்களின் ரஸாமிர்தமாயும், ஆங்காங்கு உபஸ்டாதிப் பிரமாணங்களென்னும் தேன்முதலியவற்றைப் புகட்டி மகாவுகந்ததாயும், சித்தாந்தபிந்து வென்னு மறியநூலினர்த்தத்தை விளக்குவதாயும், பஞ்சதசி விசாரசாகர முதலிய வேதாந்தசாஸ்திரங்களை யாதாரமாகக்கொண்டு விளங்குவதாயுமுள்ள இந்நூலுக்குப் பரமார்த்த நியாயத்தீர்ப்பு என்று பெயர்வைக்கப் பட்டது. இதில் பிரதிவாதிகள் தரப்பில்சாட்சிகளாகவந்த சமயவாதிகள் சாட்சைசயமடைதலும், வாதிதரப்பில் சாட்சிகளாய வந்த வேதகுருநியாயமாகிய சன்மார்க்கங்களைப்பெறுதலும், சற்குரு சுவாமிகளை (ஜட்ஜி) நியாயாதிபதியாக விருந்து நான், நானென்னும் ஆத்மார்த்த சொத்து யாவர்க்கும் பொதுவென்று தீர்ப்புச்செய்வதும் நன்றாக விளக்கப்பட்டிருக்கின்றன.

இந்த வியாஜ்ஜியத்தில் வாதி முமுக்ஷு, வாதிவக்கீல் அதிசூக்ஷ்மமாகிய ஸாத்வீகாம்ச புத்தி, வாதியின் சாக்ஷிகள் விவேகாதியர்கள், வாதி ரிகார்ட்டுகள் வேதாந்தாதி சாஸ்திரங்கள்; பிரதிவாதிகள் அஞ்ஞானியின் புத்திரர்களான பாமரன், கர்மி, மூடபக்தன் என்பவர்கள், பிரதிவாதி வக்கீல் கோர மூடபுத்தி, பிரதிவாதி சாக்ஷிகள் தனாத்மன், களத்திராத்மன, புத்திராத்மன், தேகாத்மன் முதலியவர்கள், பிரதிவாதியின் சாஸனங்கள் ஆகமபுராண இதிகாசாதிகள், தாவாசொத்து ஆத்மார்த்தப் பொருள். இந்த ஆத்மார்த்த சொத்துயாவர்க்கும் பொதுவாயப் பாத்தியதையுடையதாயிருப்பதாம். பரமார்த்த சொத்தைச் சிலர் தமக்கேயுரியதென் றனுபவிப்பது சரியன்றென்றும், அதனை யாவருமனுபவிக்கச் செய்வது முறையாமென்றும் யோசித்து, பிரமானந்தமென்னும் ராஜ்யத்தில் காயாபுரியென்னும் நகரத்தில் நவதுவாரபுரமென்னுங் கோட்டையில் சிதாகாசப்ரணவ மென்னும் மண்டபத்தில், மகாவுந்நதமாயலங்கரித்த வேதாந்தோசித பரமார்த்த நியாயத்தீர்ப்புக் கோர்ட்டில் துரியசிங்காதனத்தில் அசல சொரூபாபரோக்ஷசாக்ஷாத்காரமாயிலகும் ஸ்ரீ சற்குரு பிரபுச்சக்கிரவர்த்தியென்னு நியாயாதிபதியவர்கள் சுகவாமதேவ பிருங்கிமார்க்கண்டேய ராதிகளென்னும் ஜூரிகள் புடைசூழ, சங்கல்ப விகற்பங்களென்னுந் துவாரபாலகரும், அறிவென்னும் முன்ஷியும், சர்வாபிமான ரஹிதனென்னும் டபேதாரும், இமையாநாட்டமென்னும் ராயஸக்காரரும் விழிப்பாயிருக்க, தும்புருநாரதரையு மயக்கும் தசவிதநாதங்களுந் தாந்தாமென்று முழங்கக் கொலுவமர்ந்திருக்குஞ் சமயத்தில், தாபத்திரயதுக்கமொழியமுயலும் முமுக்ஷுவென்னும்வாதி சாத்வீகாம்சபுத்தி யென்னும் வக்கீல் மூலமாய் ஆத்மார்த்தசொத்தை அஞ்ஞானியின் புத்திரர்களாகிய எதிரிகள் அக்கிரமமாயபகரித்துக் கொண்டனர்; அவர்கள் அந்தச்சொத்துத் தமக்கேபாத்தியமுடையதென்றும், மற்றையர்க் கில்லையென்றும் கூறித் தாங்களே யனுபவித்து வருகின்றனர்; அந்தப் பொதுவாகிய நானென்னும் ஆத்மசொத்தை யாவரும் அனுபவிக்கும்படி செய்யவேண்டும்; அவர்களையும் அவர்கட்கு வாசாகச் சாட்சி சொல்ல வருபவர்களையும் தக்கபடி விசாரித்துத் தண்டிக்கவேண்டும் என்று பிரியாது தாக்கல் செய்வதும், எதிரிகளுக்கு நோட்டீசு அனுப்புவதும், அதற்கவர்கள் கிரமப்பிரகாரம் பிரதியாட்சேப மனுவுதாக்கல் செய்வதும், கோர்ட்டார் வையின்டேசுகள், சபங்கு முதலியவற்றைக் கிரமமாய் நடத்திய பிறகு, நியாயாதிபதியவர்கள் தீர்மானஞ்செய்வதும், வரிசைக்கிரமமாக இதில் வெழுதப்பட்டிருக்கின்றன.

இந்நூல் மந்தாதிகாரிகட்கும் தெளிவுண்டாகுமாறெழுதப்பட் டிருக்கின்றது. இதனை அவர்கள் ஆதியோடந்தமாகப் படிப்பாராயின், சித்தசுத்தி முதலியன க்ரமமாகவுண்டாக்கப்பெறறுச் சரீரத்திரய விலக்ஷணமாயும், அவஸ்தாத்திரய சாக்ஷியுமாயும் விளங்கும் தமது நிசசொரூபத்தை யுள்ளவாறறிந்து நித்தியதிருப்தி பெறுவாரென்பது இதனை யூன்றிப்படிப்பவர்க்கு

விளங்காமற் போகாது. இதில் ஒவ்வொரு விஷயத்திற்கும் வேண்டியவன வாகச் சுருதிஸ்மிருதிபுராணேதிகாசங்களும் தேவாரம், திருவாசகம், திருமந்திரம் நாலாயிரப்பிரபந்தம், திருக்குறள், கைவல்லியநவநீதம் முதலியனவும் பிரமாணங்களாயக் காட்டப்பட்டிருக்கின்றன.

பரமார்த்த நியாயத்தீர்ப்பென்னு மிந்நூல் அச்சுவாகனமேறி யுலவு மாறு பொருளுதவி புரிந்த, பிறவை ம-ா-ா-ஸ்ரீ ப. சி. தவசுமுத்துநாடார் தர்ம பத்தினியாகிய மாதுஸ்ரீ அலர்ம்மலம்மாளவர்களது நன்றியொரு போது மறக்கத்தக்கதன்றாம். இந்நூலின்கண் பிராந்திப் பிரமாதங்களால பிழைகளிருப்பின், அவற்றையறிவுடையோர் தெரிவித்தால் மறுபதிப்பில் அப்பிழைகளைத்திருத்தி அச்சிடுவதுடன் அவர்களுக்கு வந்தனமு மளிக்கப் படும். இந்நூல் யாதோ ரிடையூறுமின்றிப் பூரணமாக முற்றுப் பெறுமாறு திருவருள் புரிந்த எல்லாம்வல்ல இறைவன் இம்மெய்ஞ்ஞானநூலும் நிலைபெறு மாறும் அருள்புரிவானெனப் பிரார்த்திக்கின்றனன். இதிற்பிழையுளதாயின் உலகம் பொறுக்க.

காஞ்சிபுரம்,
17—3—1913.

நிச்சல இராமாநந்தன்.



ஓம்.

தத். சத்.

பரப்பிரஹ்மணே நம

# சாற்றுக்கவிகள்.

காஞ்சீபுரம்-பச்சையப்பன் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர் வெண்பாபுலி

## ஸ்ரீமந் வேலுசாமிபிள்ளை யவர்களியற்றிய

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புகலரும் வேதாந் தத்தனிப் பொருளைப் புவியுளோ ரெளிதினி லுணர்வான், திகழ்பர மார்த்த நியாயத்தீர்ப் பெனுநூ றெளிவுற வினிதுசெய் தளித்தான், பகருமோட்ச சாதன விளக்கம் பகர்ந்தவன் பரவுசீர்க்காஞ்சி, நகருறை மேலோ னிச்சல ராமா நந்தனும் பந்தமற் றவனே



இந்நூலாசிரியரின் பாதசேவகரும்

சென்னை-பிரசிடென்சி மாஜி. மாஜிஸ்ட்ரேட்டுமாகிய

## ஸ்ரீமான் பு. இராஜரத்தின முதலியாரவர்களியற்றிய

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

வைச்சலை யெறியுங் கடலுடை கொண்ட வசுந்தரை மன்பதை போற்று, மெச்சல மின்றி யோகசித் முதந் யெழிலுடை னருட்பதி யேயூட், கச்சியென் றெவருங் கணிசகருஞ் சீர்சால் கவினுடைப் பதியனில் வாழும், நிச்சல ராமா நந்தனென் றெவரு நிகழ்த்துமேற் குரவனின் றம்மா. (1)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மணிகொண்ட முடியரவின் சுமையாகும் வசுந்தரையின் மருவி வாழு, மணிகொண்ட வெழுவகையா முயிரகளுட் காட்சிபெறு மனித ராயார், துணிகொண்ட தன்றெய்வ மென்றெய்வ மென்றெவருந் துணிவி னோடு, எணிகொண்ட வழக்கதனை நியாயமிலா மையினாலே யெழிலார் கோர்ட் டில். (2)

வரமார்த்த ஜட்ஜியின்முன் வாதிப்ரதி வாதியரை வக்கீ றம்மால், திரமார்த்த மொழிபலவும விருவிடையின் வினவியதன திண்மை யாவுங், கரமார்த்த நெல்லியினற் கனிபோலக் கனிந்தெவருங் கணிக்கும் வண்ணம், பரமார்த்த நியாயத்தீர்ப் பதையளித்துப் பொன்றாத பதம்பெற் றானே (3)



## தமிழ்ப்புலவர், செல்வி ஸ்ரீமான்
## அப்பாசாமி உடையாரவர்களியற்றிய
### பதினுன்கு சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*சீரேறு தொண்டைநன் னாட்டினிலை மேன்பாற் சிறந்தகாஞ் சிப்பதி யில்வாழ், செகதசாத் திசனிறை பொறைவிரவு சாந்தமே திருந்துமா காம தாகப்; பாரேறு முடமிற மடசதிருநகெத வைக்குமருள பரமார்த்த மிது விதுவெனப், பகாரியப் பரமார்த்த நியாயச்சீர்ப் பெனவுலகோர் பகரமா வோர்நூ லினை; வாரேறு விரிபுவனம் வளருசத் துராசிரம மாணிமனை கான் றுற வினில், வருந்தலற மோட்ச சாதன விளக்கம்மெனு மாநூல்கண முத லியவெலாம்; பேரேறு மிசைசலந் துக்கவிகல் கெடப் பிரியமெய்ச் சுத்த ஞானப், பெயரினிச் சலராமா னந்தசுவா மிகள்கொடிய பேதமறச் சாற்றி னரோ.*



கைலாயகிரி-பிரமபீடம்

ஸ்ரீ நிஜாநந்த சுவாமிகளாதீனம் புலத்தியபுரம்-

சம்பத்கிரி. ஸ்ரீமத் அச்சுதாநந்த சுவாமிகளது

மாணாக்கரு ளொருவராகிய வல்லநகர் வித்வான்

## ஸ்ரீமான் வைத்திய லிங்கம்பிள்ளை யவர்களியற்றிய
### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

*எம்மதமே நன்மதமற் றேனை யபுன் மதங்களென்று விறுமாப் பெய்தித், தம்மதமேற் கொண்டுளிறித தட்டழிவா ருண்மெதரிந்து தலைசாய்ந் தைய, சம்மதமே யெனக்கொள்ளச் சுருதியுக்தி யநுபவங்க டமையத் தந்தா, னம்மதமே யாயபர மார்த்தநியா யத்தீர்ப்பே னலங்கொ ளாநூலே.*

*இத்தகையான் றனைநினைசக ணடைகுதுங்கேள் பசுங்குதலை யணங் குபோல்வாய், தத்தைமொழி யுமையறன்முன் றகப்புரிந்த வெழிற்காஞ்சி தவப்பே றன்று, னுத்தமமாம் பொறையறிவன் படக்கமுத லாங்குணங்கட் குறையு ளாகி, யித்தலத்தின் முத்தரெலாம் மெய்மைவனை நம்மநனி வியம்பப் பெற்றோன்.*

*பண்ணியல வியல்குலவப் பசுந்தமிழின் விழுத்தகைமை பாவி யோங்க, மண்ணியலு மெனைப்போற்கண் மனத்தவழி நெக்குருகி வாழ்த்தியெங்கள், புண்ணியமே யெனவோதிப் புரையினெறி யுறவருட்பா புனைந்து தந்த, கண்ணியவி ராமலிங்கக் கனகமெருந் தருவழியிற் கவினு மேலோன்.*

*மெய்ச்சுபுக முருகேச லாரியன்றன் கருணையினுன் விளக்க மேவி, யுச்ச முறு தொழுமபர்தமக் கிளங்குழவிக் கனையமுத மூட்டு மாபோற், சொச்ச முறு மறைமுடிவாம் பரநிலையைத் தெரிந்தறிவாந் துலங்க நாட்டு, நிச்சலரா மாநந்த னிவன்பெருமை யளந்தெடுத்து நிகழ்த்தற் பாற்றோ.*



## ஸ்ரீமான். சாமியார் குப்புசாமி அவர்களியற்றிய

### பதினைந்து சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*தருமார்த்த காமமோட் சங்களே தடையின்றித் தந்திடத் தக்க தான தரையன்றி மேலுலகுங் கீழுலகு மெந்நாளுஞ் சார்ந்துதவ மாற்று நல்ல; தருவார்த்த நறையாறு வயற்பாயக் கதிரோங்கு தருகாஞ்சி மாநகரினன், தக்கநற கல்விமுதல் யாவுமே படியாமல் சந்ததங் கவிசொல் லுவோன்; கருவார்த்த பிறப்பிறப் பாங்கடலை யறிவெனுங் கலத்தின்வழி கரை யேறினன், கண்டுகேட் டவரெலா மோட்சமெனு நியாயத்திற் கட்டுண்டு நன்மை பெறவே, பரமார்த்த நியாயத்திரப் பென்னுமோ ரரியநூல் பணித் திடுமி லக்கண முறப், பட்சமுறு நிச்சல ராமாநந் தப்பெரியோன் பகர்ந் தன னறிவா மரோ.*



செந்தமிழ்ப் புலவர்.

## ஸ்ரீமான். பொன்னுவேற்பிள்ளை யவர்களியற்றிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*சீர்பூத்த காஞ்சிநகர் வந்தத்து விதமார்சகஞ் சிறக்க வோர்ந்து*
*பேர்பூத்த வுலகினர்க்கிங் காதார மெனவென்றெணிப் பிரிய மாக*
*வேர்பூத்த புகழ்பெருகு பரமார்த்த நியாயத்திரப் பெனனை வோர்நூ*
*ஞர்பூத்த ஞானவுரு நிச்சலரா மாநந்தர் நவின்றா மாதோ.*



இந்நூலாசிரியரின் பாதசேகராகிய

## ஸ்ரீமத். கா. சொரூபாநந்தமணி அவர்கள் இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*உலகமெலா நிறைந்தொளிரு முண்மையுய ருத்தமர்க ளுளத்தி லோங் கிக், கலகமிலா வறிவாகி யறிவிற்காண் கற்பகத்தின் கனியு மாகிச், சலன முறு வடலூர்ச்சிற் சபைவாழுஞ் சின்மயனைத் தன்னுட் கண்டு, திலக மார் திருவருட்பாத் திருமுறையை யாவருக்கத் தெரித்த தீரன்.*

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*அருட்பெருஞ் சோதி யண்ணலின் கருணை யகம்புற நிறைந்துநன் மோன, குருபர னாகிக் கோதிலா வமுதைக் குவலயத் தோர்க்களித் தென் றும், மருவிலா தோங்கு மருணைச லேச மாசிலான் றிருவருட் பெருக்கால், நிருமல னாகு நிச்சல ராமா நந்தனு மென்குரு நிமலன்.*

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*பரமார்த்த மிதுவெனவே பகுத்தறியா மாந்தர் பவரோகக் கடல்கடந்து பரமபதத் தோங்கப், பரமார்த்த குரவனருட் பாதமலர் சூடிப் பாசாதி யற்றென்றும பண்பார்ந்து வாழப், பரமார்த்த மாந்தனைப் பகுத்துணர்வ தென்றும் பாதாதி கேசாந்தம் பரிபூர்ண மாக்கும், பரமார்த்த நியாயத்திர்ப் பாகுமிந்த நூலைப் பட்சமுடன் பரிந்தளித்தான் பாரோரின் புறவே.*

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*சீர்பூத்த விந்நூலைச் செப்பவரும் பிறைநகைசெயனச் செழிப்புற்றோங்குந், தார்பூத்த நகரினில்வாழ் சற்குணனுந் தவமிகுந்த தனைமணந்து, நீர்பூத்த வருந்ததியை நிகரலர்மேல் மங்கையென நிகழ்த்து மன்னுள், பேர்பூத்த பகருவர்க்கா யச்சியற்றி யளித்தவருட் பேசற் பாற்றே.*



### இந்நூலாசிரியரின் மாணாக்கருள் ஒருவராகிய
### காஞ்சிபுரம்-பிள்ளைபாளையம்.
## ஸ்ரீமான், ம. திருவேங்கட முதலியாரவர்கள்
## இயற்றிய
### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*தேயமெலாம் புகழ்கச்சி நிச்சலரா மாநந்தச செல்வர் வேத, ஞாயமெலாந் தெரிந்துணர்ந்து பரமார்த்த நியாயமென நலக்கத் தந்தார், தூயவெலாந் தரும்பிறைசைத் தவமிகுநக் கிசைந்தமனைத் துணைவிமுந்தி, நேயமுறு மலர்மேலு நல்லம்மை யச்சிட்டா ணிலவு மாதோ.*



### இந்நூலாசிரியரின் மாணாக்க ரொருவராகிய சிந்தாதிரிப்பேட்டை
## ஸ்ரீமான். சா. நிச்சலாநந்த சுவாமிகளியற்றிய
### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

*திருவோங்கி யருட்பொழியும் வள்ளலெனப் பெயர்பூண்டு செழிப்புற் றென்றும், மருவோங்கு மருணாசலேசனருட் குரவனடி மகிழப் பெற்றுக், கருவோங்கா தறுத்தெரிந்த நிச்சலரா மாநந்த கருணைக்கோமா, னுருவோங்கும் பரமார்த்த நியாயத்திர்ப் பெனுமருநூ லுரைத்திட் டானல்.*



*சென்னை-சமரச ஞான சங்கத் தங்கத்தினரும்*

*வித்வான் கன்னிபுத்தூர்.*

ஸ்ரீமத்-வேலாயுதமுதலியார் குமாரருமாகிய

## ஸ்ரீமான். வேதாசல முதலியார்

### இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*திரமார்த்த நற்பொருணீ யதுவென்னுந் தெளிஞானத் திணித றன்னை, யுரமார்த்த சீவர்களிந் நசைப்பிறவிப் பிணியதனை யொருவி மேவப், பரமார்த்த நியாயத்திரப் பென்னுமொரு பெயர்புதுக்கிப் பரிவிற் றந்த, வரமார்த்த கசிலரு நிசசலரா மாநந்தன் வண்மை நன்றே.*



*வித்வான் ஸ்ரீமத். ஆ. மே. சென்னகேசவுலு நாயுடவர்கள்*

*மாணவருள் ஒருவருமா தமிழுபாத்தியாயர்*

ஸ்ரீமத். கோ-பாதூர்பிள்ளையவர்கள்குமாரருமாகிய

## ஸ்ரீமான். கோ. பா. தங்கவேலுபிள்ளையவர்கள்

### இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*வரும்பிறவிக் கடன்மூழ்கி வலியவினை சுழல்பட்டு வகுக்கு நோய்ப் பண், ணரும்பசியிந் திரியமெனு மகரநுங்க வணங்குறுமா னிடரை மோக்கப், பெருங்கரைசக ணடைவிக்கும் வங்கமிரா மாநந்தப் பேரான் சீர்மை, பொருந்தநுவல் பரமார்த்த நியாயதீப மென்னுமொரு புதிய நூலே.*



பொதிகை மலைச்சித்தர் பொன்னடிக்காளாகிய

ஞானாநந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ ல. நாராயண தேசிகரின்

*பிரதம மாணவகராகிய*

## ஸ்ரீமத்-பு. ஜயராமப்பிள்ளையவர்கள்

### இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*வேதமுத லாகமபு ராணமிதி காசமதன் விவரங் கண்டு*
*வதமுறு வகையருளுஞ் சுகர்முதலா மெதிகளுக்கு மிணையா யுற்ற*
*நீதமுறு மிராமலிங்க வள்ளல்புக ழெஞ்ஞான்று நிலையுற் றோங்கப்*
*பாதலத்தி லெம்மதமுஞ் சம்மதமாயப் படித்து பயன் பயக்கு மாறு.*

சீருற்ற ஞானவருட் பிரகாச வள்ளலடி சேர்ந்து மேலாம்
பேருற்ற நிச்சலரா மாநந்த சுவாமியெனும பெரியோன் றேர்ந்த
ஏருற்ற சுகபோக மெவ்வுயிரு மெளிதிற்கண் டின்ப மெய்த
நாருற்ற பரமார்த்த நியாயத்தீர்ப் பெனுநூலை நவின்றான் மாதோ.



ஜாகிர் ஆரணி நோட்டம் வித்வத் சிரோமணி

## பிரஹ்மஸ்ரீ செல்லகுட்டி யாசாரியா ரவர்களியற்றிய

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பார்புகழுங் கச்சிநகர் வந்துதித்த நிச்சலரா மாநந்தப் பரமயோகி, நார்திகழு மன்பதைக ளெவரேனு நாளுமன நண்ணியிதை நன்கு கற்றின், ஏர்திகழு முண்மைநெறி கடைப்பிடித்திங் கீறினிலை யீதெனவே யென்றும் வாழ்வார். சீர்திகழும் பரமார்த்த நியாயத்தீர்ப் பினிதியற்றித் தந்ததற் கென் செப்ப லாமே.



# அநுக்ரமணிகை.







# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 2 | மாகான்கள் | மகான்கள். |
| " | 30 | தீர்வை | தீர்ப்பை |
| 6 | 26 | யோகு | யொகு. |
| 7 | 11 | விதங்ளாக | விசங்களாக. |
| " | 12 | லட்க்ஷணங் | லக்ஷணங். |
| " | 13 | சோர்டாராகிய | கோர்ட்டாராகிய |
| 8 | 11 | வர்ணாசிராமா | வர்ணாசிரமா. |
| " | 15 | பிரகாரங் | பிராகாரங். |
| " | 23 | மாரரம: | மாராம: |
| 10 | 2 | சர்வஞத்வாதி | சர்வஞ்ஞத்வாதி. |
| 15 | 5 | கோரபுத்தி | கோரமூடபுத்தி. |
| " | 15 | மென்டும் | மெண்டும். |
| 16 | 16 | தாஞதம | தஞ்தம. |
| 19 | 18 | ஜிராக்கிய | ஜிராகிய. |
| 20 | 26 | [illegible] | [illegible] |
| " | " | [illegible] | [illegible] |
| 23 | 17 | தலாலும் | காலும் |
| 25 | 25 | [illegible] | [illegible] |
| " | " | [illegible] | [illegible] |
| " | 26 | [illegible] | [illegible] |
| " | 31 | [illegible] | [illegible] |
| 36 | 19 | பிருத்யஸ்த | பிருத்யஸ்ய |
| 27 | 21 | சத்குனி | சத்குணி |
| 29 | 19 | ஸத்நபார | ஸ்தநபார |
| " | 29 | [illegible] | [illegible] |
| " | " | [illegible] | [illegible] |
| 30 | 3 | ஸதிரீயை | ஸ்திரீயை |
| " | 4 | சகத்தைதக | சகத்தை |
| " | 12 | மாதீ | மாதி |
| " | 30 | செய்தொலெண | செய்த்தோரென் |
| 32 | 29 | ஜயாந்தி | ஜயதி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 28 | [illegible] | [illegible] |
| 35 | 31 | [illegible] | [illegible] |
| ,, | 32 | [illegible] | [illegible] |
| 36 | 15 | குருடன் | குடருண் |
| 37 | 22 | யனேகமாகப் | யனேகமாகக் |
| ,, | 25 | கோர்டார் | கோர்ட்டார் |
| ,, | 27 | புத்திரோகை | புகிரோடனே |
| ,, | 28 | சர்பங்களினுல் | சர்ப்பங்களினுல் |
| 38 | 22 | எச | எஷ |
| 39 | 15 | றெச்சரிகை | றெச்சரிக்கை |
| 41 | 27 | [illegible] | [illegible] |
| ,, | 28 | [illegible] | [illegible] |
| ,, | 30 | [illegible] | [illegible] |
| ,, | 31 | [illegible] | [illegible] |
| 42 | 4 | [illegible] | ஸாஷி |
| ,, | ,, | தேசோஹ | தேஹோஹ |
| ,, | 11 | ப்ரீதி | ப்ரீதி |
| ,, | 12 | ப்ரீதி | ப்ரீதி |
| ,, | 27 | [illegible] | [illegible] |
| 43 | 9 | நியக்ஸவ | நியதஸ்வ |
| ,, | 31 | [illegible] | [illegible] |
| ,, | ,, | [illegible] | [illegible] |
| 44 | 25 | [illegible] | [illegible] |
| ,, | 28 | [illegible] | [illegible] |
| ,, | 29 | [illegible] | [illegible] |
| 45 | 15 | நீராலம | நிராலம் |
| ,, | 16 | சரணம்முபம்ய | சரணமுபகம்ய |
| ,, | 18 | ப்ரஹ்மைவாஹ | ப்ரஹ்மைவாஹ |
| ,, | 35 | [illegible] | [illegible] |
| 46 | 9 | ஞப்தி | ஜ்ஞப்தி |
| ,, | 11 | பூஜார்க்க | பூஜார்க |
| 47 | 7 | சாட்ஷி | சாட்ஷி |
| 48 | 5 | ட்ராஞ்ஞே | ப்ராஞ்ஞே |
| ,, | 27 | [illegible] | [illegible] |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 87 | 13 | கர்த திருசதுத்வாதி | கர்த திருதவாதி |
| ,, | 16 | ருதுசவாதி | ருத்வாதி |
| ,, | 27 | கருத் | கருதது |
| 89 | 21 | வாசனு | வசனு |
| 99 | 29 | சண்டனே | தண்டனே |
| 102 | 26 | சபூவவ | சமுவுவ |
| 104 | 15 | ன்றது | கின்றது |
| 106 | 7 | யாலெ | யாலே |
| 107 | 8 | சநதந | சதத |
| ,, | 16 | வேததி | வேததிவேததி |
| ,, | 24 | நஸ்பருயாசேத | நளப்ருசேத |
| 111 | 26 | மிருவனைகச கநத | ரிருவனைகக வெகந்த |
| 115 | 21 | மர்தயார் | மாதயர் |
| 116 | 17 | மெயபநா | மெயழநா |
| ,, | 20 | சோமவட | சோமவட் |
| 125 | 4 | ராபலத | மாபலத |
| 126 | 34 | மயமாகிய | மயமாகி |
| 127 | 5 | பன்றி | யன்றி |
| ,, | 6 | இலபபபடுதல | ஆலயபபடுதல் |
| 128 | 17 | வர்ன் | வற்வின |
| ,, | 23 | பகததில | பததில |
| 131 | 29 | [illegible] | [illegible] |
| . | 31 | ஜோயரீ | ஜோஹரீ |
| 133 | 19 | பெயருடைதா | பெயருடையதாய |
| 136 | 13 | வசிப்பவா | வசிப்பா |
| 142 | 10 | சன்மூதநிரை | சிணமுதநிரை |
| 145 | 18 | கூறிறா | கூறி |
| ,, | 29 | சிததாதத | சிததாநத |
| ,, | 3 | சககிரவாததித | சககிரவாததி |
| 150 | 2 | மெயணடு | மெமணடு |
| 155 | 8 | சாததிய | சத்திய |
| ,, | 17 | ஸோயாமஸசதவட | ஸோஹம்சஸத்வட |
| 157 | 26 | ஸிரிஹா | ஸிஸிஹா |
| 164 | 5 | பராப்தவயப் | ப்ராபதவயம |
| ,, | 11 | ஸ-டுகம் | ஸ—கம் |




# பரமார்த்த நியாயத் தீர்ப்பு.



## பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

ஆரணங்கள் போற்றவொளி ரற்புதனை யெப்பொருட்குங்
காரணனாய் நின்றான்றாட் காப்பு.

அகர மாயுல காதியா யற்றென்றும்
பகரொ ணாதருட் பான்மைபெற் றேவளர்
சிகர நிட்கள தேசோம யத்தனை
நிகரி லாதரன் னெஞ்சி னிறுத்துவாம்.

சீர்மலி யுலக மெல்லாந் திகழ்சுயஞ் சோதி யாவ
னேர்மலி மறைய னந்த மியம்புமா புருடன் யாவன்
பேர்மலி யகில நாமம் பெற்றெது மாகான் யாவ
னேர்மலி யவன்றா ணெஞ்சி னினையாம னினைதல் செய்வாம்

பகலவ னிருள்க டிந்த பான்மைபோன் ஞான மோனப்
பகலவன் குருவாய்ச் செய்த பரமார்த்த நியாயத் தீர்ப்பைச்
சகலரு மறிந்தா நந்தஞ் சாருமா றிங்கியா னோதை
வகலங்க சொரூப னாகு மண்ணலை யகத்துட் கொள்வாம்.

### மாகான்கள் வணக்கம்.

சுகர்ரிபு வாமதேவர் துருவாசர் வசிட்ட ராதி
யிகமதிற் பிரம ஞான மெய்தினோ ரடிகள் வாழ்த்திப்
புகல்பவக் கடல்க டத்தும் புணையென மக்க ளுக்குத்
திகழ்பர மார்த்த நியாயத் தீர்ப்பினைத் தெளிவிப் பாமால்.

### பரம குருஸ்துதி.

உத்தர ஞான சித்தி புரந்தனை யுகந்தெஞ் ஞான்றுஞ்
சித்திர விளக்கி தென்னத் திகழ்நிரு விகற்ப மெய்திச்
சத்திய ஞான நந்தந் தாவருட் பாவு மீந்த
முத்தன்ஸ்ரீ ராம லிங்க முதல்வன்ற டுதித்து வாழ்வாம்.

### சற்குருஸ்துதி.

புருடார்த்தம் பலவாய் மாந்தர் புகல்பேதந் தமக்கெட் டாது
புருடார்த்த மெவைக்கு முன்னாப் பொலிபரி பூர்ண மோனப்
புருடார்த்தப் பொருணீ யென்று புகலருணாச லேச
புருடோத்த மன்றாள் சென்னிப் பொலிந்திடப் போற்றி செய்வாம்.

### ஆக்கியோன் மரபு.

அச்சுத னகண்ட மோன வருட்பிர காச வள்ள
லிச்சித மரபில் வந்திங் கொளிரரு ணாச லேச
னச்சமில் லாம லென்று மநுக்ரகஞ் செய்யப் பெற்ற
நிச்சல ராமா நந்த னிகழ்த்தினா னியாயத் தீர்ப்பே.

### இந்நூற்கு முதனூ லிதுவெனல்.

அகத்திரு ளகல வன்பர்க் கத்வைதா நந்த மீந்த
சகத்குரு பகவத் பாத சங்கரா சாரி யாசான்
வகுத்தருள் தசகந் தன்னில் வழங்கிய விவேகத் தீர்ப்பைச்
சகத்தினி னியாயத் தீர்ப்பாய்ச் சாற்றினா ரனந்த மேலோர்.

முன்னவர் கருணை யாலே மொழிந்தவே தாந்த சார
மின்னிய தீர்ப்பிற் றன்னை விசாரித்தும் விளங்கா தார்க்குத்
தன்னிக ரில்லா தோங்குஞ் சற்குரு தயவா லெற்குச்
சொன்னதோ ருத்திக் கொண்டு சொல்கின்றேன் நியாயத் தீர்பை

## இந்நூற் பெயர்க் காரணம்.

பரமார்த்த மெனப்பி ணங்கும் பலபேத மதத்தர் கொள்கை
பரமார்த்த மன்று மோனப் பண்புபெற் றெங்கு மோங்கும்
பரமார்த்த மதுநீ யென்று பண்ணுமிந் நூற்கு நாமம்
பரமார்த்த நியாயத் தீர்ப்பாய்ப் பகர்வர்நல் லறிவின் மிக்கார்.

## இந்நூற் பயன்.

தரையாதி யுலக மெல்லாந் தனிச்செங்கோல் செலுத்து கின்ற
குருவாகுங் கோமான் வந்து கொலுவமர்ந் திருந்து நோக்கி
வெருவாம லுலகோர்க் குண்மை விளங்குமா றுகச் செய்த
பரமார்த்த நியாயத் தீர்ப்பைப் பகருவ னுலகின் மாதோ.

மருளினன் மயங்கி நாநா மதவாத மேற்றுப் பேத
விருளிலே தியங்கி வாடு மேழைமா னுடர்க டாமும்
பொருளினை வழக்காற் காணப் புகல்பர மார்த்தத் தீர்ப்பைத்
தெருளினு ளுணரின் மௌனச் சித்திபெற் றுய்வர் தாமே.

## இந்நூற்கதிகாரி இவரெனல்.

சாதன நான்கு நன்றாய்ச் சாதித்த வதிகா ரிக்குப்
போதமுன் வடிவ மென்னிற் பூரணப் பொருடா னுவன்
வேதனை மனத்தி னோர்க்கு விளங்கிடா விந்நூன் மாட்சி
சாதன முடையோர் காணிற் றனைக்கண்டு தன்ப ராவார்.

## அவையடக்கம்.

பன்னிய பரமா னந்த பரமார்த்த நியாயத் தீர்ப்பைத்
தனையே சிவமாயக் கண்ட தலைவர்முன் கல்லே னோதல்
பொன்னின்முன் காக்கைப் பொன்னு பொலிவது போலும் பானு
முன்னர்மின் மினிதான் விண்ணில் மெய்யொளிகாட்டல் போலும்.

ஆயினும் ப்ரஹ்மமே வாக வர்த்தமாய் நின்ற மேலோர்
தாயினு மெளிய ராகிச் சாற்றிய முதனூற் கொண்டு
சேயனே னவழி நூலாகச் செப்புமிந் நியாயத் தீர்ப்பைத்
தீபன மில்லா னேயஞ் செறிதலாற் கொள்வர் மேலோர்.

பாயிரம் முற்றிற்று.





# பரமார்த்த நியாயத் தீர்ப்பு.



## நூலாரம்பம்.

### கலிவிருத்தம்.

கங்கை யாருங் கடல்வளை வையக
மெங்கு நானென் றிருக்கு மறிவினைத்
தங்கு ளக்கணுற் சார்ந்தறி யாதவர்
சங்கை மாறவித் தீர்ப்பினைச் சாற்றுவாம்.

ஸ்ரீ மதகண்டைக்கிய ரஸாமிர்த மாயும், அத்புதா நந்தப பெரும்போகச் செல்வமாயும், நிட்கள நிதசோமயமாயும், ஆதி மத்தியாந்த ரகிதமாயும், * "ஏகமே வாத்விதீயம் பிரஹ்ம"என்ற வாறு சுஜாதி பேதமற்றதாயும், † "ப்ரஹ்மமாத்ர மஸந்நஹி நி" என்றவாறு விஜாதிபேதமற்றதாயும், ‡ "நசட்சர் நசோத்ரமபாணி பாதம்" என்றவாறு சுவகத பேதரகிதமாயும், சுயம்பிரகாசமாகிய தனது தேஜஸினால் அநேக சூரிய சந்திராக்கினிகளின் காந்திகளைத் திரஸ்கரிப்பதாயும், இருக்காதி சதுர்வேதங்களாலும், அவ்வேதாங்கங்களாய சட்சாஸ்திரங்களாலும், பிரமாண்டாதி பதினெட்டாதச புராணங்களாலும், பாரதாதி யிதிகாசங்களாலும், காமிகாதி யிருபத்தெட்டாகமங்களாலும் அறிதற்கரியதாயும், பகுவித ப்ரஹ்மக்ஷத்திரிய வைசிய சூத்திராதி வர்ணங்களும், அவற்றிற் கியைந்த தருமா நுட்டானகருமங்களும், சத்துவாதி குணத்திரயங்களும், இராமகிருஷ்ணாதி நாமங்களும், மச்ச கூர்ம வாரகாதி அவதாரங்களும், சட்பாவ விகாரங்களும், சட்வித சக்திகளு மற்றதாயும், பிரமேந்திராதி தேவர்களும் அசுரர்களும், அநந்தாதி சர்ப்பங்களும், கருடகந்தர்வ கிந்நர கிம்புருஷ சித்த சாத்திய வித்தியாதர சாரண

---

* 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, † 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌅𑌸𑌨𑍍𑌨𑌹𑌿,
‡ 𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌨𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂.

அப்சரசயட்சர் முதலியோர்களும், சூரிய சந்திராதி கிரகங்களும், நாரதாதி தேவரிஷிகளும், சநகசநந்தனாதி ப்ரஹ்மரிஷிகளும், கபிலதத்தாத்ரேயாதி யோகீஸ்வரர்களும், அகஸ்தியாதி முனீஸ்வரர்களும், கோவிந்த பகவத்பாத ஸ்ரீசங்கராசாரியாதி யதீஸ்வரர்களும், வால்மீகாதி கவீஸ்வரர்களும், மற்றையவர்களும் சேவிப்பதாயும், காலத்திரயத்திலும் நசியாததாயும், பிரகிருதி குணங்களும், சங்கல்ப விகல்பங்களும், ஜனனாதி விகாரங்களும், தேவநர பசுபட்சி ஜலசராதி வடிவங்களு மற்றதாயும், சாதனாந்தரங்களின்றி ஓரேபடித்தாய் விளங்குவதாயும், சிரவணாதிசதுர்த்தச விடயங்க ளற்றதாயும், கேட்பதற்கும், தரிசிப்பதற்கும், தியானிப்பதற்கும், புகழ்வதற்கும் சாத்திய மாகாததாயும், இவ்வள வவ்வளவென்று பிரமாணங்களால் பிரமாணிக்கத் தகாததாயும், ஆகாயம்போலச் சூட்சுமமாய் வியாபகமாய் அசங்கமாயிருப்பதாயும், சாக்கிராதி பஞ்சாவஸ்தைகட்கு மப்பாற்பட்டதாயும், சத்தியஞானானந்த பரப்ரஹ்மமாயும் விளங்கும் நானெனும் பரமார்த்த தத்துவம் அஞ்ஞானியின் புத்திரர்களாகிய பாமரன் கர்ம்மி மூடபக்த னென்பவர்களால் அபகரிக்கப்பட்டுப் போயினமையின், காலாதீதமா யநாதி யவித்தியாந்த காரத்திலகப்பட்டுள்ள ஜீவர்கள் தமது நிஜவடிவை மறந்து அநந்த ஜன்மங்களெடுத்து அளவிலாத் துன்பங்களை யடைந்து, புத்தி பூர்வகமாகவோ அபுத்தி பூர்வகமாகவோ செய்த சத்கர்ம புண்ணிய பரிபாக விசேடத்தினுல் மானிடஜன்மமெடுத்து, அநந்த ஜன்மங்களோடும் செய்துவந்த நிஷ்காம சத்கர்ம புண்ணிய பரிபாக மேலீட்டால் சித்தசுத்தி முதலிய நற்குணங்கள் முதிர்ந்து விவேகியாகி விசித்திர மாயாவினோத ஜாலமாய் விளங்கும் தனு கரண புவன போகங்க ளனைத்துஞ் சொப்பனப் பொருள், வந்தியாபுத்திரன், கானல்நீர், இப்பியில் வெள்ளி, கட்டையிற் கள்வன், இரச்சு சர்ப்பம் முதலிய கற்பனைபோன்று விசார முகத்திற் கற்பனையாயுள்ளபடியால் இவை யாவும் அநித்தியமென்று நீக்கி, நித்தியமாய் விளங்கும் பேரின்ப வீடாகிய பரம புருடார்த்தத்தை யடைவதே ஜன்ம மெடுத்ததற்குப் பிரயோசனமென்று அதிகாரி புருஷனொருவ னறிந்து, ஒரு வீடு நாற்புறமு மக்கினிபற்றிவேக அதனடுவிலகப்பட்ட ஒருவன் ஜலத்தைத் தேடித் தவிப்பது போன்று தாபத்திரயத்தினுல் வெம்பிச் சகிக்கமாட்டாது ஆத்மஞான தீர்த்தத்திற் படிந்து நிரதிசயானந்த மடையக்கருதி, கான

வர் வலையிலகப்பட்டுத் தெய்வகதியாக விடுபட் டோடுகின்ற மானைப்போன்று மனைவி மக்க ளர்த்தமென்னு மீடணையாகிய பந்தபாசமற்று, ஏகனாய்ச்சென்று, தனது மாயாஜன்னிய துக்க நாச நிமித்தம் ஆத்மார்த்தமாகிய பரமார்த்த சொத்தை நமது சுவாதீனமாக்குவார் யார்? நம்மைப்போல யாவரும் அதனை யநு பவிக்கச்செய்வார்யார்? என்று கருதி, பரமார்த்த சொருப ஆத்தும ஞான சோராதுக்க நிவாரணமாகுமாறு நானென்னு மாத்மார்த் தத்தைப் பிரதிவாதிகளாய பாமரன்முதலியோரிடத்திருந்து வாங் கிக்கொடுத்துக் காக்கும் அதிகாரியைப்பற்றி நெடுநேரம் நின்று லோசித்து பிறகு,

" கனைத்தவெண் டிரையெழுங் கதிர்க்க ரங்களா
லனைத்திலும் வியாபக மான தன்மைபோன்
மனத்தினிற் றாதரான் மதியுள் ளோர்கட
நினைப்பினை யுணர்பவ னிருப னாகுமே".

" காரண மிலாதமே தோர் களிப்புக் கோபங்கள்
சாரொரு நியாவையுந் தான றிந்துபி
னோருறு மூதியம் விரய நித்தமுந்
தேருற விசாரணை செய்ய வேண்டுமால்".

" படையினி னீதியின் மதுரப் பாடையிற்
கொடையினி லிணையிலாக் கொள்கை வேண்டுமாற்
றடையிலா வேலையிற் சதுரு பாயத்தி
னடையலர் செயிப்பவ னரச சிங்கமே". என்று பாரதமும்,

"குடிபடையி லபிமான மந்திரா லோசனை குறிப்பறிதல் சத் திய வசனங்—கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொறை கோடாத சதுரு பாயம், படிவிசா ரணையோடு ப்ரதானிதள கர்த்தரைப் பண்பறிந் தேய மைத்தல்—பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்கு நிகரென்றே பறித்தல்குற் றங்கள் களைதல், நுடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை சுகுணமொடு கல்வி யறிவு— தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு துஷ்டநிக்கிரக சௌரி யம், வடிவுபெறு செங்கோ னடத்திவரு மாசர்க்கு வழுவாத முறைமை யிதுகாண்," என்று ஆன்றோர் வாக்கியமும், கூறுமாறு அவ்வதிகாரி வாதிகள் கொண்டு வந்த பிரியாதுகளையும், தாவா சொத்துக்களையும், பிரதிவாதிகளையும், உபயக் கட்சிக்காரர்களை

சேர்ந்த சாட்சிகளையும், தஸ்தா வேஜுகளையும் கண்ணுற்று நன்றாய் விசாரித்துத் தீர்மானிப்பதற்கு மிகுந்த சமர்த்தனா யிருக்க வேண்டும். சமர்த்தனா யிருந்த போதிலும் அவன் இலஞ்சம் வாங்காதவனாயும், சத்திய பாஷாமிர்தனாயும். நிஷ்பட்ச பாதியாயும், அதிசூட்சம புத்தி யுக்தனாயும், பரமதயாளுவாயும், துட்ட நிக்ரக சிட்டபரிபாலனாயும், சர்வாபிமான ரகிதனாயும், சாந்த மூர்த்தியாயும்,வேதாந்த விசாரனாயும்,சமரச சுபாவனாயும், விதரண சாலியாயுமிருக்க வேண்டும்; அவ்வாறில்லாத பட்சத்தில் நம்மைப்போன்று மிகுந்த வேழைகளாகிய முமுட்சுக்களுக்கு அணுவளவேனும் நியாயங் கிடைக்காதென்று பற்பல விதங்ளாக யோசித்துத்தெரிந்தவர்களுடன் கலந்து தீர்க்கமாய் விசாரித்துச் சர்வ லட்க்ஷணங்களுமமைந்த பரமார்த்த நியாயத்தீர்ப்புக்கோர்ட்டாராகிய ஸ்ரீசற்குரு ப்ரபு சக்கிரவர்த்தி யென்னும் நியாயாதிபதி(ஜட்ஜி) அவர்கள் சன்னிதானத்தில் தனக்கு நியாயங் கிடைக்குமென்று தெளிந்து சச்சிதாநந்த பரப்ரஹ்மமாய் விளங்கும் பரமார்த்த சொத்தை யாவரும் தடையின்றி எக்காலமும் நிராங்காரமா யநுபவிக்குமாறு தாவாகொண்டு வருவதற்குப் பிரயத்தனஞ் செய்து, நாம் செய்யப் போகின்ற வியாஜ்யப் பொருள் வாக்கினால் வசனிப்பதற்கும், மனத்தினா லெண்ணுவதற்கும், அறிவினா லளப்பதற்கும் முடிவுறாதாயிருப்பது; அவ்வாறிருந்த போதிலும் பிரகிருதத்தில் கோர்ட்டா ரவர்களுக்குச் சங்கதியைச் சுருக்கமாய்ச் சொல்லுவதற் கேனுமொரு வகீல் வேண்டுமென் றாகித்து அதுபற்றிப் பரமார்த்தநியாயத் தீர்ப்புக் கோர்ட்டில் மிக வழுக்கமாய்க்கேசுகளைப் பிடித்துச் சட்டத்தி னுள்ள லாப்பிரகாரம் வாதாடித் தாம்பிடித்த வழக்குகளை ஜயித்து வருகிற அதிசூட்சும கிராக்ய சாக்ஷீகாம்ச புத்தியென்னும் வகீலவர்களைக் கண்டு வணங்கி, உமது சகாயமின்றித் தலையெடுப்பதரிதாயிருக்கிறதென்று தனது குறைகளைச் சொல்லி, உபநிடதமாதி ரிகார்ட்டுக்களை விரித்துத் தனக்குள்ள சம்பந்தங்களை யெடுத்து காட்டி, எனக்கு வகீலாயமர்ந்து "ஏகமேவாத்வி தீயம்" என்பதை நிலைநாட்ட வேண்டுமென்று பன்முறை பணிந்து வேண்டிக் கொண்டான். வகீலவர்கள் அன்பென்னும் பொருளை அட்வான்சாக அவனிடத்திற் பெற்றுகொண்டு வகாலத்துப் பத்திரத்தில் கையெழுத்து வாங்கிக் கொண்டு பிரியா தர்ஜி தயார்செய்ய வாரம்பித்தனர்.



## நியாயாதிபதி கொலுவமருந் தல மலங்கரித்தல்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆரண முடிவா யொன்று யகண்டமா யளவி லாத
பூரணப் பொருளு நாவாய்ப் புகல்பேத சமயி கட்குக்
காரணப் பொருடா னென்று கனமுடன் றீர்ப்ப ளிக்குஞ்
சீரணி நியாயத் தானஞ் செழிப்புட னலங்க ரிப்பாம்.

அகிலாண்டகோடி புவனங்களுக்கு மத்தியில் வேதாந்த சித்தாந்த நாதாந்த மாதி வீதிகளும், விஷயேந்திரியாதி யாய பற்பல கடைத் தெருவுகளும், தேகாத்ம புத்தி வர்ணாசிரமாசார நிருணய தருமங்க ளென்னும் ரத கஜ துரக பதாதி சதுரங்க சேனைகளும், திருசிய தர்சன ராகங்க ளென்னும் ஸ்ரீ புருஷர்களும், கூடி விளங்கும் பிரமாநந்த ராச்சியத்தில், காயாபுரி யென்னும் பட்டணத்தில் அவ்வியக்தம், மகத்தத்துவம், பஞ்சதன்மாத்திரைகளென்னும் சப்தப் பிரகாரங்களும் ஆகாயத்தையளாவியோங்க, இகபரபோக விரக்தியும், உபரதியும், நிச்சல சித்தமும், தீவிரமோட்சாபேக்ஷயு மென்னும்திவ்வியதலங்களில் முளைத்து, நிரதிசயாநந்த ஜலத்திலுல் நனைந்து, விருத்தியாகி நிர்மலநிச்சலாதி மொக்குக ளோடுங்கூடி, பலா பேட்சையற்று, † "அக்னி ஹோத்ரம் தபஸ் ஸத்யம் வேதா நாம் சா நுபாலனம், ஆதித்யம் வைஸ்வதே வஞ்ச இஷ்ட மித்ய பிதீயதே !! வாபீகூப தடாகாதி தேவதாயத நாநிச, அந்நப்ரதான மாராமஃ பூர்ண மித்யபி தீயதே" என்றவாறு நித்திய நைமித்ய காதி கர்மங்களும், தேவதாந்தர மந்தரோபாசனைகளும், பாகஹவிஸ் ஸோமமுதலியயக்கியங்களும், இயம நியமாசனப் பிராணாயாம பிரத்தியாகார தாரண தியான சமாதிக ளென்னும் அட்டாங்கங்களோடு கூடிய மந்திர லய ஹட

---

† "𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌂 𑌤𑌪𑌸𑌸𑍍𑌤𑍍𑌯𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 𑌚𑌾𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌂।
𑌆𑌤𑌿𑌥𑍍𑌯𑌂 𑌵𑍈𑌶𑍍𑌵𑌦𑍇𑌵𑌂 𑌚 𑌇𑌷𑍍𑌟𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥
𑌵𑌾𑌪𑍀𑌕𑍂𑌪𑌤𑌡𑌾𑌗𑌾𑌦𑌿 𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌤𑌨𑌾𑌨𑌿 𑌚।
𑌅𑌨𑍍𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌮𑌾𑌰𑌾𑌮𑌃 𑌪𑍂𑌰𑍍𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇॥

இராஜ யோகங்களும், காயத்திரி பஞ்ச தசாட்சரி சோடசி முதலிய மந்திர ஜபங்களும், கிருச்சிர சாந்திராயணாதி தபசுகளும், உள்ளும் புறம்புஞ் சுத்தமாகிய சத்திய மொழிகளும், ஜீவகாருண்ணியமாதி சீலங்களும், ப்ரஹ்ம சரியாதி விரதங்களும், அந்நதானமாதி சர்வ தானங்களுஞ் சேர்ந்து விளங்கும் பலஜாதி விருட்சங்கள் கூடிய உத்தியான வனங்களும், தர்க்கம் வியாகரணம் வேதாந்த முதலிய சட்சாஸ்திரங்களாதி சுகந்த புஷ்பங்களும், வேத முடிவாய் விளங்கும் நூற்றெட் டுபநிடதங்களும், சரியை, கிரியை, யோகம், ஞானம், கர்ம்மம், கர்த்துரு, மூர்த்தி, அமூர்த்தி, சிவமஹா சாதாக்கிய முதலியவற்றி னர்த்தங்களைத் தெளிவிக்கும் வாக்கியங்களாய கற்பக விருட்சங்களும், பாகியாந்தர சவிகல்ப நிருவிகல்ப சட்சமாதிக ளென்னும் மாட மாளிகைகளும், மோட்ச மென்கிற பொக்கிஷக் கிடங்குகளும், சாவந்திற்கு மேலாகிய பிரஹ்மநிட்டையிற் பெருகிய நிரதிசயானந்த ஜலத்தினாற் பரிசுத்தமாகிய விருதயத்தின் கண்ணமைந்த விருத்தி ஞானமென்னுந் தலைவாசல்களும், சாந்த சமதமாதி சட்குணங்களும், கருணை முதிதை மைத்திரியாதி குணங்க ளென்னும் இரத்தினமாவா விட்ட கோலங்களும், குருபத்தி விசுவாசம் சிரவண மநந நிதித்யாசன சமாதிகளும், அவற்றுள் நிரந்தரமாகச் சிந்தனை செய்கின்ற ப்ரஹ்மைவாஹம், ப்ரஹ்மாஸ்மி, ஹம்ஸோஹம், அச்சுதோஹம் அநந்தோஹம், சிவோஹம் முதலிய படிகளும், ஞான விஞ்ஞான மென்னும் இராஜ வீதிகளும், பஞ்சாட்சரி, அஷ்டாக்ஷரி முதலிய சப்தகோடி மஹாமந்திரங்களென்னும் மாணிக்கத் தோரணங்களுமமையக் கட்டி, மஹாஉன்னதமா யலங்கரிக்கப் பட்டு, க்ஷிணிக்ஷிணி முதலிய தசவிதப் பிரணவ நாதங்க ளென்னும் மங்களவாத்தியங்கள் அண்டமதிரு மாறு கோஷிக்க விளங்கும் நவத்துவார விசித்திர கோட்டையின் கண், வேதாந்தோசித பரமார்த்த நியாயத் தீர்ப்புக் கோட்டில், இரகசியார்த்த மணிமய சிதாகாசப் பிரணவ மண்டபாந்தரான கர்ப்பக் கிருகத்தில், சுத்த ஓங்கார தூரிய மென்னும் ஸ்திர சிங்காதனத்தின் கண்ணே, ஆதிமத்யாந்த ரகிதராகியும், சுஜாதி விஜாதி சுவகதபேத சூனியராயும், அனந்த கோடி சூரிய சந்திராக்கினிகளி னொளிமழுங்கச் செய்யுஞ் சொப்பிரகாசராயும், அகண்ட பரிபூரண நித்திய நிர்மல நிர்க்குண நிருவிகல்ப நிரஞ்சன நிர்விகார நிர்விஷயா தீந்திரிய அவாங்மானச கோசர அநாமய அப்பிரமேய சுத்த புத்த முக்த கேவல அசிந

திய அசல அசங்கசர்வசாட்சி சர்வஞத்வாதி அகணிதசமக்ர சுகுண பரிக்ரகராயும், சத்தியஞாநாநந்த சர்வவியாபக சோதிர்மயசொரூபராயும், ஆத்மநாயகி சமேதராகியும், "சருகுசல பட்சணிக ளொருகோடி யல்லாற் சருகோரபட்சிகள்போலவே - தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத தன்மைய ரனந்த கோடி, யிருவினைகளற்றிரவு பகலென்ப தறியாத வேகாந்த மோன ஞான-வின்பநிட்டை யர்கோடி மணிமந்த்ர சித்திநிலை யெய்தினர்கள் கோடிசூழக், குருமணி யிழைத்திட்ட சிங்காத னத்தின்மிசைகொலுவீற்றிருக்கு நின்னை" என்றவாறு சுகவாமதேவப்பிருங்கி நாரத மார்க்கண்டேய சநகசநந்தன சநத்குமார சநகாதி முனிபுங்கவர்கள் ஜூரியர்களெனப் புடைசூழச் சபாலங்கார ராயும், சமானரகித ராயும், சர்வலோகங் களையும் ஏகசக்கிராதி பதியாயாளுஞ் சற்குரு ப்ரபு சக்கிரவர்த்தி யென்னும் நியாயாதிபதி (ஜட்ஜி) அவர்கள் கொலுவமர்ந்திருக்கும் சமயத்தில், தாபத்திரயத்தால் துன்புறும் முமுட்சுவாகிய ஜீவன் சூட்சுமக்கிராகிய சாத்துவீகாம்ச புத்தி யென்னும் வகீல் முகாந்திரமாய்ப் பிரியாதர்ஜி தாக்கல் செய்வானானான்.



## பிரியாதர்ஜி தாக்கல் செய்தல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உத்தம முமுட்சு வென்ன வொளிர்வாதி யாலோ சித்துப்
பத்தியா நியாயத் தானப் பதியெனக் கோலுவ மர்ந்த
சத்திய குரவன் முன்னர்த் தகைசாத்வீ காம்ச புத்தி
பேத்தநல் வகீலைக் கோண்டு பிரியாது செய்ய லுற்றான்.

" கானகமி லங்குபுலி பசுவொடு குலாவுநின் கண்காண மதயானை நீ - கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய கட்டைமிக வேந்தி வருமே, மோனக மமைந்ததென வக்காம தேனுநின் பொன்னடியி னின்று சொலுமே - புவிராசர் கவிராசர் தவராசரென் றுனைப் போற்றிசய போற்றி யென்பார், ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே நவநாத சித்தர் களுமுன் - னட்பினை விருப்புவார் சுகவாம தேவர்முதன் ஞானிகளு முனை மெச்சுவார், வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன் மகிமையது சொல்ல வெளிதோ - மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேஞான மரபில்வரு மெளனகுருவே" என்றவாறு

ஸ்ரீமதநந்த கலியாண குணகண சகிதோன்னத சமரச சன்மார்க்க சம்பூரண சுதந்தர சின்மய சுபாவராயும், சுவிசார வேதாந்தோசித பரமார்த்த நியாயத் தீர்ப்புக் கோர்ட்டாராயும், அசல பரப்ரஹ்ம சுவரூபாபரோக்ஷ சாக்ஷாத்கார சத்குரு ப்ரபு சக்கிரவர்த்தியாயும் விளங்கும் ஜட்ஜி அவர்கள் சன்னிதானத்திற்கு ஏழைகளில் மிக வேழையான முமுட்சுவாகிய ஜீவனென்னும் வாதி பன்முறை வந்தனம்புரிந் தெழுதிக்கொண்ட பிரியாதர்ஜி வருமாறு:—

சர்வகால சர்வதேச சர்வவஸ்து சர்வா வஸ்தைகளிலும் சமமாகி நிறைவுற்றுத் தானே தானாகி விளங்குகின்ற ஆத்மார்த்தமானது ஒருவனுக்கே யென்பதின்றிச் சகலருக்கும் பாத்தியதையுடையதா யிருக்கின்றது; அன்றி, அசங்க சம்பூரணமா யெங்கு நிறைந்திருக்கின்றது. அவ்வா றிருந்தும், உண்மையாக நோக்குமிடத்து எப்போது மில்லா திருந்தும், இப்போது லோபகுணப் பிரதாபங்களில் அக்கிர கண்ணியர்களான மதுகைடவ இந்திரசித்து முதலியவர்களுக்குச் சமானனாகிய அஞ்ஞானி யென்பவன் அது வெளியிற் றலைக் காட்டாவாறு தன்னுடைய ஆவரண சத்தியையேவி, அதனது அசங்கத்வ லட்சணத்தை மறைத்து, விட்சேப சத்தியை ஏவிவிட்டான். அதனாற் கற்பிக்கப் பட்ட வாசனைகளோடு கூடிய பாமரன், கர்மி, மூடபக்தன் என்னும் விரோதிகள் நானென்னும் ஆத்ம சொத்தைத் தங்கள் தங்கள் அநாத்ம சொத்துக்களுடன் சேர்த்துக் கொண்டு தங்களுடன் கலந்தொழுகி வருமாறு அதற்கு ஆணி செய்தார்கள். ஆகையால் மேல்விவகரித்த சிவோக மென்னும் ஆத்தும சொத்தைக் கல்பனா ரகிதமாயும், எப்போதும் அசங்கசுபாவமாயு மிருக்கச் செய்து, இனி யெக்காலத்தினும் மேற்படி பிரதி கட்சிக் காரர்கள் தூர்வியாஜ்யத்திற்குவரா மலிருக்கச்செய்தல் வேண்டும்; ஒருகால்வருவரேயாயின், அது செல்லத் தக்கதன்றென்று அவர்களுடைய தூர்வியாஜ்யத்தை ரத்துசெய்ய வேண்டும்; மேற்படி அஞ்ஞானி யென்பவன் ஆத்மார்த்தத்தை மறைத்த மோசமும், ஆவரணன் சுயம் பிரகாசமாகிய பிரஞ்ஞானத்தை அபகரித்த சோரியும், விட்சேபன் மித்தியா சகத்தைச் சிருஷ்டிசெய்த போர்ஜரியுமாய தப்பிதங்களைக் குறித்துக் கோர்ட்டார் தீர்க்க விசாரணை செய்து அவர்களைத் தண்டிப்பது மன்றிச் சுயம்பிரகாச மாயும் சர்வ

சுதந்தரமாயும் விளங்கும் ஆத்மார்த் தத்தையானும் என்வார்சுக் களும் நிராட்சேபமாக வநுபவித்து, சுகமடையச் செய்ய வேண்டு மென்று பன்முறை வணங்கிப் பிரார்த்திக் கின்றேன்.

இதற்குச் சாட்சிகளாக. விவேகன், வைராக்கியன், சமன், தமன், உபரதி, திதிட்சை, சிரத்தை சமாதானன், விசுவாசன் முதலிய அநேகரிருக் கின்றனர். இதற்கு ஸாசனங்கள் உபநிட தங்கள், ப்ரஹ்ம சூத்திரம், கீதை, அவற்றின் பாஷியங்கள், அத்வைத சாஸ்திரங்களாம். அவற்றைப் பிரியா தர்ஜியுடன் தாக் கல் செய்திருக்கின்றேன். ஆதலால் தரும துரைகள் கடாக்ஷித் து நிஷ்பக்ஷபாத நியாயமளிக்க மிகவும் வருந்தி அடிக்கடி தங்க ளுடைய மேலான கனத்தைப் பிரார்திக்கின்றனன்.

இப்படிக்கு முமுட்சு வாகிய வாதி கையெழுத்து.

இது வாதிவசீல் சூக்குமக் கிராக்கிய சாத்வீகாம்ச புத்தி யென்பவனால் தாக்கல் செய்யப் பட்டது.

காலாதீத ௵ துவாதசாந்தமீ௴ திரிதசாந்தத் தேதி.



பிரதிவாதிகளுக்கு அறிக்கைப் பத்திரம்

(நோட்டீசு) அனுப்புதல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வாதியின் ரிகார்ட்டி யாவும் வரிசையாய்ப் பரிசோ தித்து
நீதிசேர் கோரட் டார்க ணிகழ்பாம ராதி யோர்க்குப்
போதஞ்சேர் பரமார்த் தத்தைப் பொய்யினின் மறைத்தீ ரென்று
வாதிசெய் வழக்குக் காக வரவேநோட் டீசு செய்தார்.

முமுட்சு வென்னும் வாதி பிரியா தர்ஜியுடன் தாக்கல் செய் திருந்த உபநிடதாதி சாசனங்களைச் சோதித்து, சற்குரு ப்ரபு சக்கிரவர்த்தி அவர்கள் பிரதி வாதிகளாகிய பாமரன், கர்ம்மி, மூடபக்தன் என்பவர்களுக்குத் தமது குமஸ்தா வாயிலாகத் தெரி யப் படுத்தும் (அறிக்கை) நோட்டீசு:—

அசங்கமா யாவருக்கும் பொதுவாய் விளங்கும் ஆத்ம சொத் தை அநாத்ம சொத்துகளுடன் சேர்த்து நீங்களும் உங்களுடன் சேர்ந்தவர்களும் அாக்கிரகமாய் மறைத்து வைத்துக் கொண்டு துர்விநியோகப் படுத்தி வருகிறீர்களென்றும், அப்படி செய்வது

சட்டத்திற்கு விரோதமென்றும், அதைச் சர்வஜனங்களும் அநுபவிக்கும்படியாகத் தீர்ப்புச்செய்யவேண்டுமென்றும், பிரதிவாதிகள் செய்திருக்கும் மோசம், சோரி, போர்ஜரிமுதலிய தப்பிதங்களுக்குத் தக்கபடி அவர்கட்குத் தண்டனை செய்ய வேண்டுமென்றும், வாதி உங்களைப் பிரதிவாதிகளாகச் சேர்த்துப் பிரியாதர்ஜிதாக்கல் செய்திருக்கின்றான். ஆதலால் இந்த அறிக்கைப்பத்திரத்தைக்கண்ட தக்ஷணம் நீங்கள் கோர்ட்டார் முன்னுஜராகித் தகுந்தஜவாப்புச் சொல்லவேண்டும். உங்கள் தரப்புச்சாட்சிகளும் தகுந்தசாசனுதிகளுடன் ஆஜராகவேண்டும். இல்லாவிடின், கிரமப்பிரகாரம் விசாரித்து வாதிபக்கம்கேசு தீர்மானிக்கப்படுமென்று கோர்ட்டார்களுடைய உத்தரவின்படி முத்திரையிட்டனுப்பப்பட்டது. இந்த நோட்டீசு கண்ட பதினைந்து தினத்திற்குள் நீங்களாவது உங்கள் தரப்பு வக்கீலாவது வந்து தகுந்தபடி ஜவாப்புச் சொல்லல் வேண்டும். சொல்லாவிடின், தாவாசொத்தை வாதிபக்கந் தீர்ப்புச்செய்து, கோர்ட்டாரை அலட்சியஞ்செய்த குற்றத்திற்காக உங்களுக்குத் தண்டனையும் விதிக்கப்படும்.

இப்படிக்குக் கோர்ட்டார்கள் உத்தரவின்படி

குமஸ்தா—பிரியமுகன்.



## பிரதிவாதிகள் செய்யு மான்ஸர் (விடை).

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வான்சக லர்க்கும் பெய்த வனமடு விருக்கு மாபோற்
கோன்சக லர்க்கு மின்றிக் குடியிருப் பென்று மெங்கள்
பான்சக லார்த்த தீர்ப்புப் பகர்ந்துமிவ் வாதி கேசைக்
கான்சல்செய் தருளு மென்று கடேவந் தான்சர் செய்வார்.

சர்வ சுதந்தர சின்மய சுபாவ சுவிசார வேதாந்தோசித பரமார்த்த நியாயத்தீர்ப்புக் கோர்ட்டாராகிய அசலபரப்ரஹ்மசொரூபாபரோக்ஷ சாக்ஷாத்கார சத்குரு ப்ரபு சக்கிரவர்த்தியாரவர்கள் சன்னிதானத்திற்குப் பிரதிவாதிகளாகிய பாமரன் கர்மீ மூடபக்தனென்னும் நாங்கள் மூவரும் நமஸ்கரித்து எழுதிக்கொண்ட மநுவர்ஜியாகிய ஆன்சர்:—

இந்த வாதியின் பிரியாதர்ஜி சுத்தசூட்டா; விவாதாம்சமாகிய நாமெனன்னும் பரமார்த்த சொத்தானது சகலருக்கும் எப்போதுஞ் சாமானிய மாவதன்று; அங்ஙன மிருக்க, அஃதி

யாவருக்குஞ் சொந்தமா மென்பது சுத்தப்பொய்; அதை நாங்களொவ்வொருவரும் அநாதியா யநுபவித்து வருகின்றோம்; எங்கள் மூதாதைகள் முதலியாவரும் பரம்பரையா யநுபவித்துவந்தமைபற்றி, அஃது எங்கள் சொந்தமா யிருக்கின்றது; இப்போது நாங்களு மநுபவித்துக்கொண்டு வருகின்றோம்; ஆகையாலிப்போது பிரியாது கொண்டுவந்தவாதி அருகனன்று. அருகனென்றுசொல்வது சுத்த டக்கு. இந்த வியாஜ்யத்தின்கண் நானென்னுந் தாவா சொத்துக் காலாதீதமா யெங்களநுபவத்தி லிருக்கிறது. அதற்குக் காலதோஷ நேரிட்டமையாலும், காலநிருணயசட்டத்திற்கு அதிக்கிரமித் திருப்பதனாலும் தாவா சொத்தை யெங்களிடத்திலிருந்து வாதிக்கு வாங்கிக் கொடுப்பதற்குக் கோர்ட் டாருக்குக் கிஞ்சித்தேனு மதிகார மில்லை. விவாத சொத்தை நாங்கள் அக்கிரமமா யபகரிக்கவில்லை. ஆகலால், எங்களைத் தண்டனை செய்வதற்குக் கொஞ்ச மேனும் சட்டமிடங் கொடுக்க மாட்டாது. மேலே கூறிய நானென்னுஞ் சொத்தை யெங்க ளிடத்திற்றானே யெப்போது மிருக்கும்படி செய்வதன்றி இந்த வாதியின் பிரியாதைத் தள்ளிவிட்டு, அவர் கொண்டுவந்த கப்புத்தாவாவினால் எங்களுக்குண்டாகிய செலவுகள் யாவும் வாதி கொடுக்கும்படி தீர்ப்பளிக்க வேண்டுமென்று கோர்ட்டா ரவர்களை மிகவும் பிரார்த்திக் கின்றோம். இதற்குச் சாட்சிகள் விவரம்.

தனுத்மன்-1. களத்திராத்மன-2. புத்திராதமன்-3. தேகாத்மன் - 4. பிராணாத்மன் - 5. மனோமயன் - 6. விஞ்ஞானமயன் - 7. ஆனந்தமயன் - 8 சூன்னியாத்மன் - 9. சாங்கியன்-10. சாலோககாமி - 11. சாமீபவாதி - 12. சாரூபவாதி - 13. சாயுஜ்யவாதி - 14 இன்னு மனேகர்.

இதற்கு ஸாஸனங்கள் இகலோக காமுகராகிய எங்கள் பெரியோர்கள் தமது காலத்தில் நடந்தேறிவந்த வழக்கப் பிரகாரம் எழுதி வைத்த கணக்குகளும், பரலோக காமியரான எங்கள் பெரியோர்கள் தமது காலத்தில் அநுசரித்து வந்த கர்ம்மகாண்ட தஸ்தாவேஜிகளும், பத்தி காண்டிக ளநுசரித்து வந்த ஆகம புராணேதிகாசங்களுமாம். வாயிதாப் பிரகாரம் தாக்கல் செய் திருக்கின்றோம். கோர்ட்டார் அவர்கள் கிரமப் பிரகாரம் விசாரணை செய்து கீழ்க் கோர்ட்டா ராகிய ஹரி ஹர பிரஹ்மேய

திராதியர்களெங்கள் பக்ஷந்தீர்ப்புச்செய்திருக்கும் வண்ணம் எங்களுக்கே காயஞ் செய்விக்கக் கோருகிறோம்.

இப்படிக்குப் பாமரன், கர்மி, மூடபக்தன். நமஸ்காரம்.
வகீல் கோரபுத்தி கையெழுத்து.



## கோர்ட்டார் கொடுத்த இஷூவு.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

தீரனாய் வந்து வாதி செய்திட்ட பிரியா திற்கு
நேரதா யெதிரி மூவர் நிகழ்த்திய வான்ச ராதி
சீரதா யாவு நோக்கிச் சின்மயக் குருவா யோங்குங்
கோரட்டர் ராலோ சித்துக் கோடுத்தநல் லிஷூவைச் சோல்வாம்.

பிரக்ஞானகன சத்துஸ்வரூபராகியும், பரமார்த்த நியாயாதிபதியாகியும் விளங்காநின்ற ஜட்ஜி சத்குரு ப்ரபு சக்கிரவர்த்தியாரவர்கள் சன்னிதானத்தில் வாதி கொடுத்த பிரியாதும், பிரதிவாதிகள் கொடுத்த ஸ்டேட்மெண்டும், படிக்கக் கேட்டும் நேரில் பார்த்தும் அதற்குமேல் கோர்ட்டார் கொடுத்த இஷூவாவது:—

1 - வது விவாத சொத்தாகிய நானென்னும் ஆன்மா சர்வ சாமானியமா யாவரும் அநுபவித்தற்குரியதா? அல்லது சிலருக்கு மாத்திரம் உரிமையுடையதா?

2 - வது வாதிப் பிரியாது கொண்டு வருவதற்கு அருகனா? அன்றா?

3 - வது இந்தப் பிரியாதாகிய தாவா கால நிருணய சட்டத்தினால் பாதிக்கப் படுகின்றதா? இல்லையா?

4 - வது இந்தப் பிரியாதிற் சேர்ந்த விவாத சொத்தாகிய ஆன்ம சொத்தை அக்கிரமமாக மறைத்து வைத்த எதிரிகள் தண்டனைக்குட் படுவார்களா? அன்றா?

5 - வது வாதிக்கிந்தத் தாவா சொத்தைப் பிரதிவாதிகளிடத் திருந்து வாங்கிக் கொடுக்கலாமா? கொடுக்கக் கூடாதா?

என்றிந்த ஐந்து இஷூவுகளையுந் தந்து இஷூவாயிதாநியமித்துப் பப்பளிக் செய்வித்ததை வகீல் முகாந்திரமாகத் தெரிந்து, அந்த வாயிதாப் பிரகாரம் வாதிப் பிரதி வாதிகளும் சாக்ஷிகளும் ஆஜரானார்கள்; ஆஜரான வுடனே, அசத்தாகிய லோக வியவகார விசாரணைகளுக்கு முதலில் வாதிதரப்புச் சாட்சிகளை விசாரிப்பது

நியாய ஸ்தானங்களில் வழக்கமாம்; அப்படியிருந்தாலும், அதற்கு எதிர்மறையா யிருக்கும் கேசுகளைக் கோர்ட்டார் தம் மிஷ்டப்படி நடத்தலாமென்று சட்ட மிருப்பதனால், கோர்ட்டாரவர்கள் முதலில் பிரதிவாதி தரப்புச் சாட்சிகளை விசாரிக்கத் தொடங்கினர்.



## பிரதிவாதி தரப்பு.

பாமரன் ருஜூப்படுத்துதல்.

### 1—வது-சாக்ஷி தனாத்மன் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கனந்தரு மேவரும் வந்தேன் கழலடிப் பணியச் செய்யு
மினந்தரு மெல்லை யற்ற வின்பந்தந் துறவாய் நிற்குந்
தனந்தனை யன்றி யான்மா சாற்றவே றில்லை யென்று
சனந்தருங் கோர்ட்டார் முன்பு தனாத்மன்சொல் சாட்சி சொல்வாம்.

தான் பிடித்த முயலுக்கு மூன்றேகா லென்று சாதிக்கும் கோர மூடபுத்தி யென்கிற பிரதிவாதி வகீலெழுந்து பேரிட்டழைத்து, தானாத்மனென்பவனைக் கோர்ட்டார் முன் நிறுத்தி, சர்வ சக்தியுள்ள சத்துரு ப்ரபு சக்கிரவர்த்தி அவர்கள் சன்னிதானத்தில் நிஜந் தவிர மற்றெதனையுஞ் சொல்வதில்லை யென்று பிரமாணஞ் செய்வித்துக் கேட்கும் கேள்விகள்.

பிரஸ்னை - நீர் - ஆர்?

உத்தரம் - நான் தனாத்மன்; பிரஜைகளென்னைப் பெரிய மனிதனென்று சொல்லுவார்கள்.

பி - எதனால் உம்மைப் பெரியமனிதனென்று சொல்லுவார்?

உத் - நான் பிரபல தனிகனா யிருத்தலால், என்னைப் பெரிய மனிதனென்று உலகத்தார் சொல்லுவர்.

பி - அகம் சத்தார்த்தமான ஆன்மாவை நீரறிவீரா?

உத் - திரவியமே அகம்பதார்த்த மென்றறிவேன்.

பி - அதற்குச் சுருதி யுக்தி யநுபவங்க ளுண்டா?

உத் - திரவியமே ஆன்மா வென்பதற்குச் சுருதி யுக்தி யநுபவங்க ளனந்தமுண்டு.

பி - தனத்தையே ஆன்மா வென்பதற்குச் சுருதியாதோ ?

உத் * "நிர்தந புருஷோ சட்பஸமாநஃ" என்றும்,
† "சர்வஜநா காஞ்சந மாச்ரயந்தி" என்றும்,
‡ "தநமூலமிதம் ஜகத்" என்றும்,

சுலோகம்.

† "மாதா நிந்ததி நாபி நந்ததி பிதாப்ராதா நஸம்பாஷதே
ப்ருத்யு குப்யதி நாநுகச்சதி சுதஃ காந்தாச நாலிங்கதே
அர்த்தப்ரார்ஜந சங்கயாந குருதே ப்யாலாபமாத்ரம் ஸுஹ்ரு
தஸ்மாதர்த்த முபார்ஜய ச்ருணுஸகே ஹ்யர்த்தேந ஸர்வேவசா"

(இ-ள்). தரித்திரனை அவன் தாய் நிந்திப்பள்; தகப்பன் சந்தோஷமடையான்; சகோதரர்கள் பேசார்கள்; பரிசாரகன் கோபிப்பான் குமாரன் பின் தொடர்ந்து வரான், பெண்சாதி யாலிங்கனஞ் செய்யாள், சிநேகன் வாய்திறந்து பேசான் ஆகையால் அன்பனே, தனத்தையே சம்பாதிக்க வேண்டும்; தனத்தினால் யாவரும் சுவாதீன மாவார்கள். என்றும்,

நீதிநூல்.

* "சத்ருவத் புத்ரதாரேஷு பந்துவர் கேஷு சோரவத்,
பாதகீவஸபாமத்யே அஹோகஷ்டம் தரித்ரதாம்.

(இ-ள்). தரித்திரன் தன் பெண்சாதி பிள்ளைகளுக்குச் சத்துருவைப் போலும், பந்துக்களுக்குத் திருடனைப்போலும், சபையாருக்குப் பாதகனைப்போலும் தோன்றுவன். என்றும்,

---

* "நிர்தநஃ புருஷோ ஷட்பஸமாநஃ"
† "ஸர்வஜநா காஞ்சந மாச்ரயந்தி"
‡ "தநமூலமிதம் ஜகத்"

† "மாதா நிந்ததி நாபி நந்ததி பிதா ப்ராதா ந ஸம்பாஷதே ப்ருத்யஃ குப்யதி நாநுகச்சதி ஸுதஃ காந்தா ச நாலிங்கதே । அர்த்தப்ரார்த்தந ஶங்கயா ந குருதே ப்யாலாபமாத்ரம் ஸுஹ்ருத் । தஸ்மாதர்த்தமுபார்ஜயஸ்வ ச்ருணு ஸகே ஹ்யர்த்தேந ஸர்வே வஶா"

* ஶத்ருவத் புத்ரதாரேஷு பந்துவர்கேஷு சோரவத்। பாதகீவ ஸபாமத்யே அஹோ கஷ்டம் தரித்ரதா ॥

சுலோகம்.

‡ வாஸச் சர்ம விபூஷணாநி பணிநோபஸ்மாங்கராகோதுநா, கௌரேகஸ்ஸச கர்ஷணேன குசலஸ்ஸம் பத்தி ரேதாத்ருசி, இத்யா லோப்பிய விமுச்ய சங்கர மகா ரத்நாகரம் ஜாஹ்நவி, கஷ்டம் நிர்த்தனி கஸ்ய ஜீவித மஹோதானா ரபித்யஜ்யதே.

(இ-ள்). ருத்திரன் அணிவதற்கு வஸ்திர மில்லாமல் சர்மத்தைத் தரித்தான். ஆபரணங்க ளில்லாமல் சர்ப்பங்களை யணிந்தான், சந்தனக் குழம் பில்லாமல் பஸ்பந் தரித்தனன், குதிரை யொன்று கிடைக் காமையால் எருதை வாகன மாக்கிக் கொண்டான். இத்தூரவஸ்தைகளைப் பார்த்துக் கங்கை சிவனைவிட்டுச் சமுத்திரத்தில் பிரவே சித்தாள்; ஆகையால் திரவிய ஹீனனை மதியாது அவன் பெண்சாதியும் மற்றொருவனைச் சேருகின்றாள். என்றுமுள்ள பிரமாணங்களால் தனமே ஆன்மாவாகும். மேலும்,

தனிப்பாடற்றிரட்டு.

குணமிருந் தாலுங் குலமிருந் தாலுங் கொழுந்தமிழின்
மணமிருந் தாலு மறிவிருந் தாலு மழுந்திடுவங்
கணமிருந் தாலுமோர் காசுமப் பெறுதுசீந் தாரவரைப்
பணமிருந் தாலல்லவோ வெல்லோரு மஞ்சலி பண்ணுவரே.

ஔவையார்.

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ - ரில்லானை
யில்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

"திரைகட லோடியுந் திரவியந் தேடு"

பஞ்ச தந்திரம்.

" நற்பொரு ளறத்தை யின்ப நலத்தைஞா னத்தை மிக்க
பற்பல துறவை நட்பைப் பகைதவிர்த் திடுந்தி றத்தைச்

‡ " வாஸஶ்சர்ம விபூஷணாநி பணிநோ பஸ்மாங்கராகோ த்ருஷா ।
கௌரேகஸ்ஸஹ கர்ஷணேந குஶலஸ்ஸம்பத்திரேதாத்ருஶீ ।
இத்யாலோக்ய விஹாய ஶங்கர ஹோ ரத்நாகரம் ஜாஹ்நவீ ।
கஷ்டம் நிர்தநிகஸ்ய ஜீவிதமஹோ தாரைரபி த்யஜ்யதே."

சொற்பெரும்புகழை யென்றுந் துகளறும் பெருமைதன்னைப்
பொற்புறு கதியை யெல்லாம் பொருளலாற் றருவ தன்றே.

குறள்.

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

என்றனந்த பிரமாணங்களு முண்டு. ஆதலால், பொருளே தேடத் தக்க வாத்மாவாம்.

பி - தனமே ஆன்மா வென்பதற்கு யுத்தி யாது?

உத் - பொருளில்லா தவனை நடைப்பிணமென்று திரஸ்கரித்து, என்னைப் பார்த்தவளவில் யாவரு மெழுந்து வந்தனுதிகள் செய்து ஆசன மளித்து மரியாதை செய்வதே யுத்தியாம்.

பி - திரவியமே ஆன்மா வென்பதற்கு அநுபவ மியாது.

உத் - என்னுடைய தன சமூகத்தைப் பார்க்கும்போதும் பரிசிக்கும் போதும் சந்தோஷ சாகரத்தில் முழுகிச் சதாநந்த முற்றிருப்பதே அநுபவமாம்.

இவ்வாறு சுருதியுத்தி யநுபவங்களுடனே சொல்லிநின்ற தனாத்ம வாதியைப் பார்த்து வாதிவகில் சூட்சுமக் கிராக்கிய சாத்விகாம்ச புத்தி யென்பவ னெழுந்து கேட்கும் குறுக்குக் கேள்விகள்:

கிராசு - நீர் தனத்தை நானெனச் சொல்லு கின்றீரா? எனதெனச் சொல்லு கின்றீரா? நீர் கூறியவையெல்லாம, தத்துவ சாஸ்திர பரிசீலனஞ் சிறிதளவு மில்லாத அவ்யுத்பன்னர்களான பத்த சம்சாரிகளுக்கு ஒரு பரியாய மாகப் புராணங்கள் கற்பித்துக் கூறுகின்ற லௌகிகநியாயங்களே யன்றி வேதாந்த தத்துவ சாஸ்திர விபக்ஷகரான பாரமார்த்திகருக்கு அங்கீகார மாகா. இப்போது யான் சொல்லப் போகிற தத்துவ சாஸ்திரப் பிரமாணங்களால் நீர் கூறிய லௌகிக திருஷ்டாந்தங்களெல்லாம் பூர்வ பக்ஷமாம்; கிரம தர்க்கங்கள்முன் நிற்கமாட்டா; படாப் பஞ்சியாய்ப் பறந்து போம்.

சுலோகம்.

¶ "அர்த்தநா மார்ஜநே துக்க மார்ஜிதா நந்து ரக்ஷணே
நாசே துக்கம் விரயே துக்கம் கிமர்த்தம் துக்க பாஜநம்"

(இ-ள்). பொருளைச் சம்பாதிப்பதினாலுந் துக்கம், சம்பாதித்தபொருளை இரக்ஷிப்பதினாலுந் துக்கம், அதற்குக் கெடுதிவருமாயினுந் துக்கம். ஆதலால் விசனத்திற் கேதுவாகியபொருளால் யாது பிரயோஜனம். அதனை நெருப்பாற் றகிக்கவேண்டும். என்று மநு கூறுகின்றார்.

சுலோகம்.

$ "மாதாபுத்ர விரோதாய ஹிரண்யாய நமோநமః"

(இ-ள்). பொருளில்லாதவனுக்குப் பெற்ற தாயும் புத்திரனும் விசுவாசமற்று மகாவிரோதிகளாவர், ஆதலால் சகல விதத்தாலும் துக்கத்தைத் தருகின்ற பொருட்கு நமஸ்காரம் நமஸ்காரம். என்று புராதன வசனம் கூறுகின்றது.

இருடிகளபிப்பிராயம்.

* அர்த்தஜாதிவிதுః ப்ராஜ்ஞாః துః கஸ்யபேதாநி தேஹிநாம்
அர்த்தஸ்யோத் பாதநேசைவ பாலநேச ததாக்ஷயே
ராஜிதஸ் ஸலிலாதக்நேச சோரத ஸ்வஜநேநபி
பயமர்த்தவதாம் நித்யம் ம்ருத்யோ ப்ராணப்ருதாமிவ
யதாஹ்யமிஷமாகாசே பட்சிபிஃச்வாப தைர்புவி
பட்சயதேஸலிலேமச்சேః ததாஸர்வத்ரவித்தவான்.

---

¶ "𑌅𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑌰𑍍𑌜𑌨𑍇 𑌦𑍁𑌃𑌖𑌮𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌰𑌕𑍍𑌷𑌣𑍇
𑌨𑌾𑌶𑍇 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌵𑍍𑌯𑌯𑍇 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌦𑍁𑌃𑌖𑌭𑌾𑌜𑌨𑌂"

$ "𑌮𑌾𑌤𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌯 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃"

* 𑌅𑌰𑍍𑌥𑌜𑌾𑌤𑌿𑌵𑌿𑌦𑌃 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌾𑌃 𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯𑌪𑍇𑌤𑌾𑌨𑌿 𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 ।
𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌨𑍇 𑌚𑍈𑌵 𑌪𑌾𑌲𑌨𑍇 𑌚 𑌤𑌥𑌾 𑌕𑍍𑌷𑌯𑍇 ।
𑌰𑌾𑌜𑌤𑌃 𑌸𑌲𑌿𑌲𑌾𑌦𑌗𑍍𑌨𑍇𑌶𑍍𑌚 𑌚𑍋𑌰𑌤𑌃 𑌸𑍍𑌵𑌜𑌨𑌾𑌦𑌪𑌿 ।
𑌭𑌯𑌮𑌰𑍍𑌥𑌵𑌤𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌭𑍃𑌤𑌾𑌮𑌿𑌵 ।
𑌯𑌥𑌾 𑌹𑍍𑌯𑌾𑌮𑌿𑌷𑌮𑌾𑌕𑌾𑌶𑍇 𑌪𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 𑌶𑍍𑌵𑌾𑌪𑌦𑍈𑌃 𑌭𑍁𑌵𑌿 ।
𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 𑌸𑌲𑌿𑌲𑍇 𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑍈𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌵𑌿𑌤𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 ॥

(இ-ள்). பொருளைச் சேர்ப்பதனாலும், பாது காப்பதனாலும் செலவிடுதலாலும் வரும் துக்கங்கள் ஜீவருக்கு நீங்காமலிருக்கும் என்று பெரியோர்கள் சொல்லுவர். இராஜனாலும், ஜலத்தினாலும், அக்கினியினாலும், பந்துஜனங்களாலும் வரும் பயம், தேகதாரிகளுக்கு மிருத்தியு அடுத்ததுபோலத் தனவான்களுக் கிருக்கும். மாம்ச கண்டம் ஆகாயத்தில் பட்சிகளாலும், பூமியில் நாய்கள் முதலிய குரூர மிருகங்களாலும், ஜலத்தில் மச்சங்களாலும் எவ்வாறு பட்சிக்கப்படுமோ அவ்வாறு தனவான்களும் யாவற்றாலும் பட்சிக்கப் படுவார்கள்.

குறுந்திரட்டு:

ஆக்க முன்ப மரும்பொரு ளப்பொரு
ளோக்க முன்ப நகரினுந் துன்பமே
போக்க முன்பமாம் போதத் துலையினிற்
றாக்கி னலதில் வேறில்லைத் துன்பமே.

துப்புறு பொருளினைத் தேட முன்பமாங்
கைப்பொரு ளுண்டெனிற் கருத்து மோகமா
மப்பொரு ளழிந்திடும் பொழுது மல்லலா
மெப்பொழு தோபொரு ளின்ப மாவதே.

விறல்கொண் மன்னரிற் சோரனில் விரும்பிய மகவி
லறலி லங்கியிற் கிளைஞ்சரி லரும்பொரு ளழிவா
யுறவி னெஞ்சினுக் கொழிவற வெருவுத லுளதா
மறலி யாற்பிறப் பவர்க்கெலாம் வரும்பயம் போல.

மகாராஜா துறவு.

பொருளுண் டாகிற் காப்பதனாற் பொருந்துந் துன்ப மாசாகின்
ஒருதம் மிகுத்த வரசரா லுதவுந் துன்ப மொருகுடைக்கீழ்
நிருப னாகி நோய்மரண நேரு மென்னும் பயந்தானும்
வருவ தெனையோ மறுமையினி லென்றும் வாடித் துன்புறுமே.

நீதிவெண்பா.

இன்ன றரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—யன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பா
லிழத்தலுந் துன்பமே யாம். என்றும் பெரியோர் கூறியிருக்கின்றார்கள்.

நீர் பிரமாணமாகக் கொண்டிருக்கும் புராண மிதிகாசங்களிற சேர்ந்த பௌஷயத்புராணத்தையும் பாகவதாதிக் கிரந்தங்களையும் பார்த்தறியீர் போலும், "கோமணாண்டி திருடருக்கு மிண்டன்" என்கிற வாறு லோகாநுபவத்தின்கண் பொருளில்லாதவன் நிர்ப்பயனாய்க் காட்டிலாகிலும் நாட்டிலாகிலும்மற்றெவ்விடத்திலாகிலும் சுக ஜீவியாயிருக்கின்றானல்லவா? தனலோபம் பற்றிப் பிறர்க்குக் கடன் கொடுத்தால், உலகத்தவாக ளபகரித்துக்கொள்ளுதலினால் சதா துக்கசாகரத்தில் முழுகுவது பிரசித்த மல்லவா? திருடர் வந்து சொத்தை யபகரிக்க யத்தனப்படும்போது அவர்களைத் தடுக்கும் பொருட்டு நீர் குறுக்கே விழுந்து தடுக்கவேண்டு மல்லவா? தனாபேட்சையால் தடுத்தாலன்றோ தனம் நிற்கும். அப்போது உமது பிராணனுக்கே அபாயம்நேரிடுவதில் கிஞ்சித் தேனுஞ் சந்தேகமில்லையல்லவா? இப்படி சகலவிதத்திலும் துக்க சொரூபமாயிருந்து பிராண ஹானியைத் தரும் திரவியத்தை யெவ்வாறு சுகமென்று நம்புகிறீர்? மேற்காட்டிய அநேகப் பிரமாணங்களினால், தனத்தினால் கிஞ்சித்தேனுஞ் சுகமில்லாமை நன்கு விளங்குமே; அநேகர் தனத்தினால் இராகத்துவேஷ கர்விதராய்ப் பெரியோர்களைத் திரஸ்காராதித் துன்பங்களைச் செய்து வருவது அநுபவசித்தமாயிருக்க, துக்காஸ்பதமாகிய திரவியத்தை நித்தியானந்தமாகிய ஆன்மாவென் றெவ்வாறு சொல்லத் துணிந்தீரென்று பற்பலபிரசனைகளைச் செய்யும்போது, தனாத்மனென்கிறசாட்சி விடை சொல்வதற்கு யாதுந் தோன்றாமல் திக்பிராந்திகொண்டு நிச்சேட்டிதனாய், இலையற்ற பனையெனவசைவற்று நின்றான். அப்போது கோர்ட்டாரவர்கள் சாட்சியாக வந்த தனாத்மன்முகத்தை நோக்கி, புன்சிரிப்புக்கொண்டு தப்புச்சாட்சி புகலவந்த இவனை அஞ்ஞானமென்னுங் காடாந்த காராக் கிருகத்தில் தலைக்கீழாகவிழுத் தள்ளி விஷயேந்திரியங்க ளென்னுஞ் சர்ப்பங்களைக்கொண்டு இம்சிக்கும்படி ஏவலாளருக்கு ஆக்ஞாபித்து, இரண்டாவது சாட்சியை அழைக்கும்படி கட்டளையிட்டார்.





பாமரன் தரப்பு.

## 2-வது சாட்சி களத்திராத்மன் விசாரணை.



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

களத்திரந் தன்னை நோக்கிற் கடும்பசி கோப தாப
முளத்தினி லுற்ற துன்ப மொழிந்துடன் சுகம ளிக்குங்
களத்திர மன்றி யான்மா காணவே றில்லை யென்னுங்
களத்திரான் மாவும் வந்து களிப்புடன் சாட்சி சொல்வான்.

*சற்குரு ப்ரபு சக்கிரவர்த்தியாகிய ஜட்ஜி அவர்கள் சன்னதியில் பிரதிவாதிகளின் வகீலாகிய கோரமூட புத்தி யென்பவன் எழுந்து களத்திராத்மனைப் பேரிசைச்சலிட் டழைத்துப் பிரமாணஞ் செய்வித்து, இரண்டாவது சாட்சியாக வந்த நீர் நானென்னும் ஆன்மாவை யறிவீரா? எக்காலத்தும் அறியவில்லையா? என்று பிரசனை செய்தான்.*

*உத். இந்தவுலகத்தில் பெண்சாதியை ஆத்மநாயகியென்றும், களத்திராத்மா வென்றும், பிராண நாயகி யென்றும், களத்திரத்திற்கு அன்னியமாய் வேறொரு பிரிய வஸ்துவுமில்லை யென்றும், சுருதிக ளியம்புவதலாலும், உலகி லெல்லோரும் பெண்சாதியைப் பிரியமாகக் கொண்டாடுகின்ற படியாலும், இன்னு மனேக விதங்களாகவுஞ் சிலாகித்து அநுபவிக் கின்றார்க ளாகையாலும், களத்திரத்தை ஆன்மா வென்பதற்குச் சந்தேக மில்லையாம்.*

*பி - நீர் சொல்லியபடி களத்திரமே ஆன்மா வென்பதற்குச் சுருதி யுத்தி யநுபவங்க ளெவை?*

ஸ்ரீமத் ராமாயணம்.

*உத் - சாஸ்த்ர ப்ரயோகாத் விவிதாச்ச வேதா*
*தாத்மாஹ்யநந்யஃ புருஷஸ்யதாராஃ*

---

* "ஶாஸ்த்ரப்ரயோகாத்³விவித⁴ாச்ச வேதா³
தா³த்மா ஹ்யநந்ய: புருஷஸ்ய தா³ரா:

தாரப்ர தாநாந்நஹி தானமந்யத்ப்ரத்ருச்யதே
க்ஞாநவதாம் ஹிலோகே.

(இ-ள்). தருமசாஸ்திரவசனம் பலமுகங்களைக் கொண்டு புகழும் வேதங்களினாலும், புருஷனுக்குப் பாரியாள் வேறாகாமல் ஆன்மாவே யாகின்றனள்; ஆதலால் விவேகிகள் சர்வதானங்களைக் காட்டிலும் கன்னிகாதானம் முக்கியமென்பார்கள்.

பிரமோத்ர காண்டம்.

கயங்கெழு நறுமலர் கலந்கு ருவகைப்
பயங்கெழு தேனுகர் சுரும்பின் பான்மைபோல்
வழங்கிழை மகளிரை மனத்தி ருத்திய
முழங்கினர்க் கன்றிமற் றின்ப முற்றுமோ.

காஞ்சி புராணம்.

பெண்ண லத்தினைப் பெறுதவர் மகவினைப் பெறுதார்
பெண்ண லத்தினைப் பெற்றவர் மகவினைப் பெற்றார்
பெண்ண லத்தினன் மகவுபெற் றிருமையும் பெறுவர்
பெண்ண லத்தினலன் றியோர் பெறும்பொரு ளுண்டோ.

சுலோகம்.

"பாரியா ஸமோ நாஸ்தி சரீர போஷணம்" எ-ம்.

(இ-ள்). சகல புருஷார்த்தங்களுக்கும் அநுகூலமாய், சரீரத்தைப்போஷிக்கிறதற்குப் பெண்சாதியையன்றி வேறெவர்கள்சமர்த்தராவர்.

என்று மிக வற்புறுத்திச சாஸ்திரங்கள் சொல்லுவதால், மனையாளே ஆன்மாவென்று சொல்லப்படுகின்றாள். மேலும், வஸ்துதத்துவ ஞானிகளாய்ச் சகத்தை மித்தை யென்றும், அதில் ஸ்ரீகள் மகாநிந்தாஸ்பதர்க ளென்றும், மிக நன்றாயறிந்தவசிஷ்டர், அகஸ்தியர், கௌதமர், ஜமதக்கினி முதலிய மஹாரிஷிகள் மனையாளை ஆன்மாவுக்குச் சமமென்றும் அவர்களின்றி நித்திய நைமித்திகாதி கருமங்கள் முடிவுறா வென்றும், அவர்களே சர்வத்திற்கு மேதுவென்றும் நிச்சய முடையவர்களாய், பத்தினி சமேராய் விளங்கினார்கள்.

---

ദാരപ്രദാനാന്നഹി ദാനമന്യത്പ്രദൃശ്യതേ
ജ്ഞാനവതാംഹിലോകേ"
† "ഭാര്യാസമോനാസ്തി ശരീരപോഷണം"

சுலோகம்.

† யதாசசீ மஹாபாகா ஸக்ரம்ஸமுப திஷ்டதி
அருந்ததீ வசிஷ்டஞ்ச ரோஹிணீ சசிநம்யதா
லோபாமுத்ராய தாகஸ்த்யம் ஸுகந்யாசச வஸும்யதா
ஸாவித்ரீ ஸத்யவந்தஞ்ச கபிலம் ஸ்ரீமதீயதா
ஸௌதாஸம மதயந்தீவ கேசிநீ ஸகரம்யதா
நைஷதம் தமயந்தீவச் சேமீபதி மநுவ்ரதா
வரிஷ்டா ஸர்வநாரீணாம் மேஷாச திவிதேவதா
ரோஹிணீ நளிநாசந்த்ரம முகூர்த்த மபிதுர்ச்யதே.

(இ-ள்). ஸசிதேவி யிந்திரனையும், அருந்ததி வசிஷ்டரையும், ரோகணி சந்திரனையும், லோபாமுத்திரை அகஸ்தியரையும், சுகந்தியாதேவி வசுவென்பவனையும், சாவித்திரி சத்தியவந்தனையும், ஸ்ரீமதிதேவி கபிலரையும், மதயந்தி சௌதாஸனையும், கேசினிதேவி சகரனையும், தமயந்தி நளனையும், அடைந்தமை பற்றியன்றே அவர்கள் மேன்மை யுற்றார்கள்.

இந்தப் பிரகாரம்மகாத்மாக்கள் ஸ்த்ரீகளைவரித்து ஆத்மநாயகி திலகராயினார்கள். இவை லோகப்பிரசித்தமாய விஷயமாம்.

பி- களத்திரமே ஆன்மா வென்பதற்கு யுத்தியாது?

உ.த் - யாருடைய ஆக்கினைக்குப் பயப்படா விட்டாலும் சிரந்துணிக்கும் அரசனுடைய ஆக்கினைக்குப் பயப்படுவது போன்று நாமெல்லோரும் பெண்சாதி யாக்கினைக் குட்பட்டுப் பய பக்தி விசுவாசங்களுடன் நடந்து கொள்வதே யுத்தியாம்.

பி - களத்திரமே யான்மா வென்பதற்கு அநுபவம் யாது?

---

† “[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ”

உத் - என்னுடைய அநுபவமேயாம். அன்றி, லோகோத்தரங்களாய அநுபவங்களிலும் சிலவெடுத்துக்காட்டுதும். சற்றுக்கவனித்துக்கேட்கவேண்டும். இப்பிரபஞ்சத்தின்கண் முக்கியத் தெய்வங்களெனப்படும் பிரம்மா விஷ்ணு மகேசுரர்களாகிய மும்மூர்த்திகளும் தங்கள் தங்கள் மனைவியாகிய சரஸ்வதி இலட்சுமி பார்வதியென்னும் மூவரையும், ஆன்மப்பிரியர்களென்று கருதியிருப்பது புராணப்பிரசித்தமாம். சதுர்முகப்பிரமன் றனது மனைவியை நாவில்வைத்துக் கொண்டனன். விஷ்ணுமூர்த்தி தனது தேவியை மார்பில் இருக்கச்செய்தனன்; சாம்பவமூர்த்தி தனது நாயகியைத் தன் சரீரத்தில் பாதியாக வைத்துக் கொண்டான்; அன்றி, கங்காதேவியிருக்கச் சிரத்திலு மிடங்கொடுத்தனன். இவை உலகமறிந்தனவேயாம். பெண்சாதிகள் ஆன்மாவா யிருப்பதாற்றான் அவர்களை அவ்விதமாயங்கீகரித்தார்கள். இவர்களைப் பித்தர்களென்றாவது காமுகரென்றாவது நிச்சயிக்கலாமா? இல்லாள் தன் புருஷனுக்கு ஆத்மாவாகாளென் றுட்சேபிக்கின்றவரே அவிவேகியராவர். இன்னமுங் கேட்கின், அந்தத் திரிமூர்த்திகளுக் கான்மாவாகவவர்களது பெண்சாதிக ளிருப்பதாற்றான், அவர்க ளவர்களுக்குப் பிருத்தியஸ்தப பிருத்தியர்களாகியும் அடிமைகளாகவு மிருக்கின்றார்கள். மேலும்,

‡ சம்புஸ்வயம்பு ஹரயோ ஹரிணேக்ஷணாநாம்
யேநாக்ரியந்த ஸததம் க்ருஹகர்ம தாஸா:.

(இ-ள்). சாம்பசிவனும் சதுர்முகனும் விஷ்ணுவும் எந்தக் காரணத்தால் கலைமானைப்போன்ற கண்களுடைய உமா சரஸ்வதி லட்சுமி யென்கின்ற ஸ்திரீ ஜனங்களுக்குச சதா அவர்கள் வீட்டு வேலைக் காரர்களானவரோ? என்று சொல்லப்பட் டிருக்கின்றது.

அன்றியுஞ் சில மனோரஞ்சித சாஸ்திரங்களில் சகத்காரண முக்கிய நியாயங்களைக் குறித்து ஸ்திரீ புருஷசங்கம ஹேதுக்களினால் பிரஜாவிருத்தியாகின்றது; அவ்வாறல்லாது வேறுவிதத்தில் முடியாது. மனைவியைவிட்டுப் புருஷன் மாத்திரம் குழந்தைகளையுண்டாக்கமாட்டானென்பது யாவருக்குந்தெரிந்தவிஷயமேயாம்.

‡ “ശംഭുസ്വയംഭുഹരയോ ഹരിണേക്ഷണാനാം
യേനാക്രിയന്ത സതതം ഗൃഹകൎമ്മ

என்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும், பாரியாள் சர்வதுக்க ரோகங்களுக்கு ஔஷதமாயிருக்கின்றாள். பாரியாள் சமேதனுக்கெவ்வளவாபத்துக்கள் சம்பவித்தாலும், அவை கணப்போதில் நீங்குமென்று பாரதாதி பெருநூல்கள் முறையிடுகின்றன. இவை நல்ல அநுபவங்களாம். இவைபோதுமானவை யாமென்று சமயோசித புராண வாக்கியங்களைத் திருஷ்டாந்தங்களாகக் காட்டித் தன் கட்சியைப் பலப்படுத்தப் பிரயத்தனப்படும்போது வாதி வக்கீல் கேட்குங் குறுக்குக் கேள்வி:

கிராசு - நீர் சத்சங்க சகவாசமும், பரம சாதுக்கள் சேவையும் சத்கிரந்தக் காலட்சேபங்களுமென்றுஞ் செய்ததிலர்போலும்! நீர் கேவலம்பெத்த சுபாவமுடையராகையால் அநுகூலமாகிய சில லௌகிக கிரந்தங்களைக் கொண்டு சமயோசித திருஷ்டாந்தங்களைக் காட்டினீர். அவை துர்ப்பல திருஷ்டாந்தங்களே யன்றி, பிரபல திருஷ்டாந்தங்களன்று. பாரமார்த்திக விசாரணையென்னுஞ் ஜஞ்ஜாமாருதத்தாலுடைபடும் லௌகிக யுக்திகள் எச்சிற் கலைகளாய்ப் பறந்துபோம்.

இந்தப் பிரபஞ்சத்தில் அநேககோடி ஸ்திரீ ஜனங்களுள், உம்மாற் சொல்லப்பட்டவர்கள் மிகவுஞ் சிறியவர்கள்; அவர்களொருகணக்கிலகப்பட்டவர்களன்று; சமுத்திரத்தில் கடுகு விதைகள் போட்டாற் போல்பவராவர். "அதிதம சத்குணிபாரியா" என்றவாறு உத்தம ஸ்திரீகள் உத்தம மகாரிஷிகளுக்கென்றே அவதரித்திருப்பார்கள். அவர்களந்த மகரிஷிகளுக்கிருந்த தபசு யக்யம் முதலிய சற்கர்மங்களுக்கு அநுகூலமாயிருப்பாரன்றி, ஆகாரம் நித்திரை மைதுனாதிகளுக்குத் திரியுமிருகாதிகளைப்போன்று பிரவிர்த்திக்கும் காதமர்கள்போல் சம்போகாபேட்சையை கொண்டவர்களாகார். இவ்வாறு அதிசுலப கணக்குடைய குலாங்கனைகளின் திருஷ்டாந்தங்களைக் கூறுவதனாற் பிரயோஜனமில்லை. பிரயோஜன மற்ற திரிமூர்த்திகளின் பத்தினிகளைத் திருஷ்டாந்தமாகக் கூறுவது பண்டிதரங்கீகாரமாகமாட்டாது. ஏனெனின், "புராணங் கல்பனு கதா" என்பது பிரசித்தமல்லவா? அப்புராணங்கள் தேவதாந்தரங்கள் மதாந்தரங்கள் முதலிய அர்த்தவாதங்களை அஞ்ஞானிகளாகிய லௌகிகர்களின் திருப்தியர்த்தமாய்

உபசாரமாகக் கூறியனவே யன்றி நிசமாகக்கூறவில்லை. வேதாந்த சாஸ்திர பரிசய முடையவர்க்கே இவற்றின் யதார்த்தம் வெள்ளிடைமலைபோல் விளங்கும். ஸ்திரீகளைச் சாமான்னியராகத் தத்துவார்த்த வேதிகளென்னும் மகான்கள் தூஷித்தா ரென்பதற்குப் பிரபலப்பிரமாணங்க ளிருக்கின்றன.

## யாக்ஞவல்கோபநிஷத்.

* கேசகஜ்ஜல தாரண்யோ துஸ்பர்சா லோசனப்ரியா:
துஷ்க்ருதாக்நி சிகாநார்யோ தகந்தி த்ருணவன்னரம்"
ஜ்வலிதா அதிரூபாச்ச ஸரஸா அபி நீரஸா:
ஸ்திரீயோஹி நரகாக்நீநா மிந்தனம் சாருதாருணம்
காமநாம்நா கிராதேந விகீர்ணா முக்தசேதஸ:
நார்யோ நரவிகங்காநா மங்கபந்தன வாகுரா:
ஜந்மபல்வல மத்ஸ்யாநாம் சித்தகர்த்தம சாரிணாம்
பும்ஸாம் துர்வாசநாரஜ்ஜுர் நாரீபடிச பிண்டிகா
ஸர்வேஷாம தோஷரத்நாநாம ஸுஸமுத்கிகயாநயா
துக்கச்ருங்கலயா நித்ய மலமஸ்து மமஸ்த்ரியா
யஸ்யஸ்திரீ தஸ்யபோகேச்சா நிஸ்திரீகஸ்ய கவபோகபூ:
ஸ்திரீயந்த்யக்த்வா ஜகத்யக்தம் ஜகத் த்யக்த்வா ஸுகீபவேத்.

---

* [illegible]

(இ-ள்). மைதீட்டிய கண்களை யுடைய ஸ்திரீகளைப் பார்க்கச் சுந்தரமா யிருந்த போதிலும், அவர்களைத் தீண்டலாகாது; அவர்களுடைய ஜுவாலைக் கொப்பாடல் கூடாது; அக்கினி யானது காட்டங்களைச் சுட்டுச் சாம்பலாக்குவது போலப் புருஷர்களைப் பாவமாகிய சுடரா லவர்கள் தகித்துப் பாழ்செய்வார்கள்; மன்மதனென்னுங் கிராதகன் புருஷர்களென்கிற பட்சிகளைப் பெண்களென்னும் வலைகளைப் போட்டுப் பிடித்துப் பாதிக்கின்றனன். ஜன்மமென்னுங் குளத்தினது சித்த மென்னுஞ் சேற்றில் சஞ்சரிக்கும் புருஷரென்னும் மீன்களைத் துராசையென்னும் கயிற்றிற் பிணைத்து ஸ்திரீகளென்னுந் தூண்டில் முள்ளைப் போட்டு மன்மத வலைஞன் பிடித்து மோகாக்கினியிற் சமைக்கிறான்; துக்க சொரூபமாகிய ஸ்திரீகள் புருஷர்களுக்குக் கால்விலங்கு போன்றவர்கள். எவனுக்கு ஸ்திரீயுண்டோ அவனுக்குப் போகத்தி லிச்சை யுண்டாம். ஸ்திரீ இல்லாதவனுக்குப் போக விச்சை யுண்டாகாது. ஸ்திரீயின் பற்றொழிந்தாற் சகத்தின் பற்றொழியும்; சகத்தின் பற்றொழிந்தால் சுகவாழ்வு மாகின்றனன்.

## துவாதசமஞ்சரி.

† நாரீ ஸ்தநபார நாபீதேசம் த்ருஷ்ட்வா மாகாமோகாவேசம்
ஏதன்மாம்ஸ வஸாதி விகாரம் மனஸி விசிந்திய வாரம் வாரம்.

(இ-ள்). ஸ்திரீகளுடைய ஸ்தனங்களைப் பார்த்து விகாரமடைகின்றார்கள். அவற்றிலுள்ள மாமிசத்தையும், சரீரஸ்தானத்தி லுள்ள மலமூத்திராதிகளையும் கிலைநீர் நிரம்பிய குடல்களையும் சிந்திக்கில் அவை மிகு விகாரமுள்ளன வாகையால், அவர்களிடத் துண்டாகிய பிரீதியை நீக்கிவிடு.

## மகாவாக்கிய ரத்தினாவளி.

‡ ஆதிமத்யா வஸாநேஷு துக்கம் ஸர்வ மிதம் யத꞉
ஸ்திரீபந்த்யக்த்வா ஜகந் த்யக்தம் ஜகத்யக்த்வா ஸுகீ பவேத்.

---

† நாரீஸ்தநபர நாபீதேசம் த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம்
ஏதந்மாம்ஸ வஸாதிவிகாரம் மநஸி விசிந்தய வாரம்வாரம்.

‡ ஆதிமத்யாவஸாநேஷு து꞉கம் ஸர்வமிதம் யத꞉
ஸ்த்ரீஸங்கம் த்யக்த்வா ஜகத் த்யக்தம் ஜகத்த்யக்த்வா ஸுகீ பவேத்.

(இ-ள்). சம்சாரத்திற்கு மூலமாய்ப் பெண்ணாகிவந்த மனையாளிடத்துக் காலத் திரயத்திலும் துக்கமே சம்பவிக்கும். ஸதிரீயை விட்டால் சகத்து நீங்கும்; சகத்தைக் விட்டால் சுகமடைவார்கள்.

பட்டினத்தார்.

பெண்ணாகி வந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட் டென்னைக்
கண்ணால் வெருட்டி முலையால் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
வெண்ணா தனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே.

குறுந்திரட்டு.

மாதி யானத்தின் மந்திரத் தாலிடும்
பூதி யால்விடப் போகப் படாதுநா
லோதி யாது முணர்ந்தவ ருள்ளமும்
பேதி யாநிற்கும் பெண்ணெனும் பேயரோ.
கூடிற் கைபபொரு ளியாவையுங் கொள்ளுவா
வீடி லாருயிர் தன்னையும் வீட்டுவ
ராட வற்கிவ் வரிவைய ரொப்பதோ
கேடு முண்டோ முழுதுங் கெடுப்பதே.

பத்திரகிரியார்.

கால்காட்டிக் கைகாட்டிக் கண்காண் முகங்காட்டி
மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்
ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்.

சடகோபர்.

சதிரிள மடவார் தாழ்ச்சியை மதியார்.

ஞானவாசிட்டம்.

முதுதுயர் பூட்டாற் பூட்டி முடிவில்கா மாதி யென்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவைய ரின்பம் வேண்டேன்
இதுதசை யிது நெய் தோலென் பிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாஞ் சிறிது நாளில்.

என்றுள்ள பிரமாணங்களால் கிஞ்சித்தேனும் தத்துவவித்துக்கள் ஸ்திரீகளை விரும்பினார்களென்று தெரியவருகின்றதா? காலத்திரயத்திலும்தத்துவவேதிகள் ஸ்திரீகளைச்சுகவடிவமாக நினைக்க

மாட்டார்கள். இந்தச்சாஸ்திரங்களின் முன் உம்முடையகற்பித
புராணாதிகள் நிற்குமா? உமககன்னியமா யிருந்து சதா துக்கத்தைத்
தருவதற்கு மூலமாயுள்ள பெண்சாதிக்கு நீர் பயப்படுவது உம்மி
லும அவளுக்குத் தேகபலமும் மனோவியாபகபலமும் அதிகமா
யிருக்கின்றனவென்பதையன்றோ காட்டுகின்றது; அல்லது வித்
தியா புத்திசாமார்த்திய சம்பத்து முதலிய வற்றாலோ? அல்
லது மற்றெதனாலோ அதிகமென் றவளுக்கு பயப்படுகின்றீர்.
ஸ்திரீகளிடத்தில் வியாமோகப்பட்டு அவர்களுககு வஸ்யராகி
அவர்கள் கையிலகப்பட்டுக் குரங்குக் குட்டிகளை யாட்டுவதைப்
போல் அவர்களாட்டநீராடுகின்றீரல்லவா? இம்மாத்திரத்திற்கு
அவர்களைச் சிலாகித்துச் சொல்லுகின்றீர்.

உம்மிடத்திற் புருஷத்துவ மிருந்தால் இவ்வாறு வெட்க
மற்ற வார்த்தைகளை யுபயோகப் படுத்த மாட்டீர். மேலும்,
நீர் பெண்சாதி முகம் பார்த்த மாத்திரத்தில் துக்கங்க
ளனைத்தும் நாசமா மென் றியம்பினீரல்லவா? அவள் முகத்தைக்
கண்ணுற்றபோதே காம விகாரமாகிய துக்கமும், சுக்கில விமோ
சன மாகிய துக்கமும், வியாதி வருமோ வென்கிற துக்கமும்,
அவள் கோரியபடி வஸ்திராபரணமும், சீனி மணிலா கற்கூர் முத
லிய பழவர்க்கங்களும், மஞ்சள் குங்குமம் புஷ்ப சந்தன தாம்பூ
லாதி மிட்டாய்த்தினுசுகளும்கொண்டு தருவதற்குச் சக்தி இல்லா
மையா லவள் பிறர் கைவசப் படுவாளோ வென்கிற கிலேசமும்,
வியபிசாரஞ்செய்து வருகின்றாளோ வென்கிற சந்தேகமும், இனி
யெப்படி யாகுமோ வென்னுந் திகிலும்; மற்று மனந்த வேதனை
களும், உண்டுபண்ணுகின்ற ஸ்திரீகளை யெவ்வாறு பரமானந்த சுக
தாயக மென்று சொல்லக் கூடுமென்று கேட்டார். கேட்ட கேள்
விகளுக்குத் தகுந்த விடை சொல்லத் தோன்றாமலும் தப்பித்துப்
போவதற்கு வழி காணாமலும் மௌனத்தை அவலம்பித்துத்
திருடனைப்போன்று விழித்துக் கொண்டு தலையும் வாலுந் தறித்த
பனைமரம் போல் அவன் நிற்பதைக் கோர்ட்டார் பார்த்து இவனை
ஈடணாத்திரய விலங்கு போட்டு ஜனன மரணசம்சார மென்
கிற சுழற் காற்றினில் திருப்புங்களென் றேவாலளர்களுக்கு
ஆக்கியாபித்து, மூன்றாவது சாட்சியாகிய புத்திராத்மாவை யழை
யு மென்றார்.



## 3-வது சாட்சிபுத்திராத்மன் விசாரணை

### விருத்தம்.

புத்திர னன்றி முத்தி பொருந்துவ தில்லை பெற்ற
புத்திரன் சொல்லை யன்றிப் புகலுநற் சுகம தில்லை
புத்திர னன்றி யான்மா புவியில்வே றில்லை யென்னும்
புத்திராத் மாவும் வந்து பொருந்தச்சொல் சாட்சி சொல்வாம்.

தான் பிடித்ததைச் சாதிக்கும் கோரமுட புத்தி, யென்கிற பிரதிவாதி வகில் எழுந்து புத்திராத்மா வென்னுஞ் சாக்ஷியை யழைத்து,சர்வ சக்தியுடைய சத்குரு ப்ரபு சக்கிரவர்த்தியவாகள் சன்னதியில் நிஜந்தவிர வேறெதுவுஞ் சொல்லுவ தில்லை, நான் சொல்வ தெல்லாஞ் சத்திய மென்று பிரமாணஞ் செய்வித்து, தன் கட்சியை ருஜுபடுத்தும் நிமித்தமாய்க் கோரட்டார் முன்னிலையிற் கேட்குங் கேள்விகள்:

பி. - உம்முடைய பெயரென்ன?

உத். - புத்திராத்மா.

பி. - பிரகிருத கேசின் தாவா சொத்தாகிய நானென்னும் பொருளை அறிவீரா?

உத். - புத்திரனை ஆன்மாவென் றறிவன்.

பி. - எவ்வாறு புத்திரனை ஆன்மாவென் றறிந்தீர்.

உத். - சதாநந்தமா யிருப்பதால்.

பி. - புத்திர னெங்ஙனஞ் சதாநந்தமா யிருக்கின்றான்.

உ. - அண்டை வீட்டுச் சேஷய்யனுக்குப் புத்திரனில்லாமை யால் அவன் சதாதுக்க மடைந்து வருகிறான். எனக்குப் புத்திர னிருப்பதினால் நான் எக்காலமுஞ் சுகமா யிருக்கிறேன்.

பி. - நீர் புத்திரனே ஆன்மா வென்பதற்குச் சுருதி யுத்தி யநுபவங்கள் யாவை?

### சுருதி.

"ஆத்மாவை புத்ரநா மாஸி, புத்ரேண லோகான்ஜயந்தி
அபுத்ரஸ்ய கதிர்நாஸ்தி ஸ்வர்கோ நைவச நைவச,

* தஸ்மாத் புத்ர முகந்த்ருஷ்ட்வா பவேத் பச்சாத் திவாபஸஃ புந்நாம்நோ நரகாத்ராய தேஸ்வயம், தஸ்மாத் புத்ரயிதி ப்ரோக்த ஸ்வயமேவ ஸ்வயம்புவஃ'

(இ-ள்). ஆன்மாவே புத்திரனு யிருக்கிறான்; புத்திரனுலிந்த லோகத்தை ஜயிக்கலாம்; புத்திரனற்றவர்க்குச் சுவர்க்காதிபோக மில்லை. புத்திரன் முகத்தைப் பார்த்த வளவில் பரமாநந்தம் வாய்க்கும்.

† "புத்ரேபுஷ்டே அஹமெவ புஷ்ட:
புத்ரே நஷ்டே அஹமெவ நஷ்ட:"

(இ-ள்.) புத்திரனது புஷ்டியுண்டாக யான் புஷ்டி படைவேன், அங்ஙனமே புத்திரனது நஷ்டமுண்டாக யான் நஷ்டமடைவேன்.

‡ "ஆத்மாவை ஜாயதே புத்ர:" (இ-ள்). ஆத்மாவே புத்திரனுகப் பிறந்தான்.

பாரதம் ஆதிபர்வம்.

கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சுஞ்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடி மகிழ்ச்சி மைந்த
ரில்லாத வர்க்கு மனைவாழ்வி னினிமை யென்னும.

பிரமோத்திர காண்டம்.

உந்து நீர்க்கட லுடுத்தபார் முழுவது மொருங்கே
வந்து தாடொழு மரசியல் வளமெலாம் பெறினு

---

* 𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑍈 𑌪𑍁𑌤𑍍𑌰𑌨𑌾𑌮𑌾𑌸𑌿 । 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌜𑌯𑌤𑌿 ।
𑌅𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌗𑌤𑌿𑌰𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍋 𑌨𑍈𑌵 𑌚 𑌨𑍈𑌵 𑌚 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌤𑍍𑌰𑌮𑍁𑌖𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌤𑍍𑌰𑌿𑌵𑌾𑌪𑌸𑌃
𑌪𑍁𑌨𑍍𑌨𑌾𑌮𑍍𑌨𑍋 𑌨𑌰𑌕𑌾𑌤𑍍 𑌤𑍍𑌰𑌾𑌯 𑌤𑍇𑌸𑍍𑌵𑌯𑌂 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍁𑌤𑍍𑌰𑌯𑌿𑌤𑌿
𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵 𑌸𑍍𑌵𑌯𑌂𑌭𑍁𑌵𑌾

† 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇 𑌪𑍁𑌷𑍍𑌟𑍇 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑍁𑌷𑍍𑌟𑌃 ।
𑌪𑍁𑌤𑍍𑌰𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌨𑌷𑍍𑌟𑌃"

‡ "𑌆𑌤𑍍𑌮𑌾𑌵𑍈 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌪𑍁𑌤𑍍𑌰𑌃"

மிந்தி ராதியர் பெரும்பதத் திருக்கையெய் திடினு
மைந்த னின்றிய வாழ்வது வாழ்வுமற் றன்றே.

என்று வருவனவும் பிறவும் சாஸ்திர பிரமாணமாம். ஒரு தீபத்தில் மற்றொரு தீபத்தை யேற்றியவாறு குணரூபங்களால் என்னைப்போலென் புத்திரனிருப்பதே யுத்தி. எவ்வளவு துக்கம் நேரிட்டபோதிலும் புத்திரன் முகத்தைப் பார்த்தளவில் அது நீங்குவதும் பரமானந்த பரவசமுண்டாவதுமே பிரத்தியட்சானுபவம்; என்றுநின்றமாத்திரத்தில் வாதி வகீலெழுந்து செய்யுங்குறுக்குக் கேள்வி:

பி - ''ஆத்மோஹம்'' என்றவாறு நானென்னு மான்மாவை நீர்புத்திரனென்று சட்கவாதம் புரிவதற்காகக் காட்டிய பிரமாணங்களனைத்தும் சாதனமாகா. அவற்றிற்குத் தப்பு அர்த்தஞ் செய்வதா லென்ன பிரயோஜனமாம்? புத்திர சப்தத்திற்கு நிருக்தியாதெனத் தெரிந்திருக்குமாகின், இப்படி சொல்வதற் கஞ்சுவீர். மாம்சம் அஸ்தி சர்மம் இரத்தம் மலமூத்திர சமுதாய மந்திராகாரக் கிருமி விசேஷங்களோ அகண்டாகார சச்சிதானந்த பரிபூரணவஸ்து விசேஷமாகும். நானென்பதன் பொருளை நீரறிந்திலீர் போலும்! இந்த மானிட சரீரதத்துவஸ்திதியை, தேக தத்துவசாஸ்திர ஞானிகள் நெடுங்காலஞ் செய்த பரிசோதனையாற் கண்டதை நீரறிந்தீரா? அவர்கள் மானிட சரீரத்திலுள்ள மாமிசம் இரத்தம் ரேதசு மலமூத்திரங்களாதியவாயுள்ளவற்றில் அசங்கியமான கிருமி சமுதாயங்களிருக்கின்றனவென்றும், இவற்றை யாவும், மைக்ராஸ் கோப்பென்னும் பூதக் கண்ணாடிக் கொளுவியில் காணப்படுமென்றும், ஸ்திரீ புருஷர்கள் சம்சர்க்க சமயத்தில் ஸ்திரீயின் கருப்பத்தில் புகுகின்ற ஸ்கலிதமாகிற ரேதஸில் சில கிருமிகள் பிண்டகோசமாகிய கருக்குழியில் நிற்பதுமுண்டு; அவற்றுள் ஒன்றிரண்டு நாசமடையாமல் ஸ்திரீயின் கர்ப்பத்திலிருக்கும் இரத்தாதிகளை யாதாரமாகக் கொண்டு, கம்பிளிப் புழுக்கள் சுயமா யொருவித கவச மேற்படுத்திக் கொண்டு மற்றொரு ஆகிருதியாய் வெளியில் வருவது போல மனிதர் ரேதஸி லிருந்த கிருமிகளும் ஒரு கவசத்தை யேற்படுத்திக் கொண்டு அதில் நவமாசங்களில் கரசரணாதி அவயவங்களமையப் பெற்றுப் பத்தாவது மாசத்தில்

மாநுஷா கிருதியுடன் வெளிவருகின்றதென்றுங் கூறுவர். இக்குட் பிண்டோத்பத்தி சாஸ்திரங்களை விசிதமாக விரித்துக் கூறுவது அநாநுகூல மாதலினால் மிக சங்கிரகமாகக் கூறினோம். இவ்வாறு பரிணாமமடைந்து மாநுஷா கிருதி பொருந்தப் புத்திரனென்பவன் சுத்த சைதன்னியமாகிய உமது வடிவமாவதெப்படி? பிரபஞ்சத்தில் மனித சமானியர்கள் அநந்தவித பிராந்திகளடைந்த வண்ணம் அநர்த்தஜட துக்க வடிவமான புத்திராகிருதியை நாமென்னுஞ் சச்சிதாநந்த வடிவமாமென்று பிராந்தி கொள்வது தக்கதன்று. இதுபற்றிச் சிலவுபநிடதப் பிரமாணங்களைக் கேட்பாயாக.

## யாஞ்ய வல்க்யோப நிஷத்

* அலப்ய மாநதநய: பிதரௌ க்லேசமாப்நுத:,
லப்தேஹி கர்ப பாதேந ப்ரஸவேநச பாததே,
ஜாதஸ்ய க்ரஹரோகாதி குமாரஸ்யச தூர்ததா
உபநீதெப்ய வித்யத்வ மநுத்வாஹச்ச பண்டிதே!
யூநச்ச பரதாராதி தாரித்ரயஞ்ச குடும்பிந:
புத்ரதுக்கஸ்ய நாஸ்த்யந்தோ தநீசேந் ம்ரியதேததா
ஏவம் விவிச்ய புத்ரேஸௌ ப்ரீதிம த்யக்த்வா நிஜாத்மநி
நிச்சித்ய பரமப்ரீதிம் வீக்ஷ்யதெ தததஹர்நிசம்.''

(இ-ள்) தாய்தந்தைகளுக்குப் புத்திரனில்லாதபோதும் துக்கம்; கருக்குழியிலிருந்த போதுந் துக்கம்; அக்கரு வழிந்த போதும் துக்கம்; பூமியிலுதித்தபோதுந் துக்கம்; வளர்ந்து வருகிறபோதுந் துக்கம்; கிரகரோகங்களினாலுந் துக்கம்; குமார பருவத்திலுந் துக்கம்; உபநயன வித்தியாப்பியாசங்களினாலுந் துக்கம்; புத்திரனால் சர்வதா துக்கமே யநுபவிக்க வேண்டி வருவதால் புத்திரன் மீது

* ''𑌅𑌲𑌬𑍍𑌧𑌮𑌾𑌨𑌤𑌨𑌯𑌃 𑌪𑌿𑌤𑌰𑍌 𑌕𑍍𑌲𑍇𑌶𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌤𑌃
𑌲𑌬𑍍𑌧𑍇 𑌹𑌿 𑌗𑌰𑍍𑌭𑌪𑌾𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑍇𑌨 𑌚 𑌬𑌾𑌧𑌤𑍇
𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌗𑍍𑌰𑌹𑌰𑍋𑌗𑌾𑌦𑌿 𑌕𑍁𑌮𑌾𑌰𑌸𑍍𑌯 𑌚 𑌧𑍂𑌰𑍍𑌤𑌤𑌾
𑌉𑌪𑌨𑍀𑌤𑍇𑌽𑌪𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍍𑌵 𑌮𑌨𑍁𑌦𑍍𑌵𑌾𑌹𑌶𑍍𑌚 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑍇
𑌯𑍂𑌨𑌶𑍍𑌚 𑌪𑌰𑌦𑌾𑌰𑌾𑌦𑌿 𑌦𑌾𑌰𑌿𑌦𑍍𑌰𑍍𑌯𑌂 𑌚 𑌕𑍁𑌟𑍁𑌮𑍍𑌬𑌿𑌨𑌃
𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑍋 𑌧𑌨𑍀 𑌚𑍇𑌨𑍍𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌥𑌾 ॥
𑌏𑌵𑌂 𑌵𑌿𑌵𑌿𑌚𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌽𑌸𑍌 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌨𑌿𑌜𑌾𑌤𑍍𑌮𑌨𑌿
𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌂 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇 𑌤𑌦𑌹𑌰𑍍𑌨𑌿𑌶𑌂''

வைத்திருக்கும் ஆசக்தியை யாவரும் விட்டு ஆத்து மார்த்தத்திற் பரமப் பிரீதியை வைக்கவேண்டும்.

குசேலோபாக்கியானம்.

" மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பம்
கதமுறு காலர் வந்து கைப்பற்றிற் கணக்கி றுன்பம்
இதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மானல்.

பிரபோதசந்திரோதயம்.

" சடமீது கிருமிப்பை தானென்றன் மலமோ
டிடர்மேவு புண்ணோ டெழுக்கண்ட துண்டே
யுடன்மீதிவ் வுடல்போ லுதிக்கின்ற புழுவைத்
திடமான மகவென்று சீராட லென்னே.

நாரதசரிதை.

புழுமலக் குருடன் மூழ்கிப் புலால்கமழ் வாயிற் றேய்ந்து
விழுமவை குழவி யென்றும் விளங்கிய காளையென்றும்
பழுதுறு பிறவு மாகிப் பலபெயர் தரித்த பொல்லாக்
குழுவினை யின்ப மாகக் கொள்வரோ குருடு தீர்ந்தார்.

இவைபோன்ற பிரமாணங்கள் பலவுண்டு. துக்க சொரூபமாயுள்ள புத்திரர்க ளற்றவர்களுக்குச் சத்கதியில்லை என்பது எப்படி பொருந்தும்? தான் தன்னியனுனல் தனயர்க ளெற்றிற்கோ? சுகர் நாரதர் மார்க்கண்டர் முதலிய பெரியோர்கள் பெண்சாதி பிள்ளைகளை ஆர்ஜிக்காமல் உலகில் வியர்த்தர்க ளாயினரோ? திருதராஷ்டிரனுக்குத் தண்டியாய் நூறுபிள்ளைக ளிருந்தும் அவர்கள் தகப்பனை இரக்ஷித்தார்களா? இவற்றைக் கவனித்துப் பார்த்தால் புத்திரனுல்வருந்துன்பந்தெரியவரும். இங்குக்காட்டியபிரமாணங்களா லும்முடைய சுருதி யுக்திகள் அடிப்பட்டுப்போயின. நீர் புத்திரனை நானெனல் கூடுமோ? எனது புத்திரனென்று கூறுவதேனே?என்னுடைய புத்திரனெனின், நீர் வேறு நின்னுடைய புத்திரன் வேறென்று தோன்ற வில்லையா? மேலும், புத்திரனே ஆனந்தமென்பதற்கு அடுத்த வீட்டுச் சேஷையங் காரைச் சாட்சி காட்டினீரல்லவா? அவன் புத்திர னில்லாமற் சதா துக்க சாகரத்தில் முழுகினுனென்றீ ரல்லவா? நீர் புத்திரன் சதாக்ஷேமமா

யிருப்பதற்காகச் சதா விசன மடைந் திருக்கின்றீ ரல்லவா? புத்திரனே ஆத்மா வென்கிற சுருதி ஸ்மிருதிகள் சாமானிய ஜனங்களுக்கு உபசாரமாகக் கூறினவேயன்றி யதார்த்தமாகக் கூறவில்லை. தகப்பன் சுகுணனாகில் புத்திரன் துர்க்குண சிகாமணியா யிருக்கிறான்; தகப்பன் துர்க்குணனா யிருந்தால் புத்திரன் சுகுணனா யிருக்கிறான். தகப்பன் பண்டிதனாகில் புத்திரன் நிரக்ஷர குட்சியா யிருக்கிறான். தகப்பன் எழுத்து வாசனை யறியாதவனா யிருந்தால் புத்திரன் மகாகவீச்சுரனாயிருக்கிறான். இவ்வாறுயுள்ள உலகநடையைச் சிறிதேனு மறியாது மனம் போனவாறு சொல்லுகின்றீர். புத்திரனைப் பார்த்த மாத்திரத்தில் துக்க நாசமா யானந்தப் பிராப்த்தியாமென்றீரல்லவா? க்ஷுத்பாதைமுதலிய வியாதிவந்தபோது போஜனாதி அவுஷத மில்லாமல் உம்முடைய புத்திரனைப் பார்த்த மாத்திரத்தில் பசியும் வியாதி முதலிய துக்கமும் நீங்குகின்றனவா? புத்திரனே யாத்மாவாயின், புத்திர னுத்பத்தி யாவதற்கு முன்னும் உற்பத்தி யாவதற்குப் பின்னும் இறந்த போதும் இதர தலங்களுக் கவன் போயிருந்த போதும் நீ ரிருந்தீரா? இல்லையா? மேலும், ஆன்மா வென்பது ஏகத்துவத்தைப் பொருந்தி யிதர லக்ஷணங்களுக் கிடமில்லா திருக்க வேண்டும். அவ்வாறின்றிப் பிறக்கும் பிள்ளைகள் ஒரு லக்ஷணமற்று அநேக லட்சணங்களுட னிருப்பானேன்? ஆத்துமாவைச் சேர்ந்தது எந்த லக்ஷணமா மென்றிப்படி யனேகமாகக் கேள்விகள் கேட்கும்போது எதற்கும் விடைசொல்லத் தெரியாமல் உன்மத்தம் பிடித்தவனைப் போன்று விழித்திருந்தான். அதைக் கோர்டார் பார்த்து இவன் அபபிரமாண சாட்சி யெனவறிந்து இவனை அஞ்ஞான மென்கிற காடாந்த கார கிடங்கிற்றள்ளி, விஷயாநந்த விலங்குகளைக்கால்களிற் பூட்டிப் புத்திரேஷணை யென்னும் சர்பங்களினு லிம்சிக்கும்படி ஏவலாளர்களுக் காக்கியாபித்து நான்காவது சாட்சியை அழைக்கும்படி சொன்னார்கள்.





## 4-வது சாக்ஷி தேகாத்மன் விசாரணை.

### விருத்தம்.

மோகத்தாற் றவமேஞ் ஞான்று முயன்றநு பவித்த முன்னே
ரூகித்துப் பதினன் கென்று முரைக்கின்ற புவன மாதி
போகத்துக் கேது வாகிப் பொருப்பெனப் பெருத்தி ருக்குந்
தேகத்தை யான்மா வேன்று செப்புநற் சாட்சி சொல்வாம்.

பிரதி வாதி வகீல் கோர மூடபுத்தி யென்பவ னெழுந்து சாட்சியாகவந்த தேகாத்மவாதியைக் கோர்ட்டார் முன்பாக நிறுத்தி நீல பருவதத்திற்குச் சமானமாகிய நீர் எவருடைய குமாரர்? உம்முடைய பெயரென்ன? என்று வினவினன். அவ்வினவிற்குத் தேகாத்மவாதி.

உத்-என்னுடைய தந்தையின் பெயர் புத்திராத்மா; என்னுடைய பெயர் தேகாத்மா.

பி- நீர் எவ்விதமாகப் புத்திராத்மா வென்பவருக்கு ஜனித்தீர்?

உத்- என் தகப்பனுடைய சுக்கில பலத்தினற் பிறந்தேன்.

பி- நீர் நானெனனும் ஆன்மாவை அறிவீரா?

உத்- ஆன்மா வென்ப திந்தத்தேக மன்றி மற்றெதுவு மாக மாட்டாதென்று மிக நன்றாக வறிந்திருக்கின்றேன்.

பி - தேகமே ஆன்மா வென்பதற்குச் சுருதி யுக்தி யநுபவங்களெவை?

உத் - ‡ "ஸவாஎச புருஷோந்ந ரசமய: தேஹோஹம்" "ஆத்மைவதேகமய:." "சரீர மாத்யங் கலுதர்ம ஸாதநம்" என்று சுருதியும், திரிஷிதோ தக்கி மூடோஹம் ஹஸ்த பாதாதி மாநஹம் இதிபாவன ரூபேண வ்யவஹாரேண பத்யதே" என்று வஷிட்டரும், இவ்வாறு மற்றவரும் சொல்லுகின்ற வாக்கியங்களே சாஸ்திரப்பிரமாணமாம்.

---

‡ "𑌸 𑌵𑌾 𑌏𑌷 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌨𑍍𑌨𑌰𑌸𑌮𑌯𑌃 𑌦𑍇𑌹𑍋𑌽𑌹𑌮𑍍"
"𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌦𑍇𑌹𑌮𑌯𑌃" "𑌶𑌰𑍀𑌰𑌮𑌾𑌦𑍍𑌯𑌂 𑌖𑌲𑍁 𑌧𑌰𑍍𑌮𑌸𑌾𑌧𑌨𑌮𑍍"
𑌤𑍃𑌷𑌿𑌤𑍋𑌽𑌹𑌂 [illegible] 𑌮𑍂𑌢𑍋𑌽𑌹𑌂। 𑌹𑌸𑍍𑌤𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌮𑌾𑌨𑌹𑌂।
𑌇𑌤𑌿 𑌭𑌾𑌵𑌨𑌰𑍂𑌪𑍇𑌣 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍇𑌣 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇.

தேகம் நசித்த பிறகு போகங்களை யநுபவிப்பதற்கு ஏது வில்லாமையால், தேகமுள்ளபோதே சகல புவன போகங்களும் அநுபவிக்கப் படுகின்றன; ஆதலால், இதுவே யுத்தியாம்.

இவ்வுலகத்தி லெது நன்று யிருந்தாலும் ஆனந்தங் கிடைப் பதில்லை; தேகம் மிகுசுந்தரமாய் ஆரோக்யமா யிருந்தால் ஆனந் தங் கிடைக்கின்றது. இதுவே அநுபவமாம்.

அவ்வாறவன் கூறிய போது வாதி வகீல் எழுந்து கோர்ட் டாரைப் பார்த்து இந்தச் சாட்சியானவர் லோகாயத சார்வாகாதி மதஸ்தர்களுடன் கூடித் திருசியமான ஸ்தூல தேகேந்திரியாதி சங்காதங்களை ஆன்மாவாக வறிந்து தமது மதம் சுருதி சம்மத மா மென்பவர். இவர் மற்றையரை மோசஞ் செய்தற்கு விரோசன னுடைய சித்தாந்தத்தைப் பிரமாணமாகக் கொண்டிருப்பவராத லால் இவரைக் கோர்ட்டார் கவனித்தல் வேண்டுமென் றெச் சரிகை செய்து தேகாத்மவாதி யென்பவனை கேட்குங் குறுக்குக் கேள்விகள்:

பி- நீ யிந்த உடலையே ஆன்மா வென்று சொன்னீ ரல்ல வா? அப்படி யாயின், ஆத்மாவை யென் தேக மென்று சொல்லு தல் கூடுமா? மேலும், ஆத்மா ஒருவனுக்குப் புத்திரனைப் பிறப் பது முண்டா? நீர் எனது தகப்பனுடைய சுக்கிலத்திற்குப் பிறந்தே னென்று செப்பினீ ராதலால்,நீர் ஜடமாயிருத்தல் வேண் டும்; சித்தாயிருத்தல் கூடாது; சித்தா யிருப்பதற்குக் காரண மியாது?

உத்—என் பிதாமகனது சுக்கிலத்தி னின்று என்தந்தை பிறந்து சித்தாக விருந்த வாறு என் தகப்ப னுடைய சுக்கிலத்தி னின்று நான் ஜனித்துச் சித்தாக விருக்கின்றேன்.

பி-அந்தச் சுக்கிலத்தைச் சித்தாகச் சொல்ல லாமா?

உத்- சுக்கிலம் சித்தாதலினால், ஸ்தூலமுஞ் சித்தாக விருக் கின்றது.

பி - உம்மை எந்த ஜாதியானென்று உலகத்தார் சொல்லு கிறார் ?

உத் - என்னைப் பார்த்துப் பிராமணசாதி யென்று உலகத் தார்சொல்லி எனக்கு நமஸ்காராதி யுபசாரங்களைச் செய்கிறார்கள்.

பி - எவ்வாற்று உம்மைப் பிராமணஜாதி யென்பர்?

உத் - பாட்டன் முப்பாட்டன்மாரது காலத்தி லிருந்து பிராஹ்மண பரம்பரையிற் சேர்ந்திருந்த வென் தகப்பனர் கற்பத்தி லிருந் துற்பவித்த படியினலே, என்னையும் பிராஹ்மண வர்ணஸ்தனென்பார்கள்.

பி - உமது தகப்பனருடைய சரீரத்திலுண்டாகிய மலமூத்ராதிகளும், சுக்கில ரக்த்த ரோமாதிகளும், மற்றவையும் பிராமண ஜாதியாகவே யிருக்கவேண்டும். அவை என்ன காரணத்தினல் பிராமண ஜாதியாகாமல் போயின. மேலும், நீரிப்போது எப்படி ஜீவனஞ் செய்கிறீர்?

உத் - பஞ்ச விடயங்களை அனுபவிப்பதே எனது ஜீவனமாம்.

பிர - பஞ்ச விடயங்களை யெவருடைய உதவியா லனுபவித்து வருகிறீர்?

உ. தேகரூபியான என்னலேயே யானனுபவித்துவருகிறேன்.

பி. ஆனல், மரணத்திலும் சுழுத்தி மூர்ச்சைகளிலும் தேகரூபியாகிய நீரெந்த விஷயத்தை அநுபவித்து வருகின்றீர்? மேலும், இந்தத் தேகமெடுக்காத முன்னும், தேகம் நாசமாகிய பின்னும் நீ ரிருந்தீரா? இல்லையா? அது பற்றி யொன்று மறியேனென்றால், தேகத்துடன் நீர் கூடியிருந்த காலத்திலும் அது நிலத்தில் விழுந்து நித்திரையில் பிணம்போ லிருக்கும் காலத்திலும், சொப்பன காலத்திலும் வருதல் போதல் முதலிய வியாபாரங்கள் செய்தீரல்லவா? மேலும், உம்முடைய தேகத்தை ஞானமென்று நவிலுவீராயின், உமது தேகத்தி லிருந்து பெருகும் மயிர் நகம் மலமூத்திர முதலியனவும் ஞான சொரூபமா யிருத்தல்வேண்டும். இத்தேகத்திற் சேர்ந்தன வெல்லாம் முன்னிருந்த சொரூபங் கெட்டுப்பின் துர்க்கந்த முண்டாய்ப் போகின்றனவல்லவா? ஏனவ்வாறு போகவேண்டும். மேலும், பாதாதிகேசாந்த வரையிற்கூடியிருக்கின்ற அவயவங்களுள் எதனிடத்திலேனும் கொஞ்சமாகிலுஞ் சுகமிருக்கின்றதா? மேலும், உம்முடைய தேகத்தின்கணுள்ள ரோமத்திலொன்று அக்நபாநாதிகளி லிருக்கப் பார்த்தபோது அவை புசிக்க யோக்கியமா யிருக்கின்றனவா? உமது மயிர்களி லொன்றை யெடுத்து அக்கினியிற்போட்டு நீர்சமீபத்திலிருந்து சகிப்பீரா? அன்றியும், குறும்பி, பீளை, சளி,

மச்சில், வேர்வை, கபம், பித்தம், மலம், மூத்திரம், இரத்தம், சீழ், நரம்பு, எலும்பு, தோல், மாக்குப்பூச்சி முதலியவை சேர்ந்துள்ள இந்தத் தேகத்தில் அவை வெளிப்பட்ட போது அவற்றுள் எதனிடத்திலாகிலும் சுகமிருக்கின்றதென்று கடுகளவேனுங் காட்ட முடியுமா? இதனாற் சிந்தித்தேனு முடம்பிற் சுகமில்லை யென்பது விளங்கவில்லையா?

புராதனவசனம்.

† ஜன்மதுக்கம் ஜராதுக்கம் ஜாயாதுக்கம் புனः புனः,
ஸம்சார ஸாகரந் துக்கம் தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரதः,,

(இ-ள்). பிறக்கிறதும் துக்கம், ஜரைமுதலிய வியாதிகளாலும் துக்கம், இறக்கிறதும், துக்கம். நவநவமாகப் பிறக்கிறது பிறக்கிறதுமாய சம்சார சாகரந் துக்கம். ஆதலால் ஜாக்கிரதை ஜாக்கிரதை.

தேஜோபிந்தூப நிஷத்.

‡ தேஹோக மிதிபத்ஜ்ஞாநம் ததேவநரகம் ஸ்மிருதம்,
(இ-ள்). தேகமே நானென்கிற ஞானம் நரகமாம்.

நாரதபரிவிராஜகோபநிஷத்.

¶ அஸ்தி ஸ்தூணம் ஸ்நாயுபத்தம் மாம்ஸ சோணித லேபிதம்
சர்மாவபத்தம் துர்க்கந்தம் பூர்ணம் மூத்ரபுரீஷயோः
ஜராசோகஸமாவிஷ்டம் ரோகாய தநமாதுரம்,
ரஜஸ்வலமநித்யஞ்ச பூதாவாஸ மிமம் த்யஜேத்,
மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்தி ஸங்கதே,

---

† [Grantha text]
[Grantha text]

‡ [Grantha text]

¶ [Grantha text]
[Grantha text]
[Grantha text]
[Grantha text]
[Grantha text]

*தேகேசேத் ப்ரீதிமான்மூடோ பவிதா நரகேபிஸ:
ஸாகால ஸூத்ரபதவீ ஸா மகாவீசிவாகுரா
வாஸிபத்ர வநச்ரேணியா தேகேசாஹ மிதிஸ்திதி:
ஸாத்யாஜ்யா ஸர்வயத்நேந ஸர்வநாசேப் யுபஸ்திதே"*

(இ-ள்). எலும்பு தூணுயும், நரம்புகளாற் கட்டப்பட்ட தாயும்,மாம்ச மிரத்தமிவைகளாற் பூசப்பட்டதாயும், வியாதி யுடைய தாயும்,அழியத் தக்கதாயும், அழுக்குள்ளதாயும், பஞ்ச பூதங்களுக் கிருப்பிடமாயும் இருக்கிற இச்சரீரத்தில் (அபிமானத்தை) விட்டுவிட வேண்டும். மாம்சம் இரத்தம் சிழ்மலமூத்திர நரம்பு கொழுப் பென்னு மிவற்றின் கூட்டமாகிய தேகத்திற் பிரிதியை வைத்திருக்கிற மூடன் நரகத்திலும் பிரீதி யுடையவனு யிருப்பன். தேகமேநானென்கிற பாவம் எதுவோ அதுதான் 'காலசூஸ்திரம்' என்கிற நரகஸ்தானம்; அதுதான் 'மகாவீசிவாகுரா' என்கிற நரகம். அதுதான் 'அசிபத்திரவநச்சிரேணி' என்கிற நரகம்.(ஆகையால்)தேகமே ஆத்மாவென்கிற பாவமானது சகலமும் நாசமடைந்தாலும் தள்ளத்தக்கது.

மைத்திராயண்ணி . யுபநிஷத்.

$ *அஸ்திசர்ம ஸ்நாயுமஜ்ஜா மாம்ஸ சுக்ல சோணித ஸ்லேஷ்மாச்ருதூஷிகா விண்மூத்ர பித்தகபஸங்காதே துர்க்கந்தெ நிஸ்ஸாரெஸ்மின் சரீரே கிம்காமோப போகை-"*

(இ-ள்). எலும்பு தோல் நரம்பு கொழுப்பு சதை சுக்கிலம் சோணிதம் சிலேஷ்மம் கண்ணீர் மலமூத்திரம் வாதபித்த கூட்டமாயிருக்கிறதும், துர்க்கந்தமானதும், சாரமற்றதாயுமிருக்கிற இந்தச் சரீரத்தில் காமாநுபோகத்தினுலென்ன பிரயோஜனம்.

---

𑌦𑍇𑌹𑍇𑌚𑍇𑌤𑍍𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌮𑌾𑌨𑍍𑌮𑍂𑌢𑍋 𑌭𑌵𑌿𑌤𑌾 𑌨𑌰𑌕𑍇𑌽𑌪𑌿𑌸𑌃
𑌸𑌾𑌕𑌾𑌲𑌸𑍂𑌤𑍍𑌰𑌪𑌦𑌵𑍀𑌸𑌾𑌮𑌹𑌾𑌵𑍀𑌚𑌿𑌵𑌾𑌗𑍁𑌰𑌾𑌃
𑌸𑌾𑌽𑌸𑌿𑌪𑌤𑍍𑌰𑌵𑌨𑌶𑍍𑌰𑍇𑌣𑍀𑌯𑌾𑌦𑍇𑌹𑍇𑌽𑌹𑌮𑌿𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃
𑌸𑌾𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌾𑌸𑌰𑍍𑌵𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌨𑌾𑌶𑍇𑌽𑌪𑍍𑌯𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑍇

$" 𑌅𑌸𑍍𑌥𑌿𑌚𑌰𑍍𑌮𑌸𑍍𑌨𑌾𑌯𑍁𑌮𑌜𑍍𑌜𑌾𑌮𑌾𑌂𑌸 𑌶𑍁𑌕𑍍𑌲𑌶𑍋𑌣𑌿𑌤𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌾𑌶𑍍𑌰𑍁 𑌦𑍂𑌷𑌿𑌕𑌾𑌵𑌿𑌣𑍍𑌮𑍂𑌤𑍍𑌰𑌪𑌿𑌤𑍍𑌤𑌕𑌫𑌸𑌂𑌘𑌾𑌤𑍇 𑌦𑍁𑌰𑍍𑌗𑌨𑍍𑌧𑍇 𑌨𑌿𑌃𑌸𑌾𑌰𑍇 𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌕𑌿𑌂𑌕𑌾𑌮𑍋𑌪𑌭𑍋𑌗𑍈𑌃

## விவேக சூடாமணி

¶ *"மாதா பித்ரோர் மலோத்பூதம மலமாம்ஸ மயம் வபு:*
*த்யக்த்வா சண்டாலவத் தூரம ப்ரஹ்மீபூய க்ருதீபவ"*

(இ-ள்). *தாய் தந்தைகளுடைய மலத்தினால் பிறந்த மலமாம்ஸ விகாரமான சரீரத்தைச் சண்டாளனைப்போலத் தூரத்தில்விட்டுப் பிரஹ்மசாயுஜ்யத்தை யடைந்து பண்டிதனுவாய்"*

† *"பூர்வம்ஜநேரபிம்ருதேரபி நாயமஸ்தி ஜாதக்ஷண: க்ஷண குணோநியதஸ்வ பாவ: நைகோ ஜடச்சகட வத்பரித் ருஸ்யமாந. ஸ்வாத்மா கதம்பவதி பாவ விகாரவேத்தா"*

(இ-ள்). *பிறப்பதற்கு முன்னும் இறப்பதற்குப் பின்னும் இல்லாதஇந்தத்தேகம், க்ஷணகால மிருப்பது; க்ஷணகுணமுடையது; நியமமற்ற சுபாவமுடையது; கடத்தைப் போன்று ஜடமாய்த்தோன்றுவது. இவ்வாறுடையது தன்னுத்துமாவென் றெவ்வாறும்.*

## பட்டணத்தார்.

*ஊத்தைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த*
*பீற்றத் துருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய*
*காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே*
*யேற்றுத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி யேகம்பனே.*

## மகாராஜா துறவு.

*"தோலி ரத்த மெலும்பிறைச்சி சுக்கில மேதை மச்சையொன் றுய்த், தூலி கரித்த வுடம்பாகுந் தொட்ட வெவையுந் தன்வடி வாய்க், கோலி யடக்கிக் கொளுமிதனைக் கூறு கூறு நோக்காது போலி யுணர்வோர் மகிழ்வெய்தும் புனித மென்றும் பரமபதம்.*

## தாயுமானவர்.

*புன்பு லானரம் பென்புடைப் பொய்யுட*
*லன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ*

---

¶ 𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑍍𑌰𑍋𑌰𑍍𑌮𑌲𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌮𑌲𑌮𑌾𑌂𑌸𑌮𑌯𑌂 𑌵𑌪𑍁𑌃।
𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌚𑌾𑌣𑍍𑌡𑌾𑌲𑌵𑌦𑍍𑌦𑍂𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍀𑌭𑍂𑌯 𑌕𑍃𑌤𑍀𑌭𑌵

† 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌜𑌨𑍇𑌰𑌪𑌿 𑌮𑍃𑌤𑍇𑌰𑌪𑌿 𑌨𑌾𑌯𑌮𑌸𑍍𑌤𑌿 𑌜𑌾𑌤𑌕𑍍𑌷𑌣𑌃 𑌕𑍍𑌷𑌣𑌗𑍁𑌣𑍋𑌽𑌨𑌿𑌯𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃। 𑌨𑍈𑌕𑍋 𑌜𑌡𑌶𑍍𑌚𑌘𑌟𑌵𑌤𑍍𑌪𑌰𑌿𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌥𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌵𑌵𑌿𑌕𑌾𑌰𑌵𑍇𑌤𑍍𑌤𑌾.

வெண்பொ லாமணி யேயிறை யேயித்தாற்
றுன்ப மன்றிச் சுகமொன் றுமில்லையே.
சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போது மென்ப தெந்நாளோ.
காக்கைநரி செந்நாய் கழுகொருநாள் கூடியுண்டு
தேக்குமிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ.
நாற்றமிகுக காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ.

## பைங்களோபநிஷத்.

* அந்நர சேநைவ பூத்வாந் நரசே நாபிவ்ருத்திம் ப்ராப்யந் நரசமயப் ருதிவ்யாம் யத்விலீயதே ஸோந் நமயகோசஃ. ததேவ ஸ்தூலசரீரம்.

(இ-ள்). எது அந்நரசத்தினாலே யுண்டாய் அந்ந ரசத்தினாலே விருத்தி யடைந்து அந்த சொருபமான பிருதிவியிலே லயமடைகிறதோ அஃது அந்நமயகோசம்; அதுவே ஸ்தூலசரீரம்.

இவ்வனமாகப் பிரமாணங்க ளிருக்கவே அறியீர் போலும்; அநர்த்தசட துக்கசொரூபமாயுள்ள அசங்கிய தேகத்தையா பிராமணனுக்கு உத்பவித்த தென்றும் பிராமண னென்றும் சொல்லுகின்றீர். எக்காலத்திலேனு மிது பிராமண னாகுமா? பிராமண லட்சணங்களை ஒருகாலத்திலும் நீர்கேட்டறியீர் போலும்.

## (பிராமண லட்சணம்.)

† ததேதத்ருசாப்யுக்தம் ஏஷநித்யோ மஹிமா ப்ராஹ்மணஸ்ய நவர்த்ததே கர்மணா நோகநீயாந், தஸ்யைவஸ்யாத் பதவித்தம் விதித்வா நலிப்யதே. கர்மணா பாபகேநேதி தஸ்மாத்தவம், நிச்சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூத்வாத்மந்

---

* 𑌅𑌨𑍍𑌨𑌰𑌸𑍇𑌨𑍈𑌵 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌰𑌸𑍇𑌨𑌾𑌭𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌅𑌨𑍍𑌨𑌰𑌸𑌮𑌯𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌯𑌦𑍍𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇 𑌸𑍋𑌽𑌨𑍍𑌨𑌮𑌯𑌕𑍋𑌶𑌃 𑌤𑌦𑍇𑌵 𑌸𑍍𑌥𑍂𑌲𑌶𑌰𑍀𑌰𑌂

† 𑌤𑌦𑍇𑌤𑌦𑍃𑌚𑌾𑌭𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌏𑌷 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌮𑌹𑌿𑌮𑌾 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 𑌨 𑌵𑌰𑍍𑌧𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨𑍋 𑌕𑌨𑍀𑌯𑌾𑌨𑍍। 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑌦𑌵𑌿𑌤𑍍𑌤𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌪𑌾𑌪𑌕𑍇𑌨𑍇𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍇𑌵𑌂 𑌵𑌿𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤 𑌉𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑍁𑌸𑍍𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾

யே வாத்மாநம் பச்யதி, ஸர்வமாத்மாநம்பஸ்யதி நைநம் பாப்மா தரதி, ஸர்வம்பாப்மானந்தரதி நைநம் பாப்மாதபதி, ஸர்வம் பாப்மாநம்தபதி, விபாபோ விரஜோ விசிகித்ஸோ ப்ராஹ்மணோபவதி.

(இ-ள்) பிராமணத்துவம் பிரஹ்ம ஞானத்தினாற் சித்திக்குமன்றி, கர்மா நுஷ்டானங்களாலும், மற்றவையாலும் சித்திகக மாட்டாது. அந்தபிரஹ்மஞான முடைய பிராமணன் கர்மஞ்செய்து கர்மியானபோதும், அதனாற் பந்தனாகமாட்டான். சாந்தி தாந்தி உபரதி திதிட்சை சிரத்தை சமாதானங்க ளென்கிற சமாதி சட்க சம்பத்தி யுடையவனாய், ஆத்தும சொரூபனாய், தன்னைத்தானே பிரஹ்மமாயறிந்து சதா ஆத்மாநுசந்தானத்தோடு, சர்வப்பிரபஞ்சங்களையும் பிரஹ்மசொரூபமாய்ப பாவிக்கும் அகங்காரரகிதனே பிராமணனாவனன்றி ஜன்மத்தாலும் காமாநுஷ்டானத் தாலும் பிராமணனாக மாட்டான்.

## நீராலம்போபநிஷத்.

† ஸர்வதர்மாந் பரித்யஜ்ய நிர்மமோ நிரஹங் காரோ பூத்வா ப்ரஹ்மைகம் சரணம் முபகம்ய தத்வமஸி ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம நேஹநா நாஸ்தி கிஞ்சநேத்யாதி மஹாவாக்யார்த்தாநுபவஜ்ஞாநாத்ப்ராஹ்மைவாஹமஸ்மீதி நிச்சித்ய நிர்விகல்பஸமாதிநாஸ்வதந்த்ரோ யதிச்சரதி ஸஸந்யாஸி ஸமுக்தஸ்ஸபூஜ்யஸ்ஸ யோகீ ஸ பரமஹம்ஸ ஸ்ஸோவதூதஸ்ஸ ப்ராஹ்மண இதீச"

(இ-ள்). சர்வ தர்மங்களையும் விட்டு, யானெனதென்கிற அகங்கார மமகாரங்களையும் நாசஞ்செய்து, பரப்பிரஹ்மத்தினிடத்திற் பக்தி யுண்டாய்ச் சமஸ்தமும் பிரஹ்ம சொரூப

---

𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿। 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌨𑍈𑌨𑌂
𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌤𑌰𑌤𑌿। 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌪𑌤𑌿। 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌂
𑌤𑌪𑌤𑌿। 𑌵𑌿𑌪𑌾𑌪𑍋 𑌵𑌿𑌰𑌜𑍋 𑌵𑌿𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌭𑌵𑌤𑌿॥

† 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍋 𑌭𑍂-
𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌕𑌂 𑌶𑌰𑌣𑌮𑍁𑌪𑌗𑌮𑍍𑌯 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨𑍇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌮𑌹𑌾𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍁-
𑌭𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌸𑌮𑌾𑌧𑌿𑌨𑌾
𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍋 𑌯𑌤𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌸 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 𑌸 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌸 𑌪𑍂𑌜𑍍𑌯𑌃 𑌸 𑌯𑍋𑌗𑍀
𑌸 𑌪𑌰𑌮𑌹𑌂𑌸𑌃 𑌸𑍋𑌽𑌵𑌧𑍂𑌤𑌃 𑌸 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌚॥

மே. அநேக மென்பது கொஞ்சமேனு மில்லை. இருப்பதென்பது பிரஹ்மமே. அதற் கிரண்டாவது பதார்த்த மில்லவேயில்லை. அந்தப் பரப்பிரஹ்மமே ஆத்தும சொரூபமா மென்கிற மகா வாக்கியார்த் தாநுபவ ஞானத்தினாலே ஆத்ம சொரூபனாகிய நான் பிரஹ்மத்திற்கு வேறாகேன். நானே பிரஹ்மம் பிரஹ்மமே நானென்னுந் திட நிச்சயமுண்டாய், சர்வ சங்கல்ப சூனியனாய், சகல திருசியங்களையும் மறந்து, கேவலம் ஞப்தி மாத்திரனாய், நிருவிகற்ப சமாதிநிட்டை யடைந்து, சுதந்தரனாய், சஞ்சரிப்பவனே சந்நியாசியென்றும், முக்தனென்றும், பூஜார்க்க னென்றும், யோகியென்றும், பரம அம்ச னென்றும், அவதூதனென்றும், பிராமண னென்றுஞ் சொல்லப்படுகிறான்.

என்று சொல்லியிருப்பதால் மற்றையர் பிராஹ்மணராகாரென் றறிந்திலீர்போலும்.

புராணாதிப் பிரமாணங்களைக்கொண்டுசெய்த தப்பர்த்த யுக்தமாகிய உமது சுருதியுக்தி யநுபவங்களழிந்தொழிந்தன. கிஞ்சித்தேனுஞ் சுகமில்லாத நின் அஸ்திரதேகத்தை நிரந்தர சுகசொரூபமாகிய ஆத்மாவென்று எங்ஙனஞ் சொல்லப் புகுந்தீரென் றிவ்வாறநேக பிரசனைகள்செய்ய, எந்தப்பிரசனைக்கும் பதில்சொல்லாமல் முன் சாக்ஷிகளைப்போல யாதுந் தோன்றாமல் விழித்திருந்தான். கோர்ட்டார் அந்தச் சாக்ஷியைப்பார்த்து நகைத்து, அப்பிரமாண சாட்சியாகவந்த விவனை ஜநநமரண துக்கசொரூபமாகிய தேகாதி சம்சாரபந்த விலங்கினைப் போட்டுக் காடாந்தகார பிலத்துவாரத்தில் தலைகீழாக விழத்தள்ளி விடுங்களென் றேவலாளர்களுக்குக் கட்டளையிட்டு, இகலோக காமியரான வநேகரைவிசாரித்துக் குறுக்குக்கேள்விகளைக்கேட்க, அவர்கள் பதிலேதுஞ் சொல்லவறியாது முன் சாட்சிகளைப் போலத் தண்டனைகதுட் பட்டவர்களானார்கள். பிறகு கோர்ட்டார் இரண்டாவது பிரதிவாதியான கர்மகாண்டியுடன் சேர்ந்தசாட்சிகளை விசாரிக்கத் தொடங்கிப் பிராணாத்மவாதியை அழைக்கும்படி ஆக்ஞாபித்தனர்.







## 5-வது பிராணாத்மன் விசாரணை.



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பிராணவாய் வதனு லாயுள் பெருக்கமுஞ் சயமு நல்கும்
பிராணவாய் வதனாற் சித்தர் பெறுவரெண் சித்தி யந்தப்
பிராணவாய் வன்றித் தெய்வம் பேசவே றில்லை யென்னும்
பிராணாத்ம வாதி கோர்ட்டிற் பேசிய சாட்சி சொல்வாம்.

*கோரமூட புத்தியென்னும் பிரதிவாதி வகிலெழுந்து கோர்ட்டார் சமுகத்தில்நின்று பிரதிவாதி தரப்பில் ஐந்தாவது சாட்சியாகவந்த ஹிரணியகருப்ப மதத்திற் சேர்ந்த பிராணாத்மவாதியை அழைத்து பிரமாணஞ் செய்வித்து, சத்தியமாய்ச்சொல்லவேண்டுமென்று பயப்படுத்திக் கேட்கும் கேள்வி.*

*பி- உம்முடைய பெயரென்ன?*

*உத் - பிராணாத்மவாதி.*

*பி - நானென்னும் ஆன்மாவை நீரறிவீரா?*

*உத் - அறிவேன், அது பிராணனை யன்றிவேறில்லை.*

*பி - பிராணனே யாத்மாவென்று எப்படியறிவீர் ?*

*உத் - மரண சமயத்தில் சமீபத்தி லிருக்கும் புத்திராதியர் பிராணனிருந்தால் ஜீவித்திருப்பதாயும் பிராணனில்லா விட்டால் இறந்துபோய் விட்டதாயும் அறிகிறார்கள். ஆகையால் ஜீவனமரணங்கள் பிராணாதீனமாயிருக்கின்றமையா லந்தப்பிராணனை ஆத்மாவென் றறிந்தேன்.*

*பி - நானென்னும் ஆன்மா பிராணனைவிட வேறில்லை என்பதற்குச் சுருதி யுத்தி அனுபவங்களுண்டா?*

சாந்தோக்கியோபநிஷத்.

*உத் - ‡ "அந்யோந்த ராத்மா ப்ராணமயஃ" ப்ராணோப்ரஹ்ம."*
*" ப்ராணோவா ஆசாயா பூயாந்யதாவா அராநாபௌ ஸமர்பிதா*

‡ [Grantha-script rendering of the above quotation]

ஏவமஸ்மிந் ப்ராணே ஸர்வம் ஸமர்பிதம்ப்ராணः ப்ராணேநயாதி ப்ராணः ப்ராணந்ததாதி ப்ராணாய ததாதி ப்ராணோஹபிதா ப்ராணோமாதா ப்ராணோப்ராதா ப்ராணஸ்ஸ்வஸா ப்ராண ஆசார்யः ப்ராணோ ப்ராஹ்மணः"

பஞ்சதசிப் பிரகரணம்.

‡ ப்ராணோ ஜாகர்தி ஸுப்தேபி ப்ராண ச்ரேஷ்டயாதிகம ச்ருதம் கோசःப்ராணமய ஸ்ஸம்யக் விஸ்தரேண ப்ரபஞ்சிதः.

(இ - ள்). (இந்தத் தேகமென்னும் பட்டணத்தில்) சுழுத்தி முதல் சர்வ அவஸ்தைகளிலும் பிராணாதி வாயுக்கள் லயமடையா திருக்கின்றன.

திருமந்திரம்.

புள்ளினு மிக்க புரவியை மேற் கொண்டால்
கள்ளுண்ண வேண்டாந் தானே களிதருந்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிற்கு
முள்ளது சொன்னோ முணர்வுடை யோருக்கே.

ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாறில்லை
கூரிய நாதன் குருவி னருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே.
ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாறில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே.

---

ஏவமஸ்மிந் ப்ராணே ஸர்வம் ஸமர்பிதம் ப்ராணः ப்ராணேநயாதி ப்ராணः ப்ராணந்ததாதி ப்ராணாய ததாதி ப்ராணோஹபிதா ப்ராணோமாதா ப்ராணோப்ராதா ப்ராணஸ்ஸ்வஸா ப்ராண ஆசார்யः ப்ராணோ ப்ராஹ்மணः

‡ ப்ராணோ ஜாகர்தி ஸுப்தேபி ப்ராணச்ரேஷ்ட்யாதிகம் ச்ருதம்। கோசःப்ராணமயஸ்ஸம்யக் விஸ்தரேண ப்ரபஞ்சிதः"

**தாயுமானவர்**

நியம லட்சணமு மியம லட்சணமு மாச னாதிவித பேதமு
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை நின்றி லங்குமச பானலத்
தியல றிந்துவளர் மூல குண்டலியை யினிதி றைஞ்சியவ ளருளினா
லெல்லை யற்றுவளர் சோதி மூலவன லெங்கண் மோனமனு [முறையிலே

வயமி குந்துவரு மமிர்த மண்டல மதிக்குளே மதியைவைத்துநான்
வாய்மடுத்தமிர்த வாரியைப்பருகி மன்னுமா ரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை பெற்று ஞானநெறி யடைவ
தெரிவ தற்கரிய பிரம மேயமல சிற்சு கோதய விலாசமே. [னே

இன்னம் பிறப்பதற் கிடமென்னி னிவ்வுடல மிறவா திருப்ப மூலத், தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண்ட லத்திலுற வென்னம்மை குண்ட லினிபாற், பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப் பேயேனை நல்க வேண்டும்.

என்றிவ்வா றளவிறந்த பிரமாணங்களுண்டு.

இந்திரியாதிகள் லயித்தபோது நான் லயமாகாம லிருப்பதே யுக்தி.

நான் செய்தேன், நான் வந்தேன், நான் வசனித்தேன், நான் போகின்றேன், நான் போய்விட்டேன், நான் மலமூத்திராதிகளை விசர்ஜனஞ் செய்கின்றேன், நான் பசிதாகமாக விருக்கின்றேன், நான் பல வீனனாயிருந் திப்போது பலவான்களுக்குச் சமானனாய் ஆனந்தமாய் ரமித்துக்கொண்டிருக்கிறேன், என்பதே அநுபவ மென்று கூறினன்.

இதுபற்றி வாதி வகீல் சூட்சுமகிராக்கிய சாத்வீகாம்ச புத்தி யென்பவர் செய்த குறுக்குக் கேள்விகள்.

நானென்னும் பொருள் பிராணனா யிருந்தால் நான் பிராண னேயென்று சொல்லல் வேண்டும்; என் பிராணனென்று சொல்லு தல் கூடாது. மேலும், அது

† “ஆகாசாதி ரஜோகுண சமஷ்டியா ப்ராணோஜாத:”

---

† ആകാശാദി രജോഗുണസമഷ്ടിയാ പ്രാണോജാതഃ

(இ-ள்). ஆகாசமுதலிய பஞ்சபூத சமஷ்டி ரஜோகுணாம்சத்திலே பிராணவாயு உண்டாயிற்று.

என்று பிரமாண மிருத்தலாலும் பஞ்சபூதத்தி லொன்றாய் ஜடபதார்த்தமா யிருத்தலாலும்! ஒருகாலத்திருந்து மற்றோர் காலத்தி லில்லாததா யிருத்தலாலும் ஆன்மாவாகாது.

"† கர்மேந்திரியை ஸ்ஸஹப்ராணாதி பஞ்சகம் ப்ராணமயஃ கோசஃ"

(இ-ள்). கர்மேந்திரியங்க ளைந்தும் பஞ்சப்பிராணனுங் கூடிப் பிராணமயகோசமாம்.

இப்பிராணமய கோசம் எப்படி காலத்திரயத்திலும் அழியாத ஆன்மாவாகும்? அன்றியும்.

* "ஏதஸ்ய ப்ராணஸ்யாபச்சரீரம்"

என்னுமிப் பிரகதாரண்ணிய சுருதியால் பிராணன் ஆத்மாவென்பது அடிபட்டொழிந்தது. நீரே பிராணாதார மென்பதைக் கொஞ்சமேனும் அறியீர்போலும். ஜலமில்லாமல் பிராணன் நிலைக்குமா? பிராணனே ஆன்மாவா யிருந்தால் சுழுத்தி அவஸ்தையில் நாசிகாதுவாரத்தி லுள்ள அபாணத்தை வேறொருவன் அபகரித்துக்கொண்டு போங்காலத்தில் அதனை யறியச் சக்தியில்லாமற் போவானேன்?

$ "ப்ராணஃ அநாத்மா வாயுத்வாத் பாக்யவாயுவத்"

(இ-ள்). அநாத்துமாவாக வெளியிலுலவும் காற்றைப்போல வுள்ளே யுலவுங் காற்றுமாம்.

க்ஷணத்திற்கு க்ஷணம் விகாரமடைகின்ற அநாத்மாவாகிய இது தான்மாவாமா?

ஞானவாசிட்டம்.

பிராண னசையி லசைந்திடுவர் பிராண னடங்கிற் கற்போல்வர், பிராணன் றன்னைத் தரித்தலினாற் பெருநா ணசியார் யோகிகடாம், பிராணன் றன்னி னெஞ்சத்திற் பிறக்கு மசைவுட் புறனடங்கிற், பிராண நாச மூப்பிரண்டும் பெருந்து ரத்தி லேகிடுமால்.

---

† 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌸𑍍𑌸𑌹𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑌿𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌃 𑌕𑍋𑌶𑌃

* 𑌏𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯𑌾𑌪𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑌂

$ 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾𑌯𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌬𑌾𑌹𑍍𑌯𑌵𑌾𑌯𑍁𑌵𑌤𑍍"

## தேவிகா லோத்தரம்

சக்கர நாடி சான்றோர் வழித்தெய்வ ரூப மூல
மக்கர மண்ட லங்கண் ஞானம்போ லழிகின் றுகு
மக்கடோய் மாயா விச்சை மந்திரம் பிராணா யாமந்
தொக்கசீர் ஞானஞ் சேரத் தொடங்குவார் தொடங்க லாகா.
அட்டமா சித்தி முத லனைத்துள்ள பேறுகளுங்
கட்டமாங் கதிகடரும் பரகதிகா ணக்கொடா
மட்டிலா மாலையாய் வியாபகமா யறிவாகிக்
கிட்டலா காமுத்தி மற்றிவற்றாற் கிடையாதே.

## உபதேசமாலை.

அறிவுநா மென்றறிய மாட்டாதா ரன்றோ
வெறிகாற் புனலருந்தி யென்றுந்—தறிபோலு
நிட்டையுடன் மட்டாய் நெடுங்கால நின்றார்க
ணட்டமலா துண்டோ நலம்.

## ஒழிவி லொடுக்கம்.

அறிவடங்கா வாயு வடங்கவகை வற்றுத்
தறியிருந்தாற் போலச் சமாதி - பெருகி
னடந்த குருட்டமே னஞ்சருந்திப் பாழூர்க்
கிடந்தகுழிப் புக்கதினுங் கேடு.

இப்பிரமாணங்களாற் பிராணவாயு நிரோதத்தாற் சித்திக ளுண்டாமேயன்றி ஞானஞ் சித்திக்காதென்பது சித்தமாம். இது பற்றிக் கிஞ்சித்தேனு மறியாதிருக்கு மும்மையும் உமக்கன்னியத் தையும் அறியாதிருக்கும் பிராணவாயு எப்படி சத்திய ஞானாநந்த சொரூபமாகிய ஆன்மாவாமென் றிவ்வாறு பல பிரசனைகளைக்கேட் டபோது ஒன்றற்கும்பிரதியுத்தரஞ்சொல்லத்தெரியாமல் ஊமனைப் போல விழித்திருந்தான்; அதுகண்டு கோர்ட்டார் இவனைக் கா டாந்தகார கிடங்கில் தலைகீழாகத் தொங்கப் போட்டு ரேசக பூரக கும்பகங்களாகிய கொசுக்களைவிட்டுத் தேள் கொட்டுவதுபோலக் கடிக்கச் செய்யுந் தோவொன்று ஏவலாளரை நோக்கிக் கூறி, ஆறாவது சாட்சியாகிய மனோமயனை அழைக்கும்படி ஆக்ஞாபித் தனர்.





## ஆருவது சாட்சி மனோமயன் விசாரணை



அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

சனாதனப் பொருடா னாகுஞ் சற்குரு வென்னுஞ் சட்ஜி
வினோதஞ்சேர் ந்யாயத் தானம் விளங்கத்தான் வீற்றி ருக்கத்
தனாதுமெய் யுருவங் காணாச் சார்வாக ராதித் தம்மின்
மனோமயன் சாட்சி யாக வழுத்துதல் சொல்ல லுற்றாம்.

கோராமூட புத்தி யென்கிற பிரதிவாதி வகீலெழுந்து நாரத பாஞ்ச ராத்திரத்தை யநுசரித்த மனோமயனை அழைத்துக் கோர்ட்டார் முன்னாக நிறுத்திப் பிரமாணஞ் செய்வித்து, நீர் நானென்னும் ஆன்மாவை அறிவீரா? அறியீரா? நிஜமாகச் சொல்லுகவென்றான்.

உத். பந்தத் திற்கும் மோக்ஷத் திற்கும் மற் றெவைக்கும் காரணனா யிருக்கிற மனோமயனாகிய வென்னை யன்றி வேறொரு ஆன்மா கிடையா தாகையால் நானே அந்த ஆன்மாவாகும்.

பிர. மனோமயனே ஆன்மா வென்பதற்குச் சுருதி யுக்தி அநுபவங் கூறுக?

உத். † "தஸ்மாத்வா ஏதஸ்மாத் பிராணமயா அந்யோந்தராத்மா மனோமயः. "மநஸா கல்பிதம் ஸர்வம் மநஸா பரிபாலிதம் மநஸாஸம் ஸ்ம்ருதம் தஸ்மாத் மநஏவாஸ்தி காரணம்".

(இ-ள்). மனத்தின்கண் சர்வமுந் தோன்றியிருந் தொழிவதனால் சர்வத்திற்கும் மனமே காரணமாம்.

‡ "காமஃ சங்கல்போ விசிகித்ஸா ச்ரத்தா சரத்தா த்ருதிரத்ருதிர் ஹ்ரீர்தீர் பீரிதயேய தத்ஸர்வம் மநஏவ".

---

† "𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌯𑌾 𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃" "𑌮𑌨𑌸𑌾 𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌨𑌸𑌾 𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌿𑌤𑌂 𑌮𑌨𑌸𑌾𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍 𑌮𑌨𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍'

‡ "𑌕𑌾𑌮𑌃 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍋 𑌵𑌿𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑌾 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌽𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌧𑍃𑌤𑌿𑌰𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌹𑍍𑌰𑍀𑌰𑍍𑌧𑍀𑌰𑍍𑌭𑍀𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌨 𑌏𑌵"

(இ-ள்). இச்சை, சங்கல்பம், சம்சயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, ஞானம், பயம் என்னுமித் தருமங்கள் மனதின் தருமங்களாம்.

$ "மநஏவாத்ஸ்யாத்மா அந்யோந்தராத்மா மநோமயஃ" என்றும் ¶ "மநஏவ மநுஷ்யாணும் காரணம் பந்த மோக்ஷயோஃ" என்றும் இவ்விரண்டு சுருதிகளும் மனத்தை சாக்ஷாத் ஆத்மாவாகக் கூறுகின்றன.

இப்பிரமாணங்களால் சரீரத்திற்குக் காரணம் மனமென்றும் இச்சை முதலியன மனத்தின் தாமங்களென்றும் பெறப்பட்டன.

ஞானவாசிட்டம்.

அகில சத்தி யுடைத்தா யனந்த மான பரமம
புகல்சங் கல்பத் தோடே பொருந்தும் வடிவே மனமா
மிகவுஞ் சத்தோ டசத்தா யிரண்டி னுள்ளுந் தோன்றிப
பகருந் தொழில்க ளோடே பயில்பா வனையு மம்மே.

மாண்டு வாளா போனவுடன் மட்டோன் றில்லை யவையெல்லாந், தாண்டு மனத்தா லுண்டாகுஞ் சலத்தா லன்றிக் காடுண்டோ, தூண்டு மனமே முதல்வடிவாய்த் தூல வுடலம் போனாலும், வேண்டு முடல்கள் விளைந்தெதிக்கும விரியுங் கனவிற் செயல் போலே.

தாயுமான சுவாமிகள்.

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை யொழிந்து தள்ளாற், கறவுமரி தரிதன்றே விகபரமு முனையன்றி யாவதுண்டோ, வறிதிலுனை யசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும் வாழ்த்து வேனென், சிறுமைகெடப் பெருமையினின் சென்மமதே யத்தினினீ செல்லல் வேண்டும்.

சீதாரா மாஞ்சநேயம்.

பிருதிவி முதலிய சமஸ்த ஸ்தூல திரவியங்களும், பரமாணு முதலிய சூக்கும திரவியங்களும், பிரமாணங் களால் வஸ்து நிருணயஞ் செய்யுந் திருஷ்டாவும், பிரமாணமும், தரிசனமும், பிரமாணங்களால் நிர்ணயிக்கப்பட்ட கட படாதிகளும் மனதைவிடப்

---

$ "மநஏவாத்ஸ்யாத்மா அந்யோந்தராத்மா மநோமயஃ"

¶ "மநஏவமநுஷ்யாணாம் காரணம்பந்தமோக்ஷயோஃ".

பின்னமன்று. அபேட்சையும், சகலேந்திரியங்களுக்கும் அநுகூல பதார்த்த அலப்பியத்தினால் உண்டாகிய துவேஷமும், பொருமையும், மனதின் வடிவமே. வர்ணாசிரமங்களும், சகலபுண்ணிய காரியங்களும், பிராப்தமும், அதன் விடுதலையும், மனதைவிட அன்னியமன்று. அறியப்பட்ட சர்வமும் மனமேயாம்.

என்றுள்ளனவும் பிரமாணமாம். சர்வத்திற்குங் காரணமாய் இராஜனைப் போன்றுள்ள நானில்லாத சுழுத்தி காலத்தில் ஜகம் தோன்றாமல் நானுள்ள ஜாக்கிர சொப்பன காலத்தில் உலகந்தோன்றுகின்றதே யுக்தியாம்.

நான் விராகி, நான் துவேஷி, நான் மோகி, நான் லோபி, நான் பார்த்தேன், நான் கேட்டேன், நான் தின்றேன், நான் கந்த முகர்ந்தேன், என் வீடு, என் வாசல், என் மாடு, என் மக்கள், என் பெண்டீரென்று சதா யநுபவிப்பதே யென்னநுபவமென்ற மனேமயனைப் பார்த்து வாதி வக்கீல் செய்யுங் குறுக்குக்கேள்வி.

கிராசு:—மனமானது ஒருகாலமுள்ளதாயும், மற்றொரு காலமில்லதாயும், சங்கல்ப விகல்பங்களை வடிவமாய்ப் பெற்றுச் சதா துக்கத்தை யுண்டுபண்ணுவதாயும், பெரியோர்களால் நிந்திக்கப்படுவதாயும், விசாரணை முகத்தில் மலடிமைந்தனைப் போல் காலத்திரயத்திலும் இல்லாததாயும் விளங்குகின்றது. அம்மனத்தைக் காலத்திரயத்திலு மழிவற்றுச் சர்வகாரணமாயும், எங்கும் பரிபூரண தேஜோமயமாயும், நிலைபெற்று விளங்கும் ஆத்மாவென்றெப்படிச் சொல்லக் கூடும். தத்துவவாதிகள் நானென்னு மாத்மாவைச் சர்வகாரணமாக வறிவார்களேயன்றி, அம்மந்து உம்போலியரால் அறியத்தக்க தன்றும். அதுபற்றிச் சொல்லப்போகின்ற பிரமாணாதிகளால் நீரெடுத்துக் காட்டிய பிரமாணங்களியாவும் இங்குப் பொருந்த மற்றனவாம். அவைவருமாறு:

## கேநோபநிஷத்.

† "யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸஃ
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாத மவிஜாநதாம்

---

† ‹‹யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸஃ
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாத மவிஜாநதாம்

எஸ்யாமதம் மதம் தஸ்ய மதம் யஸ்ய ந வேத ஸ:
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்

“யந்மநஸா நமநுதே யேநாஹுர் மநோமதம் ததேவ
ப்ரஹ்மத்வம் வித்திநேதம் யதித முபாஸதே”

(இ-ள்). எவனுக்குப் பிரஹ்மம் தன்னாலறியப்படவில்லையென்
றெண்ணமோ அவனால் பிரஹ்மம் அறிப்பட்டது; எவனுக்குப்
பிரஹ்மம் அறிபப்பட்டதாக வெண்ணமோ அவனால் அதையறியப்
படாததே. அறிந்தோமென்றெண்ண முள்ளவர்கட் கறியப்படாதது
தாகவும், பிரத்தியட்சாதி பிரமாணங்களால் அறியப்பட மாட்டா
தென்னும் எண்ணமுள்ளவர்கட் கறியப்பட்டதாகவும், எது மன
தினாலறியப்பட மாட்டாதோ, எதனால் மனது அறியப் படுகின்ற
தோ அதனையே பிரஹ்மமென்றறி. எது இது இதுவென் றுபா
சிக்கப் படுகின்றதோ, அதனைப் பிரஹ்மமென் றறிதல் கூடாது.

குறுந்திரட்டு.

அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவு மளவிலாப் பகைநமக்
கெனவுந், துன்பமார் சோக மோகமே முதலாந் துயரெலாம்
விளைநில மெனவு, மின்பமீ தெய்தா திடற்கிடை யூறு மிருளு
மென் றியம்புவர் பெரியோர், துன்பிலா விறைவற் கன்பிலா நெஞ்
சே துணையலை துணையலை யெனக்கே.

புலையுறு செயலாற் புலனுறு போகப் புகலரும் விடத்தையே
நுகர்தற், கலமரு கவலைக் கடலுளே தலைகீ ழாகவே விழுந்தழி
நெஞ்சே, கலைகளி னுணர்வுக் கரியநற் சொரூபன் கழல்களை நினைந்
துனைந்துருகி, யெலையறு மன்பா மமுதினை விரும்பா தேதுகொ
ண் டென்செய்தாய் கெடுவாய்.

ஞானவாசிட்டம்.

சீவன் முத்தி தனிலுருவ நாசஞ் சித்தந் தனக்குளதாம்
தாவி லுடலீர் முத்திதனிற் சாற்று மருவ நாசமுறு
மேவுஞ் சித்த முண்டாகி விடரா மிறக்கின் மிகுமின்பம்
பாவி யுள்ள மெழாதபடி பண்ணி யதைநா சம்பயில்வாய்.

இப் பிரமாணங்களால் நீர் காட்டிய சுருதியாதிக ளடிபட்
டொழிந்தனவன்றோ? இனி நாமும்மைக் கேட்கப் போகிற கேள்

---

யந்மநஸா ந மநுதே யேநாஹுர் மநோமதம்
ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே

விகளுக்கு ஜாக்கிரதையாகக் கவனித்து விடை கூறல் வேண்டு மென்று எச்சரித்துக் கேட்குங் குறுக்குக் கேள்வி.

கிராசு. மனமே ஆன்மாவா யிருந்தால் என்னுடைய மன தென்று சொல்லக்கூடாதென்பதை நீர் அறியீர்போலும். கோர்ட் டார் முன்பாக மிகு சாக்கிரதையாக யோசித்துச் சொல்லுவீராக. நீ ராருடைய குமாரர்?

உத். நான் தாசிகள் மகனானதா லெனக்குத் தகப்பன் இன் னுனென்று தெரியவராது.

பி. உம்மைத் தசமாதங் கர்ப்பத்திற் சுமந்து பெற்றதாயின் பெயரியாது.

உத். என்னைப் பத்துமாதஞ் சுமந்து பெற்றதாயின் பெயர் ஜகன்மோகினி கறுப்பாயி அவித்தை யென்பர்.

பி. உம்மை வளர்த்த தாயின் பெயரைச் சொல்லுக?

உத். என்னை வளர்த்த தாய், மனிதர்களை மோசஞ் செய்யும் ஆவரணி என்று சொல்லுவார்கள்.

பி. உம்முடைய ஜீவனம் யாது?

உத். சுரோத்திராதி இந்திரியங்களென்னும் தாசி ஜனங்களு க்குப் பாத நாட்டியங் கற்பித்து வைக்கிறதே எனது ஜீவனமாம்.

பி. இந்த விவாத சொத்து உமக்கு எவ்வாறு கிடைத்தது.

உத். எனது தாயின் முகாந்திரமாகக் கிடைத்தது.

பி. உமது தாயாருக் கஃதெவ்வாறு கிடைத்தது?

உத். என்னுடைய தாய் தாசியானமையா லவளுக்குக்கிடை த்த விஷயம் கோர்ட்டாருக்கே நன்றாய்த் தெரிந்திருக்கும்.

பி. இப்போதந்தச் சொத்தானது எவருடைய வசத்திலிருக் கின்றது?

உ. எப்போது மெங்களுடைய ஆதீனமா யிருக்கின்றது. இவ்வாறவன் சொல்லியமாத்திரத்தில், வாதி வக்கீல் கோர்டாரிட த்தில் மனுவொன்று சொல்லிக் கொள்வாரானார்.

இந்தச் சாட்சி நாரத பாஞ்சராத்திரத்தை யநுசரித்தவர்களது சித்தாந்தத்தில் சேர்ந்தவர். இவர் கற்பனைகளுக் கெல்லாந் தாயகமா யிருப்பவர்; இவரைப் பிரசனைகள் பல கேட்கும்படி. உத்திரவளிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, கோர்ட்டாரவர்கள் யோசித்துப் பொய் பேசுவதற்கு முதன்மையாக வுள்ளவர்களைத் தீர்க்கமாய் விசாரித்து நன்றாய்த் தண்டிப்பதே நமது தர்மமாமென்று தீர்மானித்து, வேண்டியவரையில் பிரசனைகள் செய்யும்படி உத்தாரவுசெய்தனர். உத்தரவான மாத்திரத்தில், வாதி வகீல் நம்மையனைப் பார்த்து நீர் கேட்கிற வரைக்கும் பதில் சொல்ல வேண்டுமென்று எச்சரிக்கை செய்து கேட்பாராயினர்.

பி.. உம்முடைய சொரூபமானது சித்தா? ஜடமா? சித்தேனின், சித்துக்கு விகாரமேதென்னும் ஆட்சேபம் வரும். ஜடமெனின், ஜடம் மண்போல அநித்தியமாக வேண்டும். சித்துஞ் சடமுஞ் சேர்ந்ததைவயென்றால், அது விருத்தமாம்; ஒரு தருமியில் மாறுபட்ட பல தர்மங்க ளிருந்த லையா தென்பது நியாய நூற்றுணிபன்று? இருளும் ஒளியும் ஒன்றாக விருக்குமா? வியதிரேக வஸ்துக்கள் தம்முட்கூடி ஓரிடத்தில் ஒருகாலத்தில் ஒன்றாக இருக்க முடியாமைபோல, சித்துஞ் சடமும் தம்முட்கூடி ஓரிடத்தி லொருகாலத் தொன்றா யிருக்கமாட்டா. இருந்தால் காட்டுக இப்போது நீர் செய்துவரும் வேலை யாது? யோசித்துச் சொல்லுக.

உத். சப்தாதி விஷயபஞ்சகங்களை விகற்பித்தறிவதே என்னுடைய வேலையாம். அவற்றை நினைப்பதே எனது சொரூபமாம்.

பி. அந்தச் சத்தாதி விஷயபஞ்சகமும அவற்றின் காரியங்களும் நீங்கினால், உம்முடைய சொரூபமிருக்குமா? அந்தச் சத்தாதிக ளழிந்து சூனியமாய்ப் போமல்லவா? அப்போது நீரும் அங்ஙனமாக வேண்டுமல்லவா? அன்றியும் சத்தம் ஆகாசத்தின் குணம், பரிசம் வாயுவின் குணம், ரூபம் அக்கினியின் குணம், இரசம் அப்புவின் குணம், கந்தம் பிருதிவியின்குணமாம். இந்தப் பஞ்ச விஷயங்களும் பஞ்சபூதாம்சங்களாம். அவை மாறு மியல்புடையனவாக விருத்தலின, அவை மாறும்போதெல்லாம் நீரும் மாற வேண்டுமன்றோ? ஆகவே, நானென்பதற்கு அவை யெப்படி சொரூபமாகும்? மேலு மவை ஜடங்களல்லவா? அவற்றிற்கு அறியுந்தன்மை யுண்டா?

உத். அந்தக் குணங்கள் நானன்று; அவற்றை யறிகிறவன் நான்.

பி. அறிவது அறிவு, அஃது ஆன்மாவின் வடிவமாம்; உமக்கறியுந் தன்மை யெவ்வாறுண் டாயிற்று?

உத். நேரே எனக்கறிகிற சக்தியில்லாமற் போனாலும் பிராணாதி வாயுவின் வசத்தால் சப்தாதி விஷயங்களை யறியுந்தன்மை யுடையவனா யிருக்கிறேன்.

பி. இந்திரியங்களையும் பிராணாதி வாயுக்களையும் விட்டு, உம்மாலெவ்விஷயங்களை அறியச் சாத்தியமாகும்?

உத். நரேந்திரனைப்போலச் சர்வேந் திரியங்களுக்கும் நான் மேல் விசாரணை செய்கிறவனா யிருக்கிறேன்.

பி. சர்வஜந சமூகத்திற்கும் மேல் விசாரணை செய்கின்ற பூபாலனைப்போன்று சர்வேந்திரியங்களுக்கும் மேல் விசாரணை செய்கின்றவனா யிருக்கிறேனென்று சொன்னீரல்லவா? அப்படி உம்மை அந்த இந்திரியங்களுக்கு மேல் விசாரணை செய்யும்படி நியமித்தவரெவர்?

உத். மேல் விசாரணைக் கர்த்தாவாக விருக்கும்படி என்னை நியமித்தவ ரொருவரு மில்லை. இந்திரியங்களுக்கு விசாரணைக் கர்த்தாவாக வெப்போது மிருப்பது என்னுடைய வழக்கமாம்.

பி. எவ்வித வாதரவு மில்லாது ஒருவன் மற்றொருவன் சொத்தைத் திருட்டுத்தனமா யபகரித்து அவனுக்குத் தெரியாமல் அநுபவிக்கிறகாலத்தில், சொத்துக்குப் பாத்தியதை யுடையவன் கண்டுபிடித்து என் திருடினையென்றால் அவன் என்னுடைய வழக்கமென்றுகூறினால், அவனைச் சொத்துக்குரியவன் விட்டுவிடுவானா? கோர்ட்டார் இவன் பிரபல பராக்கிரமமுடைய பழைய திருடனென்று கருதி, அவனுக்குப் பலமான தண்டனை விதிப்பார்களன்றோ? அங்ஙன மாகவே, உமக்கும் கோர்ட்டார் பலமாகிய தண்டனை யென்னும் வெகுமதி செய்தனுப்புவார்கள். நீர் மேல்விசாரணையி லிருந்து செய்கின்ற வேலைக ளெவை?

உத். என்னுடைய பத்தினி, என்னுடைய புத்திரர்கள், என்னுடைய மித்திரர்கள், என்னுடையவீடு, என்னுடைய வாசல்க

ளென்று இந்திரியங்களுடன் கூடிச் சுக துக்கங்களுடன் சேர்ந்துஞ் சேராமலிருந்து நினைப்பதே என்னுடைய தொழில்களாம்.

பி. நீரென்னுடைய பத்தினியென்று சொல்லியதைப்பற்றிச் சிறிது விசாரிப்பாம். தங்கக் கட்டியைக் கொஞ்சங் கொஞ்சமாக வெட்டி யெடுத்தால், வெட்டி யெடுப்பது தங்கமாகவே வருமல்லவா? அதுபோல உம்முடைய பெண்சாதியைத் துண்டு துண்டாக வெட்டியெடுத்தால் வெட்டியெடுப்பது பெண்சாதியாகவே வரவேண்டும். அங்ஙனமல்லாது இரத்த மாம்சங்களாக வெட்டப்படி வருதல்கூடும். அன்றியும், நீரென்னுடைய பத்தினியென்று சொன்ன அவள் ஸ்தூலபஞ்ச பூதத்திலிருந்து வந்தவள். நீரோ சரீரத்திற்குள் இருக்கின்றீர், அவளோ சரீரத்திற்கு வெளியி லிருக்கின்றாள். சரீரத்திற்கு வெளியிலிருக்கின்றவளுக்கும், சரீரத்திற்குள் இருக்கின்ற உமக்கும் எவ்விதமாகச் சம்பந்தங் கூடும்? மேலும், அவளது அவயவங்களுள், ஏதாவது ஒன்று முன்வந்து உம்மை எனதென்று சொல்லச் சொன்னதா? அது ஜடமாகையால் அங்ஙனஞ் சொல்ல வறியாது. நீரோ அதை எனதென்று சொல்லுகின்றீர். அது வாஸ்தவத்தில பூதங்களுக் குரியது. ஒருவன் சொத்தை யெனதென்று சொன்ன மற்றொருவனுக்குத் தண்டனை கிடைக்குமா? கிடைக்க மாட்டாதா?

‡ “ஜ்ஞாநேந்திரியை ஸஹமநோ, மநோமய கோச:”

(இ-ள்). ஞானேந்திரிய மைந்துடன் கூடிய மனம் மனோமய கோசமாம்.

செவியாதி ஞானேந்திரிய மைந்துடன் கூடிய மனோமய கோசம் பிராணமய கோசத்திற்குள்ளாய், காமக் குரோத லோப மோக மதமாற்சர்ய மென்னும் பகைவர்க்கங்களுடையதாய், சரீரத்தில் நானென்னும் புத்தியும் மனைவி மக்கள் முதலியோரிடத்தில் எனதென்னும் புத்தியு முடையதாய், சங்கற்பவடிவமாயிருப்பதாம். அது நானென்பதன் பொருளாமா? சகல விஷயங்களையு மெனதெனின், உமக்கெந்த வாதாரமு மகப்படாது. நீர் விகாரியா? சத்தா? அசத்தா? சித்தா? ஜடமா? ஆநந்தமா? துக்கமா? நிர்விகாரியா? என்று அநேகப் பிரசனைகளைச் செய்தார். செப்பவே,

‡ ജ്ഞാനേന്ദ്രിയൈസ്സഹ മനോമയ കോശഃ ।

மனோமயன் ஒன்றுந் தோன்றாமல் பலவிதமாக யோசித்தோடிப் போவதற்கு வழியில்லாமல் விழித்திருந்தான்.

கோர்ட்டார் அதுகண்டு இவன் உலகத்தி லிருக்கின்ற திருடர்களுக்கெல்லாம் பெரிய திருடனா யிருப்பதனா லிவனுக்குச் சொரூபாநு சந்தானமென்னும் வேலையிட்டு, விஷய வைராக்கிய மென்னும் விலங்குகளைப்பூட்டிப் பின்னவனை இராப்பகலற்றவிடத்தில் படிக்கச்செய்து, சுவாசனையென்னும் பெரியபாரை மேலிட்டுத் தூங்கச் செய்யுங்களென் றேவலாளர்கட்குக் கட்டளை விதித்து, மற்றச் சாக்ஷிகளை யழைக்கும்படி ஆக்ஞாபித்தனர்.



## ஏழாவது சாட்சி விஞ்ஞாநமயன் விசாரணை.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அணியணி யாக வோங்கு மண்டபிண் டாண்ட மாதிக்
கணிகவைம் புலன்க ளோடு கலந்துரு வான புத்திக்
கணமதிங் குணரில் வேறு கடவுளை மதியா ரென்னுஞ்
சணிகவிஞ் ஞானன் வந்து சாற்றிய சாட்சி சொல்வாம்.

பிரதிவாதி வக்கீலாகிய கோரஅடபுத்தி யெழுந்து நின்று யோகாசாரனை யநுசரித்த க்ஷணிக விஞ்ஞானமயனைக் கோர்ட்டார் முன்பாக அழைத்துப் பிரமாணஞ் செய்வித்து, சர்வசக்தி யுக்த சற்குரு ப்ரபு சக்ரவர்த்திபாராகிய கோர்ட்டாரவர்களைப் பார்த்து, கோர்ட்டா ரவாகள் சந்நிதானத்தில் பிரதிவாதிகளின் தப்புச் சாட்சியாக வந்திருக்கும் இவா ளங்களுக்கு முக்கிய சாட்சியா யிருப்பதனாலும், இவர் மிகக் கண்ணியமும் தேசசும் உடையவராதலாலும், இவருக்கு மரியாதை செய்து விசாரிக்கும்வரை யாசனமளிக்க உத்திரவுசெய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க,கோர்ட்டார் இருதய மென்னும் ஆசன மளிக்கும்படி கட்டளை யிட்டனர். அப்போதே விஞ்ஞானமயன் இருதயா சனத்தி லமர்ந்தனன்.

பி. தங்களது பெயர் யாது?

உ. விஞ்ஞானமயன்.

பி. உம்முடைய தந்தையின் பெயரென்ன?

உ. மகா அகங்கார ரிஷி.

பி. தாங்கள் நானென்னும் ஆத்மசொத்தை அறிவீரா?

உ. எம்மைவிட ஆத்மசொத் தென்பது வேறொன்றில்லை.

பி. நானென்னும் ஆத்மசொத்தை நீரென்பதற்குச் சுருதி, யுக்தி, அநுபவங்க ளென்னே?

உ § தஸ்மாத்வா ஏதஸ்மாத்மா மனோமயாந் தந்யோந்த,ராத்மா விஞ்ஞாநமயஃ விஞ்ஞாநம் தநுதே

(இ-ள்.) மனோமயனிலும் வேறு அந்த ராத்மாவாகிய விஞ்ஞானமயன்.

பஞ்சதசி.

‡ விஞ்ஞாநமய கோசாஃயம்ஜீவ இத்யாக மாஜகுஃ
ஸர்வ ஸம்சார ஏதஸ்ய ஜந்மநாசஸு காதிகஃ

(இ-ள்.) இந்த விஞ்ஞாநமய கோசத்தை ஆத்மாவென்று வேதங்கள் சொல்லுகின்றன. ஜனனமரண சுகதுக்காதி ரூபமான சம்சார மியாவும் இந்த விஞ்ஞானமய வடிவனான ஜீவனுக்கே உண்டாயிருக்கின்றன. இவைபோன்று மநேக சுருதிகளுண்டு.

இராஜ்ய பரிபாலனஞ் செய்கிற நரேந்திரன் ஆக்கினைக்குட்பட்டு, ஜனங்கள் நடந்து கொள்வதுபோலச் சர்வேந்திரியங்களும் என்னுடைய அநுமதிப் பிரகாரம் நடப்பதே யுக்தி.

இந்தக் கோர்ட்டில் வந்த கட்சிக் காரருக்கும் சாட்சிகளுக்கும் கோர்ட்டார் மரியாதை செய்யாமல் எனக்கு மாத்திரம் ஆசனங் கொடுத்து மரியாதை செய்ததே அநுபவமாம்.

கிராக: அதிருட்டாம கிராமிய ஸாத்வீகாம்ச புத்தியென்னும் வாதி வகிலெழுந்து கோர்ட்டாருக்கு நமஸ்கரித்து நின்று, இப்போது சாட்சியாக வந்தவர் க்ஷணிக விஞ்ஞான மயமாகிய புத்தியை ஆத்மா வென்னும் பௌத்தமத வாதியாவர். இந்தச் சாட்சியை விசேஷமாய் விசாரிக்கத் தயவுசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார். உத்தரவாக, அந்தப்பிரகாரம் விசாரிப்பாராயினர்.

---

§ தஸ்மாத்வா ஏதஸ்மாந் மநோமயாத் அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமயஃ விஜ்ஞாநம் தநுதே।

‡ விஜ்ஞாநமய கோசோऽயம் ஜீவ இத்யாகமா ஜகுஃ।
ஸர்வ ஸம்ஸார ஏதஸ்ய ஜந்மநாசஸுகாதிகஃ॥

பி - உம்மை நீர் அறிவீரா?

உத் - என்னையான் விஞ்ஞான மயனென் றறிவன்.

பி - உம்முடைய பாட்டனார் பெயரென்ன?

உத் - ரிஷிமூலம் நதிமூலம் விசாரியாமை போல, அதுபற்றி விசாரித்தல் கூடாது.

பி - உம்மைப் பெற்ற தாயின் பெயரென்ன?

உத் - என்னுடைய தாயின்பெயர் அவிவேக சூடாமணி.

பி - சதா நீர்செய்கிற தொழில்க ளியாவை?

உத் - பார்த்தல், கேட்டல், ஸ்பரிசித்தல், வசனித்தல் முதலிய இந்திரிய வியவகாரங்களாம்.

பி - பார்த்தல், கேட்டல் முதலிய தொழில்கள் சட்சுராதி இந்திரியங்களைச் சேர்ந்தவை. அந்த இந்திரியங்கள் நாசமடைந்த காலத்தில் நீரிந்தத் தொழில்களை யெவ்வாறு செய்தல் முடியும்? ஆகவே, மேல் வியவகரித்த காரியங்களைச் செய்து வருகிறேனென்பது பொய்யாம். நானென்னும் சொல்லிற்கு விஞ்ஞானமே அர்த்தமாயின், என் வீடு என் வாசலென்பது போல, உலகினர் ‡ என்புத்தி யென்று சொல்லுதல் கூடாது. அவ்வாறிருந்தவின், நானென்னும் ஆன்மாவை நீர்நினைத்தபடி நானென்றுசொல்லுதல் கூடுமா? என்புத்தி யென்னும் மொழியில் நான் வேறு என் புத்தி வேறு என்றேற் படவில்லையா? அவசரப் படாமல் நிதானித்துச் சொல்லும். மோக்ஷமாவ தென்ன?

உத். நான் நானென்னும் விஞ்ஞானதாரை ஆலய விஞ்ஞான தாரையாம்; அதுவே புத்தியெனப்படும். இதுகடம், இதுபடம், இதுசரீர மென்னும் விஞ்ஞானதாரை பிரவிருத்தி விஞ்ஞான தாரையாம். பிரவிருத்தி விஞ்ஞான தாரை ஆலய விஞ்ஞானதாரையினின் றுண்டாகின்றது. மனத்தின் சொரூபம் பிரவிருத்தி விஞ்ஞான தாரையி லிருக்கிறது; ஆதலால், மனம் ஆலயவிஞ்ஞான தாரை வடிவமான புத்தியின்காரியமாம். அந்தப் புத்தியே ஆத்மாவாம். ஆலய விஞ்ஞான தாரையில், பிரவிருத்திவிஞ்ஞானதாரையின் பாதத்தை (பொய்யென்பதை)ச் சிந்தித்தலாலுண்டாகும் நிர்விசேஷ க்ஷணிக விஞ்ஞானதாரையின் ஸ்திதியே மோக்ஷமாம்.

‡ என்னுத்மா வென்று கூறுவது தேகமுதலிய வற்றினும் ஆத்மாவேறுவதாம்.

மனம்போன்று புத்தியும் ஜீவனுக்குக் கரணமாயிருத்தலால் அஃதான்மாவாக மாட்டாது. அந்தக்கரணத்தி னொருபகுதியாயபுத்தியை ஆன்மாவென்று கூறுவது ஒருவகையானு மமையாது. ஆன்மாவின் நாசமுண்டென்பதற் கியாதொரு பிரமாணமு மின்மையின், அதனை க்ஷணிகவடிவம் (க்ஷணப்போதிருப்பது) என்று கூறுவது ஒப்பத்தக்கதாகாது. ஆத்மா க்ஷணிக வடிவமாயின், முதல் மாதத்தில் கடன் கொடுத்தவன் அடுத்த மாதத்தில் அதனைக் கேட்டல் கூடாது; முதல்க்ஷணத்தில் போஜனஞ் செய்தவன் அடுத்த க்ஷணத்தி லிராமையால் போஜனத்தின் முடிவில் நான் திருப்தி யடைந்தே னென்றுரைத்தலுங்கூடாது. ஆதலால், ஆன்மா க்ஷணிக வடிவமென்பது பொருந்துவதன்றாம். மோட்ச மென்பது க்ஷணத்தில் மறைந்து போவதன்று; நித்திய வடிவினதாம்; க்ஷணத்தில் மறைந்து போவதாயின், மோக்ஷமடைவதன் பொருட்டுள்ள ஸாதனங்களெல்லாம் பயனற்றனவாய் ஒழியும்? இவற்றிற் கெல்லாம் விடைகூறல் வேண்டும். யாது கூறுகிறீரென்று கேட்டார். கேட்க, அதற்கு விஞ்ஞானமயன்,

உத். இதுவரையிலென்னை இவ்வாறு கேட்டவர்களில்லை. இங்கு நான் எனதென்பதன் (குட்டு) ரகசியத்தை எடுத்துக் கூறி எனது சித்தாந்த முழுதுங் கெடுத்துவிட்டீர். என்னுடைய கண்ணியத்தைப் போக்கடித்து விட்டீர். எனது தன்மையைச் சிறிதேனும் நீங்களறியீர். நானே சம்பன்னன்; நானே வித்துவான்; யான் கர்ம காண்டத்தில் சொல்லுகின்ற பிரகாரம் பௌண்டரீக யாகம் வரையில் செய்திருக்கின்றேன்; நான் செய்யாத யாகாதி காரியங்களில்லை. என்னுடைய யோக்கியதையைக் குறித்துத் தெரிந்து கொள்வதில் எனக்குச் சமானவர்களுக்கன்றி மற்றவர்களுக்குத் தெரியாது. இதனை இந்தச்சபையிலிருக்கும் பிரதி கட்சிக்காரரும் அறியார்கள். நான் எவ்விடத்திலிருந்தாலும் எனக்கே ஜனங்கள் மிகுந்த வுபசாரங்களுடன் அக்கிரபூசைசெய்து தாம்பூலங்களுங் கொடுப்பார்கள். என்னைப்பார்த்தபோதே யாவரும் எனக்கு நமஸ்காரஞ் செய்ய வேண்டும். அப்படி செய்யாதவர் களுக்கு நான் கோபித்துச் சாபங் கொடுப்பேன். நானே கசந்தக்கிராகி; நானே சர்வஞ்ஞன்; எனக்குமேல் ஈசுவரனில்லை; எனக்கொரு குருவுமில்லை. எனக்கிருக்கும் யோக்கி

யதை எவருக் குண்டு; நான் தேவர்களுக்கும் சாத்தியமாகா திருக்கும் சோமபான மெவ்வளவோ செய்திருக்கிறேன்; அந் தப் புண்ணியங்களினால் சிறிதுகாலம் இகலோக விசேஷங்களை நன்றா யநுபவிப்பேன்; திவ்விய விமானத்திலேறித் தேவலோகத் திற்குச் சென்று அங்கு இந்திராதி சகல தேவர்களும் எனது பாதப்போதினில் விழுந்து சேவித்துப் புகழ அதி யுந்நதமான ஸ்தானத்திருந்து தேவாமிர்தத்தைத் தங்கக் குடங்களில் தேவர் கள் கொண்டுவந்து கொடுக்க வயிறாரவுண்டு அளவுகடந்த சந்தோ ஷ மடைவேன். இவ்வுலகத்தில் நான் பெண்சாதி பிள்ளைகளுடன் சுபேச்சையாய்ச் சுகமநுபவிப்பது போலவே அரம்பை ஊர்வசி முதலிய அப்ஸரஸ்திரீகளைத் தேவலோகத்திலும் அநுபவிப்பன். நானநுபவிக்கின்ற சுகங்களைச் சொல்லவேண்டுமாயின், அஃது ஆதிசேஷனாலும் முடியாது. என்னுடைய பிரதாபங்களை நன்றாக மனிதர்களறியார்கள். என்னை புகழுவதற்கு யானே தக்கவனெ ன்று பலவாறாகக் கூறினான். அவன் தன்னைத்தானே வர்ணித்துக் கூறியதைக் கோர்ட்டார் கேட்டு வெறுப்புற்று இவன் மிக துர் மார்க்கனாவனென்று தீர்மானித்து இவனுக்கு இந்திரியநிக்கிரக மென்னும்விலங்கிட்டு ஆசனமரியாதைகளை பகற்றி வாருங்கள்போ ங்களென்னும் பகுவசனப் பிரயோகங்களை நிறுத்தி, ஏக வசனத் தினால் இவனை யழைத்துவா வாதி வக்கீலுக்கு எச்சரிக்கை செய்த னர். கோர்ட்டார் முன்பாகவே மிக வலக்ஷியமாகப் பேசுகின்ற விவன் மற்ற விடங்களி லடங்கானென்பது சாக்ஷிகளில்லாமலே தெரிய வருகிறதினால், முன்னர்த் தண்டனைசெய்த சாக்ஷிகளைப் போல இவனைத் தண்டிப்பது சரியன்று; இப்போதே யிவனைக் கர்த்திருத்வாதி நாசனமென்னுந் தூக்கில் மாட்டி விட வேண்டு மென்று வாதி வக்கீல் கூறினார். அதற்குக் கோர்ட்டார் நன்றாய் விசாரியாது யாதொன்றுஞ் செய்ய முடியாதென்று கூறி, மீண் டும் விசாரணைசெய்ய ஆரம்பித்தனர்.

பி. விஞ்ஞான மயனென்னும் உனக்குச் சுருதி யாதாரமுண்டா?

உத். † அந்யோந்தராத்மா விஜ்ஞானமய: விஜ்ஞானம் ப்ரஹ்ம சேத்வேத தஸ்மாச்சேந்ந ப்ரமாத்யதி சரீரே பாப்மநோ ஹித்வா

---

† 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌃” 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌚𑍇𑌦𑍍𑌵𑍇𑌦 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚𑍇𑌨𑍍𑌨 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍍𑌯𑌤𑌿 𑌶𑌰𑍀𑌰𑍇 𑌪𑌾𑌪𑍍𑌮𑌨𑍋 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾

ஸர்வாந்காமாந்ஸமச்நுதே" விஞ்ஞாநம் யஜ்ஞம் தநுதே கர்மாணி தநுதேபிச"

(இ-ள்.) புத்திவடிவ விஞ்ஞானமயமே ஆத்மா. அந்த விஞ்ஞானமே பிரஹ்மம், அவ்விஞ்ஞானத்தின் ஞானத்திற்குச் சர்வபாபங்களின் நிவிர்த்தி வடிவமும், சர்வ காமங்களின் பிராப்தி வடிவ பயனுமன்றிச் சுருதிஸ்மிருதிகளால் ஆத்மஞானத்திற்கே பயன் வடிவமாகப் பிரசித்தமாம். அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கே யாக முதலிய கர்மங்களின் கர்த்தாத் தன்மையு முண்டு.

## வேதாந்த பஞ்சதசி.

‡ "விஞ்ஞாநமய கோசோயம் ஜீவ இத்யாகமாஜ்ஜகுஃ
ஸர்வஸம்ஸார ஏதஸ்ய ஜந்மநாச ஸுகாதிகஃ"

(இ-ள்.) விஞ்ஞானமய கோசமே ஜீவனென்று வேதங்கள் சொல்லுகின்றன. ஜநநமரண சுகதுக்கங்களாகிய சர்வசம்சாரமும் இந்த ஜீவனுக்காம்.

## விவேக சூடாமணி.

¶. புத்திர்புத்தீந்த்ரியைஸ்ஸார்த்தா ஸவ்ருத்தி: கர்த்ருலக்ஷண:
விஜ்ஞாநமய கோசஸ்யாத் புமஸ்ஸம்ஸாரகாரணம்

(இ-ள்.) புத்தி ஞானேந்திரியங்களுடன் கூடினால், கர்த்ரு கோசமாம்; சர்வ வியாபாரங்களுடன் கூடினால், புருஷனுக்குச் சம்சார காரணமாய விஞ்ஞானமய கோசமாம்.

இவை முதலிய சுருதி ஸ்மிருதிப் பிரமாணங்களால் விஞ்ஞானமயனே ஆன்மாவாம் என்றனை.

பி. ரூபாதிகளின் ஞான ரூபகாரியத்திற்கு நேத்திராதி யிந்திரியங் கரண(சாதன)மாக இருப்பதுபோல் புத்தி நிச்சயரூபகாரி

---

[illegible]

‡ [illegible]

¶ [illegible]

யத்திற்குக் காரணமாக இருத்தலால், அஃது ஆத்மாவாகா தென்றும், எல்லாப்பதார்த்தங்களையும் நிச்சயஞ்செய்யும் புத்தியை அறிவதே ஆத்மாவாமென்றும்சொல்லும சுருதி ஸ்மிருதிகளை நீ அறியாய் போலும்.

கடவல்லி யுபநிஷத்தின் மூன்றாவது வல்லி.

‡ ஆத்மாநம் ரதிநம்வித்தி சரீரம் ரதம்மேவது,
புத்திந்து ஸாரதிம்வித்தி மநஃப்ர க்ரஹமேவச.

என்று ஆத்மாவை ரதிகனாகவும் தேகத்தை ரதமாகவும், புத்தியைச் சாரதியாகவும் சொல்லுகிறது. ரதிகனைவிடச் சாரதி வேறாதலால் புத்தி ஆத்மாவன்று. என் புத்தி மந்தமா யிருக்கிறது; தீவிரமா யிருக்கிறது என்பனவற்றில் மமதைக்கு விஷயமா யிருக்கிறது; மமதைக்கு விஷயமாயுள்ள அந்தப் புத்தி அகந்தைக்கு விஷயமாக மாட்டாதென் றறியாய்போலும். அது பற்றியாம் சொல்லும் சுருதிஸ்மிருதிகளைக் கவனிப்பாயாக.

விவேக சூடாமணி.

$ அதோ நாயம பராத்மாஸ்யாத விஜ்ஞாநமய சப்தபாக
விகாரித்வாஜ்ஜடதவாச்ச பரிசின்னத்வ ஹேதுதஃ
த்ருச்யத்வாத் வ்யபிசாரித்வாந நாநித்யோ நித்ய இஷ்யதே'

(இ-ள்.) விஞ்ஞானமய கோசம் பரமாத்மாவன்று; ஏனெனின், அது விகாரமுடையதாயும், ஜடவடிவாயு மிருக்கும் ஏதுவினாலும், அற்பத்துவத்தினாலும, திருசியமாயும் அனித்தியமாயு மிருக்கின்றது அஃது ஆன்மாவன்று. ஆத்துமா யாவற்றையும் அறியும். அது வேறெதனாலும் அறியப்படாது.

ஆதலால், அநித்யமான புத்தி நித்தியமாகிய ஆன்மாவாக மாட்டாது. மேலும்,

---

‡ 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌥𑌿𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌰𑌥𑌮𑍇𑌵 𑌤𑍁
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌤𑍁 𑌸𑌾𑌰𑌥𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌗𑍍𑌰𑌹𑌮𑍇𑌵 𑌚

$ 𑌅𑌤𑍋 𑌨𑌾𑌯𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌶𑌬𑍍𑌦𑌭𑌾𑌕𑍍
𑌵𑌿𑌕𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌡𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌤𑍍𑌵𑌹𑍇𑌤𑍁𑌤𑌃
𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯 𑌇𑌷𑍍𑌯𑌤𑍇

## பைங்களோபநிஷத்.

* "க்ஞாநேந்திரியைஸ் ஸஹபுத்திர் விஞ்ஞானமயக்கோசஃ"

(இ-ள்.) ஞாநேந்திரியங்களோடுடன் கூடிய புத்தி விஞ்ஞானமய கோசமாம். இது மனோமய கோசத்திற்குளளாய் இகபரகருமவிஷய அறிவினையுடைத்தாய், கர்த்திருத்துவ அபிமானமுடையதாம்; நானென்னுஞ் சொல்லிற்கு (மயக்ககாலத்திற்) பொருளாம். சேதனத்தின் பிரதிபிம்பத்திற் கிடமாயிருப்பது புத்தியாம்.

உன்னைக் கேட்டதற்குச் சரியான உத்தரங் கொடுக்க வறியாது வீணாக என் கோபித்துக் கொண்டாய், இது காறும் கோர்ட்டாரிடத்து உபரீது எவர்களும் பிரியாது கொடுக்காமையினாலும், உன்னை யிந்தக் கோர்ட்டார் விசாரிக்காமையினாலும், உனக்கிவ்வளவு அகங்கார முண்டாயிற்று. உன்னுடைய (குட்டு) மானம் இப்போதே வெளியாகின்றது. உன்னை நீயே புகழ்ந்துகொள்ளுதல் குரங்கு தன்னுடைய மலத்தைத் தானே பிரீதியாக முத்தமிடுவது போலாம். எனக்குயானே பெரியவனென்று புகழ்ந்துகொண்டு நீ தந்த வாக்கு மூலத்தினைல் நீ மகாராகியென்றும், குரோதனென்றும், துர்குணசிகாமணி யென்றும் நன்றாய்த் தெரிய வந்தன நீ செய்த கருமங்களுக்காக ஈசுவரன் உனக்குச் சுவர்காதி போகங்களைக் கொடுத்திருக்க, அவனை மறந்து எனக்கு வேறாக ஈசுவரனுங் குருவும் இல்லையென்றும் சொன்னையல்லவா? ஒருவன் ஒரு வேலையைப்பற்றிக் கூலி பேசிக் கொண்டு அந்த வேலையைச் செய்யாமல் தானே தனதிச்சைப்படி காட்டுக்குப்போய் ஒருவேலைசெய்தால் அந்தத்தொழில் அவனுக் கென்ன பலனைத் தரும்? அப்படியே ஏகனுகியும், சர்வாதாரனுகியும், சர்வவியாபகனுயு முள்ள ஈசுவரனுடைய நியதியில்லாமல் உனக்குச்சுவர்க்காதி போகங்களை யாவர் கொடுப்பார்; அவை எவ்வாறு கிடைக்கும். குருவில்லாமலே வித்தைகள் வந்தனவென்று கூறினாய். அஃது ஒரு மங்கையானவள் புருஷன் கிருபையின்றி ஒன்பது குருபுத்திரர்களைப் பெற்றேனென்பது போலாம். மேலும், அவளை உத்தமஸ்திரீயென்று உலகில் ஒருவருஞ் சொல்லார். அது போல உனக்கு யோக்கியனென்னும் பெயரமையாது. நீ கர்மங்

---

* "ஜ்ஞாநேந்த்ரியைஸ்ஸஹ ஸுத்திர்விஜ்ஞாநமயஃ கோஶஃ"

களைச்செய்து சுவர்க்கபலனுகிய கூலியைபுசித்து மறுபடியும் அங்குள்ளவர்களால் கீழே தள்ளப்பட்டு, பூமியின்கண் வந்து கருமங்களைச்செய்து வருவதுபோலிருக்கின்றதெனுல், அது பக்ஷணங்களுடன் விளையாடப்போய்ப் பட்சணங்களானபிறகு மறுபடியும்வீட்டிற்குவந்து தாயிடத்துப் பட்சணங்களைக்கேட்டு வாங்கிக்கொண்டு வந்து விளையாடுகிற குழந்தைகளுக்குச் சமானமாயிருக்கின்றது. உண்மைபோல அநேக ஜீவர்கோடிகள் வியவகரித்து வருகிறார்கள்; அவர்களில் நீயுமொருவனே, இதில் ஆதிசயமொன்றுமில்லை.

சிவகீதை.

†. “ந கர்மணா மநுஷ்யாணாம் ந தபஸா ந தாநாபி வா
கைவல்யம் லபதே மர்த்ய: கிந்துஜ்ஞாநேந கேவலம்”

(இ-ள்.) ஸ்நாநம் சந்தி ஜபம் தபம் தானாதிகளினுல் மோக்ஷமடைதலில்லை; கேவல ஞானத்தினுல் அது சித்திக்கும்.

கைவல்லியோபநிஷத்.

‡ நகர்மணா நப்ரஜயா தநேந த்யாகேநைகே
அமிர்தத்வமாநசு:

(இ-ள்.) அநந்தகர்மங்களாலும், புத்திர சந்தானங்களாலும், தனதானத்தினுலும் மோக்ஷம் சித்திப்பதில்லை.

சூதசங்கிதை.

தேகாதி யிந்திரியங்க ளையோ முயுத்தி யன்றுவரு தேட மருந்தே
மோகாதி யாவகமும் சம்பந்த முண்டுபூ ஞானிக்கில்லை.

ஞானவாசிஷ்டம்.

தவமகத் தீர்த்தஞ் சேவை பருசனை தான மாதி
அவமயக் கதத்தா னீனுள் விலங்குபோ லவத்தர் வாழ்வை
பவமுறு சிறைற்றை விட்டுப் பரிசுத்த பரம போதங்
கவரறப் பற்றி யெல்லாக் காதலு நீக்கி நிற்பாய்.

---

† ந கர்மணா நுஷ்டாநைர் ந தபஸா ந தாநாதிபி: ।
கைவல்யம் லபதே மர்த்ய: கிந்து ஜ்ஞாநேந கேவலம்’

‡ ந கர்மணா ந ப்ரஜயா தநேந த்யாகேநைகே
அம்ருதத்வமாநசு:

### திருமந்திரம்.

'நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனஞ், சத்த முதலைந் துந் தத்துவத் தானீங்கிச், சுத்தம சுத்தந் தொடரா வகைநினைந், தத்தன் பரன்பா லடைதல்சித் தாந்தமே''

### பிரமகீதை.

சுழுத்தியத னிற்றுயர் துவக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னைவிறையை யெய்தாற்,
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கு
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான்.

என்ற பிரமாணங்களுக் கமைய ஆத்மாநாத்மா, சித்ஜடங்களின் விவேகத்தினாலும், குருகடாக்ஷத்தினாலும், மாயாகாரியங்களாகிய பிராதிபாசிக பதார்த்தமா மொழிந் தபாவமாயிற் றென்பதாம். விசாரணை மாத்திரத்தினாலே விஞ்ஞானமயன் மித்தையாகப் போயதே இறந்துவிட்டா னென்னும வாக்கியத்தின் பாவமாம்.



## எட்டாவது சாட்சி ஆநந்தமயன் விசாரணை.



### அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்

ஆநந்தம் பிரம மென்றிங் கருமறை புகழ்வ தன்றி
யாநந்தஞ் சுழுத்தி யென்றிங் கறிந்துளா ரனேக ரந்த
ஆநந்த மன்றித் தெய்வ மறைவதற் கில்லை யென்னும்
ஆநந்த மயனும் வந்து யறைதலாஞ் சாட்சி சொல்வாம்.

கோரமூட புத்தியென்னும் பிரதிவாதி வகீலெழுந்து கோர்ட்டார் முன்னர்ச் சாட்சியாகவந்த பட்டர்மதத்திற் சேர்ந்த வைதிகனாகிய ஆநந்தமயனை அழைத்து, பிரமாணஞ் செய்வித்த மாத்திரத்தில், அவனை வகீல் முகாந்தரமாய் விசாரிப்பது காலதாமத மாகுமென் றெண்ணிக் கோர்ட்டார் நேராய் விசாரணை செய்ய வாரம்பித்தனர்.

பி நீ நானென்னும் ஆத்மாவை அறிந்திருந்தால் சொல்லுவாய்?

உத். ஆநந்த மயனென்னும் என்னையன்றி ஆன்மா வேறென்பதில்லை.

பி. ஆநந்த மயனை ஆன்மா வென்பதற்குச் சுருதி யுக்தி யநுபவமென்ன ?

உத். † "தஸ்மாத்வா ஏதஸ்மாத் விக்ஞாந மயாதந்யோந்தராத் மாநந்தமயః" "ஆநந்தம் பிரஹ்ம".

(இ - ள்.) விஞ்ஞான மயனுக்கு ஆந்தரமாகிய ஆநந்தமயனை ஆன்மாவாம். ஆநந்தமே பிரஹ்மமாம்.

‡ "அந்யோ விக்ஞாந மயத ஆநந்தமய ஆந்தரః
அஸ்தீத்யே வோபலப்யதவ்ய இதிவைதிக தர்ஸநம்".

(இ - ள்.) விஞ்ஞாநமய கோசத்திற் கந்நியமாய் அதனுள்ளே ஆநந்தமய கோச மிருக்கிறது.

இவை சுருதிகளாம். ஒவ்வொருவரும் நித்திராநந்தத்திற்காகவேண்டிய சித்திர விசித்திரமான பாய், அதிமிருதுவான பஞ்சணை மெத்தை, மகாவுந்நதமான சப்பிரமஞ்சம், அழகான தலையணை, காம்பீரமான திண்டுதிவாசுகள் முதலிய சாதனங்களைத் தேடுவதே யுத்தியாம்.

ஸ்திரமான ஆன்மா ஜடவடிவமாகவும், சித்வடிவமாகவு மிருக்கிறது. எப்படி யெனின், சுழுத்தியி னின்றும் விழித்த புருடன் நான் ஜடனாகத் தூங்கினேன் என்றுரைப்பதால் ஆன்மா ஜடவடிவமெனப் படுகின்றது. தூங்கி விழித்தவுடன் நான் ஜடமாகத் தூங்கினேனென்னும் ஸ்மிருதி யுண்டாகின்றது. அறியப்படாத பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகாதென்பது நியமமா யிருக்கின்றது. ஆன்ம ஸ்வரூபத்திற்கு வேறாக யாதொரு ஞானசாதனமும் சுழுத்தியவத்தையி லின்று. ஸ்மிருதிக்குக் காரணமாகச் சுழுத்தியிலும் ஞானமிருக்கின்றது; இராதபக்ஷத்தில் சுழுத்தியிலிருந்தெழுநதவனுக்கு ஸ்மிருதி யுண்டாதல் கூடாது; உண்டாகின்றபடியால் ஸ்மிருதிக்குக் காரணமான ஞானம் சுழுத்தியி லுளதென்பது திண்ணமாம். அந்த ஞானம் ஆன்மாவின் சொரூபமாகவிருக்கிறது. ஆகையால்; பிரகாசமாயு மப்பிரகாசமாயு மிருப்பது ஆநந்தமயகோசமாம். ஆன்மா வாநந்த மயமேயாம். ஆதலால் யாவரும் சாக்கிரத் சொப்பனவஸ்தைகள் நீக்கி மனதின்

---

† 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌤𑌰 𑌆𑌤𑍍𑌮𑌾𑌽𑌽𑌨𑌨𑍍𑌦𑌮𑌯𑌃 𑌆𑌨𑌨𑍍𑌦𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮.

‡ 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌤 𑌆𑌨𑌨𑍍𑌦𑌮𑌯 𑌆𑌨𑍍𑌤𑌰𑌃 ।
𑌅𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍇𑌵𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌵𑍈𑌦𑌿𑌕𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥

சலனதருமங்களுமின்றி ஒருபோதகையும் அவஸ்தையே சுழுத்தியானந்தமாம்.

கரும மீமாம்சகருளொரு பகுதியினராயபட்டரது சித்தாந்தத்தை மேற்கொண்டொழுகும் ஆநந்தமயனைப் பார்த்துக் கோர்ட்டார் நீர் கூறிய விஷயம் அஞ்ஞான அவத்தையிற் சேர்ந்ததாம். அஃதேக தேச ஆநந்தமாம். அஃதவஸ்தாத்திரய வியவகாரங்களிற் சேர்ந்ததாக விருப்பதால், பண்டிதாங்கீகார மாகமாட்டாது. அஃது ஆலையில்லாவூரி லிலுப்பைப்பூ சர்க்கரை யென்பது போலாம்.

‡ "தத்பிரஹ்ம தாபத்திரயாதீதம், சட்கோச விநிர்முக்தம்,
சடூர்மி வர்ஜிதம், பஞ்சகோசாதீதம்,
சட்பாவ விகாரசூன்ய மேவாதி சர்வ
விலட்சணம் பவதி".

$ "நிர்விகல்ப மநந்தஞ்ச ஹேதுத்ருஷ்டாந்த வர்ஜிதம்"

¶ அப்ரமேய மநாதிஞ்ச ஞ்ஞாத்வாஸ பரமம்சிவம்". என்று சுருதி கூறியவாறு.

அந்தப் பிரஹ்மம் தாபத்திரயா தீதமாயும், சட்கோசமற்றதாயும், சடூர்மிகளற்றதாயும் அந்நமயமாதி பஞ்சகோசங்களுக் கப்பாற்பட்டதாயும், சட்பாவவிகார சூனியமாயும், சர்வவிலட்சணமாயும், சர்வாதீதமாயும், நிர்விகாரமாயும், நிருவிகலபமாயும், நிருபாதிகமாயும், அளவைகளா லளக்கப்படாதாயும், நித்தியமாயும், சத்தியமாயும், விளங்குவதாம். அதுவே யுண்மைநோக்கில் நானென்பதன் பொருளாம். அத்தகைய நானென்னும் ஆன்மா சுகாதீதமென்று சுருதிகள் கோஷித்தலை யறிந்தால் நீர் இவ்வாறு கூறமாட்டீர்.

## ஞானவா சிஷ்டம்.

"இதுதா னனவு கனவல்ல விடர்சங் கற்ப மிலாமையினால்
பொதுவாஞ் சுழுத்தி தானன்று போத மின்மை தீர்தலினால்

---

‡ 𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌾𑌪𑌤𑍍𑌰𑌯𑌾𑌤𑍀𑌤𑌂 𑌷𑌟𑍍𑌕𑍋𑌶𑌵𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌂
𑌷𑌡𑍂𑌰𑍍𑌮𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌪𑌞𑍍𑌚𑌕𑍋𑌶𑌾𑌤𑍀𑌤𑌂
𑌷𑌡𑍍𑌭𑌾𑌵 𑌵𑌿𑌕𑌾𑌰𑌶𑍂𑌨𑍍𑌯 𑌏𑌵𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵
𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌭𑌵𑌤𑌿

$ 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌮𑌨𑌨𑍍𑌤𑌂𑌚 𑌹𑍇𑌤𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌨𑍍𑌤 𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂

¶ 𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑌨𑌾𑌦𑌿𑌂𑌚 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌤𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌶𑌿𑌵𑌂

சதுரா விர்தச் சகநன்றாந் தனது நிலைக்கே சமித்திறக்கு
முதுஞா னிகளுக் கினுதுரிய மூடர்க் குலகந் திரநிலையாம்".

தசகம்.

" சாக்கிரமிலை சொப்பனமிலை சார்சுழுத்தி யிலையிதிற்
றூக்குவிச்வனிற் றைசதனிலை தங்குபிராஞ்ஞனு மில்லைமூன்
றூக்கையுமிலை யவையளித்தை விகாரமாதலி ஞலிவை
நீக்கிநின்றிடு துரியபூரண நித்தபோத சிவோகமே".

என்று அநந்த பிரமாணங்களிருத்தலையும் அறியாதிருக்கின்றீர். மேலும், நீர் கூறிய ஆத்மா பிரகாசவடிவமாகவும் அப்பிரகாச வடிவமாகவும் இருக்குமென்பது விநதையினும் விந்தையாக விருக்கின்றது. அது சூரியனொளியுருவமாகவும் இருளுருவமாகவும் இருக்கிறனென்பது போன் றசங்கதமாம் மேலுமது ஓர் உடலில் ஒருபாதி பாலியமும் மற்றொருபாதி வார்த்திகமு மென்றுரைப்பது போலுமாம். பிரகாசமும் அப்பிரகாசமும் தம்முள் மாறுபட்ட பதார்த்தமாதலா லவையிரண்டும ஒருங்குசேர்ந் திருத்தல் எஞ்ஞான்று மியையாது. யான் ஜடமாயிருக்கிறே னென்பதற்கு யாதொரு பிரமாணமுமின்று. நான் சித்தாயிருக்கிறேனென்பது யாண்டுஞ் சிதைபாத சித்தாந்தமா யிருத்தலின், ஆதமா சித் ஜடமாயிருப்பதென்றுரைப்பதெங்ஙனமமையும். அறியப்படுதலை யிலக்கணமாகவுடைய ஜடமும், அறிதலையிலக்கணமாகவுடையசித்தும், ஒருங்குசேர்ந்து ஒன்றாயிருக்குமென்பது, குயவனும் குடமும் ஒரேபொருளென்று கூறுதல்போன் றவிவேகவார்த்தையாயிருப்பதால், இந்தச்சாட்சி தள்ளப்பட்டதென்று கூறித் தகுந்த சாட்சிகளை யழைக்கும்படி ஆக்ஞாபித்தனர்.



## ஒன்பதாவது சாட்சி சூனியாத்மன் விசாரணை.



அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நானெனும் பொருடான் சற்றே நாமரூ பங்க ளோடு
தானமா சகத்த பாவஞ் சகஞ்சிருட் டிக்கு முன்பின்
சூனிய மாகு மென்று சுழுத்தியைச் சாட்சி காட்டுஞ்
சூனிய வாதி தோன்றிச் சொல்லிய சாட்சி சொல்வாம்.

பிரதிவாதி வகீலான கோர மூடபுத்தியென்பவ னெழுந்து சூனியாத்மனை யழைத்து, கோர்ட்டார் முன்பு கிறத்திப் பிரமாணஞ்செய்வித்து, உம்மைக்கேட்கும் கேள்விகளுக்கு விடை நீர் ஜாக்கிரதையாக விருந்து சொல்லவேண்டு மென்றெச்சரித்துக் கேட்பானுனன்.

பி. நீர் நானென்னும் ஆத்மாவை யறிவீரா?

உத். நானென்னும் ஆத்மாவை யசத்சொரூபமாக யறிந்திருக்கின்றனன்.

பி. அதற்குச சுருதி யுகதி யநுபவங்களெவை?

உத் ‡ "அஸதேவ இதமக்ர ஆஸித்" என்றும் † "ஸ்ருஷ்டே புரா நாமரூப விவர்ஜிதம ஜகத்" என்றும சுருதி கூறியவாற்றால் சிருஷ்டிக்குமுன னிநதப் பிரபஞ்சம் நாமரூபங்களற் றிருநத போது, ஆத்மா வசத்தாக விருந்த தென்று பெறப்படுகின்றது. இதுவே சுருதியாம.

ஒவ்வொருகாரியமும் அதனதன் பிராகபாவத்தி லிருந்துண்டாதலே யுத்தியாம.

சுழுத்தியில் யாதுந் தோன்றாமலிருப்பதே அநுபவமாம்.

பி. ஆன்மா எவ்விதமாய் அசத்பதார்த்தமாம்

உத். எது உற்பத்திக்கு முன்னும நாசத்திற்குப்பின்னும அசத்தாயிருக்கிறதோ அது மத்தியகாலத்திலும் அசத்தேயாய், சத்தாகமாட்டாது; ஆதலால், ஆத்மா அசத்துவடிவமாம். அவ்வாறே ஆத்மாவுக்கு வேறான சகலபதாரததங்களும் உத்பத்திநாசமுடையனவா யிருத்தலின் அவையும் அசதவடிவமாம். இவ்வாற்றால் ஆத்மாவநாத்மாக்களாகிய சகலபதார்த்தங்களும அசத்வடிவமா யிருப்பதால், சூனியமே பரமதத்துவமாம்.

பி. பௌத்தமத சித்தாந்தத்தை யநுசரித்து இங்ஙனம கூறுகின்ற நீர் ஸ்ரீமத் சங்கராசாரிய ரியற்றிய தசகத்தைப் பார்த்தறியீர் போலும்.

---

‡ असदेव इदमग्र आसीत्

† सृष्टेः पुरा नामरूपविवर्जितं जगत्

## தசகம்.

இல்லை யேக மெனுஞ்சொ லும்மிரண் டென்று சொல்லுவ தெங்ஙனே, யில்லை கேவல மொட கேவல மில்லை சூனியா சூனிய மெல்லை யற்றவ கண்ட சிற்சுக மேக பூரண வஸ்துவாற், றில்லை வேத முடிப்பொருட்டனைத் தோன்ற வெப்படி யோதுவாம்.

## பகவற் கீதை.

† "நாசதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதேஸத" என்று கூறுவதால் பதார்த்தங்கள், இருந்து உண்டாக வேண்டுமேயன்றி யில்லாமலுண்டாதல் நியாய விருத்தமா மென்றறியீரோ ஆம். நீர் முதலிற் கூறிய சுருதிக்கு ஆதியில் சூனியமேயிருந்ததென்று அர்த்தமாயினும், பின்பு சத்தான ஜகத்பதார்த்தங் கோசரமாவதால் நீர் பிராந்தி கொண்ட அசத்தில் சத்து அந்தர்பூதமா யிருந்ததென்று தத்துவ பரிசீலர்களறிவார்கள். அஃதெப்படியென்றால், சுழுத்தியவஸ்தையில் காடாந்தகார சூனியத்தைப் பிரதிதினமு மநுபவிக்கா நிற்கும் நித்திரையினின்றும் விழித்துகொண்டவளவில் சகலப் பிரபஞ்சங்களும் முன் பிருந்தவாறு பிரகாசமாக விருக்கின்றன. பேதவடிவ காடாந்தகார சூனியதிருசிய சுழுத்தியில் பிரபஞ்சம் இல்லையென்பதுகூடாது; ஆனால் அஃதாங்குக் காரணவடிவமாக விருக்கின்ற தென்றறிதல் வேண்டும். நீர் கூறிய இரண்டாவது சுருதிக்குப் பொருள் சிருஷ்டிக்கு முன்பு சகத்தில்லையென்று சொன்னதேயன்றி ஆத்மாவில்லை யென்றன்றும். எந்தச் சுருதியும் ஆத்மாவில்லையென்று சொல்லவில்லை. கடம் சூனியத்தி லுண்டாகாது, மண்ணிலிருந் துண்டாவது சகலரும் அறிந்ததேயாம். சுழுத்தியில் ஒன்றுமில்லையென்று கூறுவது பொருந்தாது. அறிந்த நீரிருந்தீரல்லவா? அறியப்பட்டது ஒன்றுமில்லை என்று கூறியவன் அவசியமிருக்க வேண்டுமல்லவா? அவனுக்கில்லை யென்றெங்ஙனஞ் சொல்லலாம். ஒருவனால் சூனிய மநுபவிக்கப் படுகிறதெனின் அவன் சூனியத்திலும் வேறுபட்டவனென்பது பெறப்படுகின்றது; சூனிய மநுபவிக்கப் படவில்லையெனின், அப்போது சூனியமேயில்லை யென்பது பெறப்படுகின்றது இவ்வற்றால் சூனியத்திற்கு வேறாய் ஆத்மாவுள

† 'நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:

தென்பது சித்திக்கின்றது. இவ்வற்றுளொன்று மறியாது தப்பு சாட்சிகூறவந்த நீர் தண்டனைக்குரிய ரானீரென்றவனுக்குக் கடுங் காவற்றண்டனை விதித்து மற்ற சாட்சிகளையு மழைக்குமாறு ஆஞ்ஞாபித்தார்.



## பத்தாவது சாட்சி.

### சாங்கியன் விசாரணை.



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தீங்குறு மாயை யாலே சேறிந்திடும் பந்த முத்தி
பாங்குட னநந்த மாகப் பரிணமித் திருக்கு மென்று
மோங்கிடு மான்மா தானே யொன்றல பலவா மென்றுஞ்
சாங்கியன் கோர்ட்டார் முன்னர்ச் சாதித்த சாட்சி சொல்வாம்.

கோர்ட்டார் சாங்கியவாதியை அழைத்துப் பிரமாணஞ் செய்வித்து விசாரிப்பாராயினர்.

பி. நானென்னும் ஆத்மா சித்தா? ஜடமா?

உ. நானென்னும் ஆத்மா சித்தேயன்றி ஜடமன்று.

பி. அந்தச் சித்தானது ஏகமா? அநேகமா?

உ. அந்தச் சித்து அநேகமென்று சொல்லவேண்டும்.

பி. எந்த வேதுவால் அநேகமென்று சொல்லுகின்றீர்?

உ. பந்த மோக்ஷங்கள் பலவாயிருப்பதனால்.

பி. அவை பலவென்பதெதனால்?

உ. பிரதானத்தினால்.

பி. நீர் கூறிய பிரதானம் கர்த்தாவினை யபேட்சியாது காரியத்தை யுண்டுபண்ணுவது ஒருவகையாலும் பொருந்தாது; ஆத்மா அநேக மென்பது பொருத்தமற்றதாம். ஆத்மா பலவாயின், அவை, கடம் படம் போலப் பரிச்சின்னமும் திருசியமும் அனித்தியமுமாம். பரிச்சின்ன திரவியம் அவயவ முடையதாயிருத்தலின் அது காரியமுமாம். காரியபதார்த்தம் முக்காலத்திலு மிருப்பதன்றென்பது நியாயமாம்.ஆத்மா நித்தியமா யிருப்பதென்னு

மிலக்கணம், ஆத்மா பலவென்பதனால் மறுக்கப்படுகின்றது. ஆத்மா வனித்தியமாயின் அது முத்தியுற ஞானாப்பியாசம் செய்வது பயனற்ற செயலாம் 'அகமெனு மான்மா பூரண மேகம்' 'சித்துநா னிறைந்தோன்' என்றற் றொடக்கத்துப்பிரமாணம் ஆத்மா பலவென்னு முமதுகொள்கையைச் சின்னபின்னமாகச் சிதையச் செய்தலால், ஆத்மாபலவென்பது ஒருவகையினு மமையாது.

இவ்வினாக்களுக்கு அவன் விடைகூற வறியாது தேள்கொட்டிய திருடன்போன்று நிகைத்துநிற்பதைக்க கோர்ட்டார் பார்த்து இவன் மயங்கியவறிவினருள் முற்பட்டிருப்பவன; இவனைத்தக்கவாறுகத்தண்டிக்கவேண்டுமென்றுகூறியவுடன் அவன்மூர்ச்சையாய்ப் போயினன். இவனைவெறுங்காவலில் வைத்துவிடுங்கோளென் றேவலாளர்களுக்குக் கட்டளையிட்டு, இப்படி இரண்டாவது பிரதிவாதியின் சாட்சிகளுள் சிலரைத் தண்டித்து மற்றவர்களைத் தள்ளிவிட்டு 3-வது பத்தி காண்டியின் சாட்சிகளை விசாரணைசெய்ய அழைக்குமாறு உத்திரவு செய்தனர்.



## பத்தி காண்டி தன் கட்சியை ருஜுப் படுத்துதல்.

### பதினொன்றாவது சாட்சி

### சாலோககாமி விசாரணை.



**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

மேலாய பொருண்மூன் றீசன் வியாபக னித்தன் ஜீவன்
மாலால னித்தன் றக்கி வந்துவந் திறப்ப னண்ணற்
பாலான கருணை யாலே பவித்திர னவா னென்னும்
சாலோக காமி யானேன் சாற்றிய சாட்சி சொல்வாம்.

கோர்ட்டார் சாலோக காமியென்னுஞ் சாட்சியை யழைத்துப் பிரமாணஞ் செய்வித்துத் தாஙகளே பிரசனை செய்கின்றார்.

பி. உமது மதத்தில் முக்கியாம்சங்க ளெத்தனை விதமாம்?

உ. ஜக ஜீவ பரங்களென மூன்றுவிதமாம்; அவைநித்தியமாம்.

பி. அவற்றுள் பரம் யாது?

உ. நித்திய ஈசுவரன்.

பி. அவனெங் குளன்?

உ. அவர் சூரியப்பிரகாசம்போ லெங்கு நிறைந்திருக்கின்றார். மேலும், கைலாசாதி லோகங்களிலும், பக்தஜனங்களுக்காகப் பூமியிலுள்ள தேவாலயங்களிலுஞ் சமானராகிதராய் வீற்றிருக்கின்றார்.

பி. உம்முடைய சொரூபம் அநித்தியமா? நித்தியமா?

உ. நித்தியமே

பி. ஈசுவரனுக்கும் உமக்குமுள்ள பேதம் யாது?

உ. அவர் சாவஞ்ஞன், நான் கிஞ்சிஞ்ஞனென்பதாம்.

பி. ஆத்ம சொரூபம் சுபாவமாய்ச் சுகியா? துக்கியா?

உ. நானோ சதா துக்கசொரூபியாகத்தா னிருக்கிறேன்.

பி. நீரேதனால் சுபாவதுக்கியா யிருக்கின்றீர்?

உ. நான்பாசபத்தனாயிருப்பதினால்சதா துக்கியாயிருக்கிறேன்.

பி. அந்தப் பாசபந்தம் கற்பனையா? சத்தியமா?

உ. பாசபந்தம் சத்தியமே, கற்பனையன்று.

பி. சத்தியமாயின், பாசபந்தம் நிவிர்த்தியாகுமா?

உ. ஈசுவரன் கிருபையால் நிவிர்த்தியாம்.

பி. ஈசுவரனுடைய கிருபை எவ்வாறு சித்திக்கும்?

உ. திரிகரணசுத்தியாய்ச் சதா அவரைத் தியானிப்பதால் சித்திக்கும்.

பி. பாசபந்தம் நெருப்புக்கு உஷ்ணம்போலச் சுபாவமாயின், அவை நீங்குவதெப்படி? நீங்குமாயின், உம்முடைய சொரூபமே நாசமாய்ப் போமன்றோ? கரியை யெத்தனை நாள் தேய்த்தாலும் கருமை நீங்குமா? வெள்ளையாகுமா? யோசித்துப் பாரும்.

உ. கரியை எத்தனைநாள் தேய்த்தாலும்வெள்ளையாகாதென்பது மெய்யே; அதற்குச் சந்தேகமில்லை பாசபந்தம் அங்ஙனமானதன்று. ஜீவனுக்கது சுபாவமாயிருந்தாலும் ஈசுவரனது கிருபையால் நொடிப்போதில் நிவிர்த்தியாம்; சாஸ்திரங்களுமிவ்வாறே சொல்லுகின்றன.

பி. சுழுத்தியவத்தையில் ஜகஜீவபரங்க ளெனுந்திரிபதார்த்தங்கள் உண்டா? இல்லையா? சுழுத்தியிற் சுகசொரூபியாயிருக்கின்றீரா? துக்கரூபியா யிருக்கின்றீரா? ஆண்டுத் துக்கா நுபவமில்லை; பேதப்பிரதீதியில்லை யெனின், திரிபதார்த்தங்கள் சத்தியமென்றும், நான் சதா துக்கியாயிருக்கின்றேனென்றுங் கூறியது மித்தையாம்.

உ. நான் கூறுவது சாஸ்திரா நுபவமே யன்றிச் சுவா நுபவமன்று.

பி. சாஸ்திரங்களைப் படித்தே னென்றும் சாஸ்திரா நுபவத்தால் சொன்னேனென்றும நீர் கூறுவது யுத்தியில்லாததாம்.

தேஜோபிந்தோப நிஷத்.

† "சசச்ருங்கேண நாகேந்த்ரோ மருதச்சேத் ஜகதஸ்திதத்,
ம்ருகத்ருஷ்ணு ஜலம் பீத்வா த்ருப்தச்சேத் அஸ்த்விதம் ஜகத்"
"மாயாகாரியாதிகம் நாஸ்தி மாயா நாஸ்தி பயம் நஹி,
இதம் ப்ரபஞ்சம் நாஸ்த்யேவ நொத்பந்நம் நோஸ்திதம் க்வசித்"

(இ-ள்). முயல் கொம்பால் மதயானை யிறக்குமாயின், உலகு சத்தியமாம; எவனுகிலும கானல்நீரைப பானஞ்செய்து திருப்தியடைவானுயின், சகத்து ஸததியமாம; மாயையும் மாயா காரியங்களாகிய இப்பிரபஞ்சாதிகளும் மித்தையாம்.

ரிபுகீதை.

நிகழுமறி வானபரப் பிரம மல்லால் நீயுமிலை நானுமிலை யாருமில்லை, நிகழுமறி வானபரப் பிரம மல்லால் ஏகமுதற் றிருசியமாந் திரமே யில்லை, சகலவறி வானபரப் பிரம மல்லாற் சத்துமிலை யசத்துமிலை சதசத் தில்லை, பகருமறி வானபரப் பிரம மல்லாற் பரஜீவ சகங்களெனும் பகுப்பே யில்லை.

வள்ளலார் சாஸ்திரம்.

கையிலுறு புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமோ
மெய்யுணர்வி லுண்டோ விபரீத—மையறிவு

† "ஶஶஶ்ருங்கேண நாகேந்த்ரோ ம்ருதஶ்சேஜ் ஜகதஸ்ததா
ம்ருகத்ருஷ்ணாஜலம் பீத்வா த்ருப்தஶ்சேத் அஸ்த்விதம் ஜகத்"
மாயா கார்யாதிகம் நாஸ்தி மாயா நாஸ்தி பயம் நஹி
இதம் ப்ரபஞ்சம் நாஸ்த்யேவ நோத்பந்நம் நோஸ்திதம் க்வசித்

மோரறிவாய்ப் போனவிடத் தேகோகோ மும்முதலுஞ்
சோராம னிற்குமோ சொல்.

## தசகம்.

† நஸாங்கியம் நசைவம் நதத்பாஞ்ச ராத்ரம்
நஜைநம்ந மீமாம்ஸ காதேர்ம தம்வா
விசிஷ்டா நு பூத்யாளி சுத்தாத்ம கத்வாத்
ததேகோ வசிஷ்டச் சிவகேவ லோஹம்.

## ஷை தமிழ்ச் செய்யுள்.

பன்னு ஸாங்கிய சைவமுமில்லை பாஞ்சராத் திரமுமில்லை
யுன்னு ஜைனமீமாம்சை யுமில்லை யுலகுண் மற்றமதமில்லை
துன்னு ஞானிக ளநுபவப்பிர சித்ததாய சொரூபமாய்ப்
பின்ன மேயற நின்ற பூரண பிரமமென்ற சிவோகமே.

## நிராலம்பாதி வாக்கியங்கள்.

‡ ‘சைதந்யம் விநாகிஞ்சிந் நாஸ்தீதி’ ‘நதுத்விதீய மஸ்தி’
‘நாஸ்தித்வைதம் குதோ விதிதே வேத்தியம் நாஸ்தி’
‘ஏகமேவ ஸங்நேஹநா நாஸ்தி கிஞ்சன’
‘ஏகதைவாநு த்ருஷ்டவ்யம்.

(இ-ள்) சைதன்னியத்தைவிடச் சிறிதேனுமில்லை. ஆத்மாவுக் கிரண்டாவதில்லை. துவிதமில்லை; பிரமசொரூபம் காணப்பட்டிருக்க, எதிலிருந்து தெரிந்து கொள்வதில்லை. இரண்டாவதற்ற வஸ்துவொன்றேயிருப்பது. கொஞ்சமேனும் அநேகமென்பதில்லை. ஒருவிதமாகவே பார்க்கப்படுவதாம்.

---

† 𑌨𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌨𑌶𑍈𑌵𑌂 𑌨 𑌤𑌤𑍍𑌪𑌾𑌞𑍍𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑌂
𑌨𑌜𑍈𑌨𑌂 𑌨𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌕𑌾𑌦𑍇𑌰𑍍𑌮𑌤𑌂 𑌵𑌾
𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍
𑌤𑌦𑍇𑌕𑍋 𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑍋𑌽𑌹𑌂

‡ 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌕𑌿𑌂𑌚𑌿𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑌿’ ‘𑌨 𑌤𑍁 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑌸𑍍𑌤𑌿
𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌕𑍁𑌤𑍋 𑌵𑌿𑌦𑌿𑌤𑍇 𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿
𑌏𑌕𑌮𑍇𑌵 𑌸𑌨𑍍𑌨𑍇𑌹𑌨𑌾 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌨
𑌏𑌕𑌤𑍈𑌵𑌾𑌨𑍁𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂

கேநோப நிஷத்.

* யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸ:
அவிக்ஞாதம் விஜாநதாம் விக்ஞாத மவிஜாநதாம்'
யன்மநஸா நமநுதேயேநாஹுர் மநோமதம்
ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதித முபாஸதே'

(இ-ள்) பிரஹ்மம் தன்னால் அறியப்படாதென்கிற எண்ண முடையவனால் பிரஹ்மம் அறியப்பட்டதாகும்; எவன் பிரஹ்மம் அறியப்படுமென்கிற எண்ண முடையவனோ அவன் அறியாதவனுவன். அறிவேனென்கிற எண்ண முடையவனால் அறியப்படாதாயும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களினால் அறியப்படாதென்னும் எண்ண முடையவனால் அறியப்பட்டதாயும், எது மனதினாலறியப்படாததோ எதனால் மனம் அறியப்படுகின்றதோ, அதனையே பிரஹ்மமென்றறிவாய், எது இதுவென்றுபாசிக்கப் படுகின்றதோ அதனைப்பிரஹ்மமென்று அறியலாகாது.

மேலும், 'குறியாக் குறியினிற் கூடாத கூட்டத், தறியா வறிவிலவிழ்ந்தேன்" என்று திருமந்திரமும், "அளவிலாப் பாவகத்தாலமுக்குண்டிங் கறிவின்றி, விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு" என்று திருவாசகமும், 'பாவிக்கும் பாவகத் தப்புறத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே-'என்று திருப்பல்லாண்டும், "யாவையு மெவையுந் தானு யவரவர் சமயந் தோறுந்,தோய்விலன் புலனைந்திற்குஞ் சொலப்படா னுணர்வின் மூர்த்தி" என்று திருவாய் மொழியும், இவைபோல்வன பலவு மிருத்தலை நீவிர் சிறிது மறியீர் போலும். ஆத்மாநுபவமின்றிக் கர்மகாண்டத்தை யநுசரித்துக் கூறுவனவெல்லாம் நீரின்மீது மலைகள் மிதக்கின்றன வென்பதுபோன்று உடமையாக மில்லாதனவாம்.

பிரபுலிங்கலீலை.

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
யறிந்த ஞானி யகமுறக் காண்பனு

---

* யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்"
யந்மநஸா ந மநுதே யேநாஹுர்மநோ மதம் ।
ததேவ ப்ரஹ்மத்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே"

லெறும்பி காணூறி னின்கரும் பேகொளுஞ்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே.

அதிரகசியம்.

பூசை யென்பது பூவொடு பாணியோ
வாசை கோபமகந்தை யகற்றியே
நீச வைம்பொறி நெஞ்சு ணிறுத்தியே
யீசனைத் தம்மிதயத் தாட் காண்டலே.

என்பவை போன்று சுவாநுபவ மில்லாது கர்மசாஸ்திரங்கள் கூறும் காமியங்களினால் சாதிக்க விசசிக்கும் பலன்களெல்லாம் ஜலத்திற்கீறிய ரேகைகள் போன்றும், சுவரிலெழுதிய சித்திரம் போன்றும், சிவக்கக்காய்ச்சிய இரும்பின் மீது விட்ட தண்ணீர் போன்றும், கரிய முகத்தில் அரிதளம் பூசியது போன்றும், நாடகத்தில் விசுவாமித்திரவேஷம் பூண்டவன் போன்றும், ஒழியுந் தன்மையனவாம்.

$ க்ஷீணே புண்ணியே மர்த்தியலோகம் விசந்தி'

என்றபடி மனிதர்கள் புண்ணிய கர்மங்களின் பயனான சுவர்க்காதி பதவிகளை நீங்கியவராய் அதோகதி யடைகின்றார்களென்பது திண்ணமாம். மேற்கூறிய கருமபக்தி பாராயணர்கள், தத்துவசோதனை செய்யுஞ் சாமாத்திய மில்லாத மந்தாதிகாரருக்கு தேவதாந்தரங்களும், மதாந்தரங்களும், லோகாந்தரங்களும் கற்பிக்கப்பட்டனவென் றுணராது போனார்கள். அவை தத்துவ சோதனைகாலத்தி லொழிந்துவிடும். அஃதெங்ஙனமெனின், நித்தியமென்பது விலக்கணம் அழிவுபாட் டபாவத்திற்கு எதிர்மறை யாகாமை அழிவுபாட் டபாவம் கடத்தின் பின்னின்மை; அப்பின்னின்மைக் கெதிர்மறை யாகாமை அக்கடமாகாமை. அக்கடமாகாமை எனவே அழிவை யடையுந் தன்மையில்லாதது நித்தியப்பொருளென்றாயிற்று. சகமென்பது உற்பத்தி நாசமுடையதாயிருத்தலால் அநித்தியமாம்; அழிவு பாட்டபாவத்திற்கு எதிர்மறையாவது அநித்தியமென்பது நியமமாயிருத்தலினென்க. ஜீவன் அநாதியாயிருப்பினும், மோட்சகாலத்தில் தனக்கென வடிவமென்ப தொன்றின்றிப் பரம்பொருளாக விளங்குதலின், அவனும் சேதனத்தை விட்டு நித்தியப் பொருளன்றாம்.

$ க்ஷீணெவாஸனெஜ்ஞதெத்ரைலொகஂவிலஸதி

பரம் அல்லது பதி எக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாமல் விளங்குதலின், அதுவே நித்தியமாம். நித்தியமான வப்பரம்பொருள் பூரணமாக விருத்தலால், கயிறுள்ள விடத்துக் கையிருத்தற்கியையா வாறு போன்று அதன் கண் பிறிதொருபொருள் யதார்த்தமாயிருத்தற் கிடனின்றாம். ஆகவே, பரம்பொருளுக்கு வேறாகப் பிறபொருள்கள் நித்தியமாக விருக்கின்றன வென்னும் வாதம் பொருந்துமா (யுக்தி) றுடன் பொருந்துவதன்றாம். பின்னை, கயிற்றின் கண் அரவு கற்பனையாயிருத்தல் போன்று உலகமும் ஜீவனும் பரம்பொருளின் கண் கற்பனையாம். அதிஷ்டானமாயுள்ள கயிற்றைப் பார்க்கினும் அதன் கண் ஆரோபமாயுள்ள பாம்பு வேறாகாதிருத்தல் போன்று பரம்பொருளினுமுலகமும் உயிரும் வேறுபட்டன வன்றாம். அன்றாகவே, கயிறு பாம்பாக விளங்குதல் போன்று பரம்பொருளே உலகமாக விளங்குகின்றதென்பது திண்ணமாயிற்று. இவ்வாறு விசாரித்தறிந்த வாற்றால் பரம்பொருளே நித்தியப் பொருளென்பது பெறப்பட்டது. இஃதறியாதார் பதிபசுபாசம் அல்லது ஈஸ்வரஜீவஜகமென்பன அநாதி நித்தியப்பொருள்களென்று கூறி வீண் வழக்கிடுகின்றார். அநாதியென்பதன் பொருள் உற்பத்தியில்லாததாம். நித்தியமென்பதன் பொருள் உற்பத்தியும் நாசமும் இல்லாததாம். நித்தியமென்றபோதே அநாதியென்பது கூறாமலே பெறப்படுமாதலின், மிகைப்படக் கூறலாக (தருக்க உணர்வின்றி) அநாதி நித்தியமென்று கூறுவது அசங்கத்திலும் அசங்கதமாம். பரம்பொருளுக்கு வேறாக உலகுயிர் இருக்குமாயின், பரம் பொருளில்லா விடத்தில் அவை யிருத்தல்வேண்டும். பரம்பொருளில்லாவிடம் யாண்டுமின்மையின், அவை வேறாக விருக்குமென்பது கூடாது. ஆகாயத்தில் பிருதிவி முதலிய நான்கு பூதங்களுமிருத்தல் போன்று பரம் பொருளில் உலகுயிரிருக்கின்றன வென்னின், விசாரிப்புழி மண்ணைத்தவிரக் கடமில்லாமை போன்று ஆகாயத்தைத் தவிர அந்நான்கு பூதங்களுமில்லாவொழிதலால், ஆகாயத்தினும் அப்பூதங்கள் வேறுபட்டனவன்றாம். ஆதலால், திரிமூர்த்திகளும் இந்திராதி தேவதைகளும், அவர்களுடைய உலகவைபவங்களும், மற்றுமுள்ளனவும், திருசியங்களேயாம். ¶ 'யத்திருஷ்டம் தந்நஷ்டம்'

¶ யத்த்ருஷ்டம் தந்நஷ்டம்

என்றவாறு நாமரூபங்களனைத்தும நஸ்வரம (நிலை பெறாதவை) என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். மேலும் "‡ வாசாரம்பணம் விகாரோநாமதேயம்' என்றும் * "யதோவாசாநி வர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ' என்றும இன்னுமிவ்வாறுள்ள சுருதி வாக்கியங்களையும் நீர் அறிந்திலீர்போலும். $"ஏகம்ரூபம் பகுதாயக்கரோதி' †"அஜாயமாநோ பகுதா விஜாயதே' என்றுள்ள சுருதிவாக்கியங்களால் இருபபது ஒன்றே, பல பதார்த்தங்களில்லை யென்பது பெறப்படுவதால், தத் வியதிரிக்த (அதற்கெதிர்மறை) யாகக் கூறுகின்றஹரிஹர பிரஹ்மாதிகள், சசசிருங்கம், ககநாரவிந்தம், வந்தியாபுத்திரன், இப்பியில் வெள்ளி, கட்டையிற் கள்வன் முதலியன போன்று மித்தியா பதார்த்தங்களாம். அவை பாரமார்த்திக சத்தியப்பொருளாமெனின், அகண்ட பரிபூரணப் பிரஹ்மம் தேச கால வஸ்து பரிச்சின்னரகிதமாயிருத்தலின், அந்தத்திரி மூர்த்தியாதிகளும் அவரவர்களுடைய லோகங்களும், அந்த லோகங்களின் வைபவங்களும எப்படி பாரமார்த்திக சத்தியப்பொருளாக விருக்கமுடியும்? இருக்குமெனின், அவை சுருதி யுக்தி யநுபவங்களுக்குப்பொருந்தா. அன்றியும் காரியகாரண வாதவாயிலாக நோக்குமிடத்து, அவற்றிற்கு அநவஸ்தாதோஷம் சம்பிராப்தமாம். இப்படிமூர்த்தித்திரயங்களுக்கே உண்மையில்இருபபேற்படாமையின், அவர்கள் தம் பக்தர்க்குத்தரும் சாலோக, சாமீப, சாயுஜ்ய பதவிகள் சத்ரூபமாகப பொருந்துவதெங்ஙனமாம்? இஃது அடியென்பதற்கு அகமுடையானில்லை, பிள்ளையெத்தனை யென்றதுபோலாம்; ஆசாமியில்லாவிடத்தில கைதட்டி அழைப்பது போலுமாம். உண்மையில் பிரபஞ்சம் பிரஹ்மசொரூபமாயிருத்தலை யறியாது அதற்கன்னியமாய் பிரபஞ்ச மிருக்கின்றதென்றுகருதுவதுபிராந்தியேயாம். () ப்ரமமூலமிதம் ஜகத' என்று சாஸ்திரங்கள் கூறுவதை நீர் அறியாதுபோனீர். இருபபது பிரஹ்மமேயன்றிப்பிரபஞ்சமென்பதில்லை என்பது பெரியாரநுபவமாம என்று பலவாறாக

‡ வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்

* யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ

$ ஏகம் ரூபம் பஹுதா ய: கரோதி

† அஜாயமாநோ பஹுதா விஜாயதே

() ப்ரஹ்மமூலமிதம் ஜகத்

விரித்துக்கூறியபோது சாலோககாமிமருள மருளவிழித்துக்கீழும் மேலும் பார்த்து வாளா விருந்தான். அதுகண்டு கோர்ட்டார் இந்தச் சாட்சி இதுவரையில் வந்தவரில் மிகத்தப்பு சாக்ஷியா யிருக்கிறுனென்று அவனுடைய சாக்ஷியத்தைத் தள்ளிவிட்டு, சாமீப்யகாமி, சாரூபயகாமி, சாயுஜ்யகாமி வரையில் அழைப் பித்து விசாரித்தபோது அவர்களும், கர்மங்களால் ஐக்கியமுத் திகிடைக்கு மென்று கூறினார்கள். அவர்களுடைய வாதங்களி யாவும் பயனற்றன வென்று கோர்ட்டாரவர்கள் தீர்மானித்துத் சிலருககுத் தண்டனைகளை விதித்து மற்றச் சாக்ஷிகளைத் தப்புச சாக்ஷிகளென நிவிர்த்திசெய்து வாதிதரப்பு சாக்ஷிகளை விசாரிக்க வாரம்பித்து, அவர்களுள் முதன்மையான விவேக னென்பவனை அழைக்கும்படி ஆஞ்யாபிததனர்,



வாதி தரப்பு

## 1—வது—சாட்சி விவேகன் விசாரணை.



அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதிக்கிய மாகி யொன்று யகண்டபே ரொளியா யென்றும்
பாதிக்கா திலகு மோனப் பரம்பொரு ளெவரும் போற்று
நீதிக்கா நியாயத் தான நெருங்கியே வழக்குச் செய்யும்
வாதிக்காய் விவேகன் வந்து வழுத்திய சாட்சி சொல்வாம்.

அதிசூட்சும கிராக்ய சாத்விகாம்சபுத்தி யென்னும்வாதி வகீலெழுந்து நின்று வாதிதரப்புச் சாக்ஷிகளில் முதன்மையா யுள்ள விவேகனைக் கோர்ட்டார் முன்வரவழைத்துப் பிரமாணஞ் செய்வித்து, கோர்ட்டார் சமுகத்தில் என்தரபபு சாட்சிகளை யான்கேட்க வேண்டியன வொன்று மில்லாமையால், எதிரி வகீலவர்கள் வேண்டியவரையில் கேட்கலாமென்று மறுவுசெய் து கொண்டார். கோர்ட்டார் உத்திரவு செய்வதற்கு முன்ன ரே கோர்ட்டாருடைய அநுமதியின்றி மிக அவசரத்தோடு தான் பிடித்ததைச் சாதிக்க வெண்ணுகின்ற கோரமூடபுத்தி யென்னும் பிரதிவாதிவகீல் எழுந்து நின்று விசாரிப்பானுனன்.

பி - உம்முடைய பெயரென்னை? நிசமாகச் சொல்லுக?

உ - என்னுடைய பெயர் விவேகன்,

பி - நீ எவரது குமாரர்?

உ - தத்துவ பரிசீலனுடைய குமாரன்.

பி - நீர் நானென்னும் ஆத்மாவை யறிவீரா?

உ - பாகத்தியாக லக்ஷணையினு லறிந்திருக்கின்றேன்.

பி - ஆத்மாவை யறிவதற்குப் பாகத்தியாக லக்ஷணையெற்றிற்கு?

உ - ஸோயம் (அந்தஇந்த) தேவதத்த னென்னும் வாக்கியத்தின்' வாச்சியார்த்தத்துள், ஒரு பகுதியாய அந்த இந்தவென்னும் காலதேசங்களைவிட்டு, மற்றொருபகுதியாய தேவதத்த பிண்டத்தை விடாதுகொள்வது பாகத்தியாக லக்ஷணையினுலாம். அங்ஙனமே இது வல்ல இதுவல்ல என்னும் நேதிநேதி வாக்கியத்தால் தேகவிசிஷ்ட ஆத்மாவில் தேகத்தைவிட்டு, ஆத்மாவை விடாது கொள்ளவேண்டி யிருத்தலின், ஆத்மாவை யறிவதற்குப் பாகத்தியாக லட்சணை அத்தியாவசியகமாம்.

பி - அதற்கு யுத்தியாது?

உ - சப்தாதி விடயபஞ்சகத்தைப் போன்று சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் ஜடமாம். அவை அந்தக்கரண சம்பந்தத்தால், சித்துப்போல விளங்குகின்றன. அவை அந்தக் கரணத்தை நோக்கு மிடத்து ஜடமாக விளங்குதல் மாறாத அநுபவமாம்: அவ்வந்தக கரணமு சுழுத்தியில் லயமாய்ப் போகின்றமையின் அவையும் ஜடமா மென்பது பிறழாத வநுபவமாம். சுபாவமாகப் பிராணன் ஜடமாகவிருத்தலின் அஃதான்மா வென்பது பற்றிக் கூறல் பெருமயிழையாம். அக்கினியின் சம்பந்தத்தால் திரண காஷ்டாதிகள் அக்கினி சொரூபமாக விளங்குதல் போல நானென்னும் ஆத்மாவின் கற்பித சம்பந்தத்தால் பஞ்சகோசங்கள் ஒவ்வொருசமயத்தில் ஆத்மா போன்று விளங்குகின்றன. பஞ்சகோசங்கள் எனதெனதென வறியப்படுகின் றமையால் அவை யொருபோதும ஆன்மாவாகா.

பி-ஆத்துமாவிற்குக் காதநிருத்வாதி தாயங்களுண்டா? இல்லையா?

உ - உண்மையாக வில்லை.

பி-கர்த்திருத்துவாதி தர்மங்க ளுண்மையாகவில்லை யென்ப தெப்படி?

உ-ஆத்மாவிற்கும் அந்தக்கரணத்திற்கு முள்ள இதரேதராத் தியாசத்தினால் ஆத்மாவின் தர்மம் அந்தக்கரணத்திலும், அந்தக் கரணத்தின் தருமம் ஆத்மாவிலும் பிரதீதியாகின்றன. அந்தக்கர ணத்தின்தருமமான கர்த்திருத்வாதிகள் ஆத்மாவின்கண் பிரதீதி யாதலும்' ஆத்மாவின் தருமமான சத்துமுதலியன அந்தக்கரணத் தில் பிரதீதியாதலும் இதரத்தியாசமாம். இவ்வத்தியாசத்தினால் அந்தக்கரண தருமமான கர்த்திருத்வாதிகள் ஆத்மாவில் பிரதீதி யாதலின் நான்செய்தேன்' நானனுபவிக்கின்றேன், என்னும் வியவகாரங்கள் உண்டாகின்றன. சுழுத்தியில் ஆத்மாபோதாந்த மாகவிளங்குதலால், அது கர்த்திருத்துத்வாதி தருமங்களில்லாத தென்பது நன்குவிளங்கும். மேலும்,அவஸ்தாத்திரயங்கள் தோன் றிதோன்றி நசிப்பன போன்று ஒன்றன்பின் னொன்றாகக் கர்த்தி ருதுத்வாதி தருமங்கள் நசிப்பதினாலும் ஆத்மா அஞ்ஞானவிஷய ங்களிற்கலவாது அசங்கமாய்'விபுவாய், சர்வாதிஷ்டானமாய்ச் சிதா நந்தவடிவமாய், சாட்சியா யிருப்பதினாலும் ஆத்மாவிற்குக் கர்த் திருத்வாதி தருமங்களில்லையென்பது நன்குவிளங்கும். இதனால் ஆத்மா அகர்த்தா, அபோக்தா. அசங்கமென்பது செவ்விதிற் புல னாம்.

பி-அங்ஙனமாயின், ஆத்மா கர்த்தா வென்றும், போக்தா வென்றும், புண்ணியபாப கருமங்களதற குண்டென்றும், அத னால் ஜனனமரண சம்சார துக்கங்க ளுண்டென்றும், சுருதி ஸ்மிருதிகள் கூறுதல் பொய்யா?

உ - ஆத்மாவிற்குக் கர்த்திருத்வாதி தருமங்க ளுண்டென்று சுருதிஸ்மிருதிகள் கூறுவதன்கருத் தத்துவவித்துக்களுக்கு விளங்குமன்றி மற்றவர்கட்கு விளங்காது. அந்தக்கரண விசிஷ்ட ஆத்மாவிற்குச் சுருதிஸ்மிருதி முதலியன கர்த்திருத்வாதி தருமங்கள் கூறுகின்றனவன்றி, அந்தக்கரண வுபகித ஆத்மா விற்குக கூறவில்லை. அந்தக்கரண விசிட்ட ஆத்மாஜீவனும், அந்தக்கரணவுபகித ஆத்மாசாட்சி அல்லதுசிவமாம். அந்தக்க ரண விசிட்ட ஆத்மாவிற்குக் கர்த்திருத்வாதிக ளுண்டென்று கூறுவதையும் நன்குபரிசோதித்துப் பார்த்தல் வேண்டும்.

சேதனபாகம் யாண்டும் அசங்கமாயிருத்தலால், அந்தக்கரண விசிட்ட ஆத்மாவி னிடத்தும் கர்த்திருத்வாதி தருமங்கள் உண்மையாகவில்லை. விசேஷத்தின் தருமம் விசிட்டத்தில் பிர தீதியாதல் கூடும் என்னும் நியாயத்தினால் அந்தக்கரண கரு மமான கர்த்திருத்வாதிகள் விசிஷ்டத்தில் (அந்தக்கரண விசிட்ட வாத்துமாவில்) பிரதீதியாகின்றது, உண்மையில் ஒரு தருமமும் ஆத்மாவிற்கில்லை. அது நிர்தர்மமாம்; நிர்க்குணமாம். என்பதற்குச் சுருதிப் பிரமாணங்கள் வருமாறு.

சர்வசாரோப நிஷத்.

† - நாஹங்கர்த்தா நைவபோக்த்தா ப்ரக்ருதேஸ் ஸாக்ஷிரூபகஃ
மத்ஸாந்நித்யாத ப்ரவர்தந்தே தேஹாத்யா அஜடா இவ
ஸ்தாணுர் நித்யஸ் ஸதாநந்தச சுத்தோக்ஞான மயோமலஃ
ஆத்மாஹம் சர்வபூதாநாம் விபுஸ் ஸாக்ஷி நசம்சயஃ,
ப்ரஹ்மை வாஹம் ஸர்வவேதாந்த வேத்யம்
நாஹம்வேத்யம் வ்யோமவாதாதி ரூபம்,
ரூபம்நாஹம் நாமநாஹம் நகர்ம
ப்ரஹ்மை வாஹம்ஸச்சிதா நந்தரூபம்,,
நாஹந்தேஹோ ஜந்மம்ருத்யூ குதோமே
நாஹங்காரஃ ஸுப்திபாசே குதோமே,
நாஹம்சேதச் சோஹ மோஹௌ குதோமே,
நாஹங்கர்த்தா பந்தமோக்ஷௌ குதோமே,

---

† 𑌨𑌾𑌹𑌂𑌕𑌰𑍍𑌤𑌾 𑌨𑍈𑌵 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌰𑍂𑌪𑌕𑌃।
𑌮𑌤𑍍𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌦𑍇𑌹𑌾𑌦𑍍𑌯𑌾 𑌅𑌜𑌡𑌾 𑌇𑌵 ॥
𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑍋 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑍋𑌽𑌮𑌲𑌃 ।
𑌆𑌤𑍍𑌮𑌾𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌨𑌸𑌂𑌶𑌯𑌃 ॥
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 ।
𑌨𑌾𑌹𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌾𑌤𑌾𑌦𑌿𑌰𑍂𑌪𑌂।
𑌰𑍂𑌪𑌂𑌨𑌾𑌹𑌂𑌨𑌾𑌮𑌨𑌾𑌹𑌂𑌨𑌕𑌰𑍍𑌮 ।
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌹𑌂 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌂 ॥
𑌨𑌾𑌹𑌂𑌦𑍇𑌹𑍋𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍂 𑌕𑍁𑌤𑍋𑌮𑍇।
𑌨𑌾𑌹𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑍇 𑌕𑍁𑌤𑍋𑌮𑍇
𑌨𑌾𑌹𑌂 𑌚𑍇𑌤𑌃𑌶𑍋𑌕𑌮𑍋𑌹𑍌 𑌕𑍁𑌤𑍋𑌮𑍇 ।
𑌨𑌾𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌾𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑍌 𑌕𑍁𑌤𑍋𑌮𑍇 ॥

(இ-ள்). நான்கர்த்தா வன்று; போக்தாவன்று, பிரகிருதிக்குச் சாக்ஷி சொரூபனாயிருப்பன்; என் சன்னிதானத்திலே தேகாதிகள் சேதனம் போலக் கருமங்களைச் செய்கின்றன. நான் ஸ்திரமாகியும், நித்தியமாகியும், எஞ்ஞான்றும் ஆநந்தமாயும், சுத்தமாயும், ஞானசொரூபமாயும், மலரகிதமாயுமிருப்பவன். நான் சகலபூதங்களுக்கு மாத்மா; எங்கும் வியாபித்திருப்பவன்; சகலசாக்ஷியாயிருப்பவன். இதிற் சம்சயமில்லை. சகலவேதாந்தங்களாலும் அறியப்படுகிறவனும் நானே, அறியப்படுகிற ஆகாசம் வாயு முதலிய பூதங்கள் யானன்று; நான் ரூபங்களன்று நாமங்களன்று, கருமாதிகளன்று; சச்சிதாநந்த சொரூபமான பிரமம் நானே, நான் தேகமன்று, எனக்கு ஜநந மரணாதிகளுள் யாதுமின்று; நான் மனமன்று; எனக்குச் சோக மோகங்களில்லை; நான் கர்த்தனன்று; எனக்குப் பந்தமோக்ஷங்களில்லை.

கைவல்லிய நவநீதம்.

"நித்தியம்பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரமமானந்தம் சாந்தம், சத்தியங்கேவலந்துரியஞ் சமஞ்சிந்துங் கூடத்தன் சாட்சி போதம், சுத்தமிலக்கியஞ்சகா தங்களெல்லாந் தருவர்க்கின் சோதியான்மா, முத்தம்விபு அந்தரமென் றிவ்வண்ணம் விருத்தணங்கண் மொழியும் வேதம்" "அசலநிரஞ்சனமபின்னமத்துவிதம் பரம்விமலம் வாசனாதீதம், அசடமநாமய சங்க மற்றலேபந் தரமே கோசரமகண்டம், அசமநந்த மவிகாரி நிக்குணநிட்கள நிரவயமநாதி, அசரீர மவிகார மத்துவித மெனவிலக்கண மேதக முன்னே" என்று கூறுவதும் அறிதற்பாற்று. மேற்கூறிய யுக்தியைக்கையில் ஆத்மா மனமில்லாமையால் கர்த்திருத்வாதி சம்சாரமறுஞ் சாட்சிமாத்திரமாயிருப்பதனால், அதற்குக் கிருத்வாதி தருமமுடைய தென்பது மனப்பிராந்தியேயாம். இன்னமொரு ரகசியமிருக்கின்றது. அஃதியாதெனின், இந்த ஆத்மா அஞ்ஞானமென்னும் முதலெதிரி மறைக்க ஆவரணமென்னும் லாகிரி சிறுமியால் பைத்தியம் பிடித்து, விட்சேபமென்னுங் குலடாஸ்திரீயைக் கூடிக் கர்த்திருத்வாதி தருமங்களென்னும் ரோகங்களை யடைந்து, பாமரன், பாபி, மூடபக்தனென்னும் புத்திரர்களைப் பெற்று, சதா தாபத்திரய துக்கங்களை அநுபவிப்பதுபோற் றோன்றுகின்றது. வாஸ்தவத்தில் ஆத்மா நிர்விசேஷ சின்மாத்திர வஸ்துவமாம் என்று கூறினோம். இவற்றைக் கேட்டப் பிரதிவாதிவர்க்

மிகக் கோபாவேசமாய்க் கண்கள் சிவக்க, காதுகளிற் றீப்பறக்க, திக்கரித்துப்பார்த்தாச் சாக்ஷியாய்வந்த நீர் சட்டப்பிரகாரம் கேட்ட வரைக்கும் விடைசொல்ல வேண்டியிருக்க, வரம்பு கடந்து பேச வதனாலே நீர் மிகவும் அதிகப் பிரசங்கியாக விருக்கின்றீர். இனி யொரு காலப்படி சொல்லுவீராயின், கோர்ட்டாரால் தண்டனை யடைவீர், சாக்கிரதையாக வசனியுமொன்று பயப்படுத்திப் பிறகு,

பி - ஆத்மா வென்னுஞ் சொத்து, சத்தா? அசத்தா?

உ - முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாத (பார மார்த்திக) சத்தே.

பி - ஆத்மா எப்போதுஞ் சத்தென்பதற்குச் சுருதியாது?

சாந்தோக்கிய வுபநிஷத்.

உ - † ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்"

(இ - ள்). சிருஷ்டிக்குமுன் இத்திருசிய அசத் ரூபப் பிரபஞ்சம், நாம ரூபங்களற்றுக் கேவல நிர்விசேஷ சின்மாத்திர பரப்பிரஹ்மமா யிருந்தது.

கடோபநிஷத்.

‡ - ஸ்வப்நாந்தம் ஜாகரிதாந்தஞ் சோபௌயே நாநுபச்யதி.
மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வாதீரோ நசோசதி"

(இ - ள்). சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரயத்திலும், ஞான சொரூபனான ஆத்மா சத்தியமாய் நாசரகிதமாய்ச் சர்வசாக்ஷியாய்ச் சாவத்திரயத்திலும் இருப்பதனாலே சத்து.

இலக்ஷண விருத்தி.

நானென்னுமுன் னவத்தைதனி னுண்ணோக்காய்த் தோன்று நாலேழுத் துவங்கள்வெளி நோக்காயிதென, நீனுமுடன் றேற் றுமே தத்துவங்களிருவகைய னைமேயூழ் திணங்க வோடா, மூன்று திரி விதவவத்தை களினுந் தோன்றி யொழிகையினுங் கூடவொ

---

† 'ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்'

‡ ஸ்வப்நாந்தம் ஜாகரிதாந்தம் சோபௌ யேநாநுபஶ்யதி ।
மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந ஶோசதி ॥

ழி யாமற்றுனே, யினையிலா நித்தியமாய் நிலைமையுற்றேயிருக்கின்றதாமேசத் தென்ன வோர்வாய்.

## கைவல்லிய நவநீதம்.

சென்மாந்தரஞ்செய்த வினைகளு — முறுமெனிற செல்கால மிவனுண்டேல், கன்மாநுபவகத சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்டேல்' என்பதா லுமுடல்கடவு ளுடன் மனுட வுடன்மாறி மாறி யழியும், தன்மைய வுடல்கெடினு மிவ னிருப்பதுகொண்டு சத்தென்ப தொக்கு மகனே.

என்பனவும் பிறவும் சப்தப் பிரமாணங்களாம்

பி - ஆத்மா சத்தென்பதற்கு யுக்தியாது?

உ-கடம் கேடயம் கங்கணை முதலிய காரியங்களுக்குக் காரணமான மண் இரும்பு பொன் முதலிய காரணவஸ்துக்கள் சத்தாயிருப்பதுபோல இந்தத் திருசியப் பிரபஞ்சத்திற்குக் காரணமான ஆத்மாவும் சத்தாம். மேலும், சரீரத்திரயமும் அவஸ்தாத்திரயமும் மாறியவிடத்தும் ஆத்மா மாறாதொருபடித்தா யிருப்பதனாலும் சத்தாம். 'சன்மாந்தரஞ்செய்த' என்று கைவல்லியநவநீதங் கூறும் யுக்தியாலும் ஆத்மாசத்தென்பது நன்றுவிளங்குமாம்.

பி - ஆத்மா சத்தென்பதற்கு அநுபவமென்னை?

உ - நாமரூபசகித தேகேந்திரிய கரணப் பிரபஞ்சாதிகள் அழியினும் தானழியாது காலத்திரயத்திலு மிருப்பதும், நானிருக்கிறேன் நானிருக்கிறேனென்று வியவகரிப்பதும் அநுபவமாம்.

பி - ஆத்மா சித்தா? ஜடமா?

உ - ஆத்மா அவஸ்தாத்திரயத்தை அறிவதால் சித்தேயாம்; ஜடமாயி னறியாது.

பி - ஆத்மா சுழுத்தியில் சித்தாயிருக்கின்றதா?

உ - சுழுத்தியினின்றும் விழித்தவன் ஒன்றுமறியாது சுகமாகவுறங்கினேனென்று கூறுவதனால், சுழுத்தியிலும் ஆத்மாசித்தா யிருக்கின்றது.

பி - ஆத்மா சித்தென்பதற்குச் சுருதியாவை?

உ - † "ப்ரக்ஞாநம் ப்ரஹ்மோஹம்"

---

† ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம

(இ-ள்). ஞானவஸ்து பிரஹ்மந்தான்.

பிரகதாரண்யோபநிஷத்.

† "யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன்ஸர்வேப்யோ,
பூதேப்யோந்தரோயம் ஸர்வாணி பூதாநி நவிது,,

(இ-ள்). சர்வபூதங்களிடத்தும் வியாபித் திருப்பினும், அந்தப் பூத பௌதிகாதி இந்திரியாந்தக் கரணங்களினால் அறிவதற்குச் சாத்தியமாகாததாய், எந்தஞானமுளதோ அந்த ஞான சொரூபமாகிய வஸ்துவே ஆத்மாவாம். பஞ்சபூதங்களுக்கும், பூதாம்சங்களான இந்திரியாதிகளுக்கும், தம்மையும் மற்றையவற்றையும் அறியும் ஞானமின்மையால், அவை சடங்களாம். ஞான சொரூபமாய்ச் சர்வத்தையும் அறிகின்ற ஆத்மா சித்தாம். இவையேயன்றி இன்னும் பல சுருதிகளுமுண்டு.

கைவல்லிய நவநீதம்.

"இருளாக மூடின சுழுத்தியில் விராத்திரியி லிரவிசுடரற்ற பொழுது, மருளாம் இருளையும் பொருளையும் தெரிகின்ற வகை கொண்டு சித்தாமே.

இலக்ஷண விருத்தி.

சடமாகி யறிவற்றுத் தோற்றுகின்ற
செகங்களையுஞ் செயற்கையறி வாக வுறறு
மடமான துறுமியற்கை யறிவின் மூன்று
வகையான வுடல்களையு மியற்கை யான
விடமான வறிவாகிக் காணு நின்ற
வியல்பான நமக்கறிவே வடிவல் லாமற்
றிடமாமற் றொருவடிவு மிலாத தானுஞ்
சின்மாத்ர னெனவென்றுஞ் சிந்தை செய்வாம்,

என்பனவும் ஆத்மா சித்தென்பதற்குப் பிரமாணங்களாம்.

பி- ஆத்மா சித்தென்பதற்கு யுக்தி யாது?

யஸ்ஸர்வேஷு பூதேஷு திஷ்டன் ஸர்வேப்யோ
பூதேப்யோந்தரோயம் ஸர்வாணி பூதாநி நவிது:

உ - அறியப்படுவன திருசிய (ஜட) மாயும், அறிவது திருக்கா (அறிவா)யு மிருத்தலே யுத்தியாம். கண்டேன், கேட்டேன் என்றுந் தொடக்கத்து வியவகாரங்கட் கேதுவாகிய விந்திரியங்கள் மாறுமியல் புடையனவாயும், என்னுடைய விந்திரியங்க ளென்று மடமைக்கு விஷயமாயு மிருக்கின்றன. கடாதிப் பிரபஞ்ச முதல் அவித்தை யீறாயுள்ளன வெல்லாம் அறியப் படுவனவா யிருக்கின்றன. ஆகவே, ஆத்மாவே சித்தென்பது சித்தாந்தமாம்.

பி - ஆத்மாவே சித்தென்பதற்கு அநுபவம் யாது?

உ - நான்ஜாக்கிரத்தை யறிந்தேன், சொப்பனத்தை யறிந்தேன், சுழுத்தியையறிந்தேன், சாக்கிரத்தில் சொப்பன சுழுத்திகளி னபாவத்தை யறிந்தேன், சொப்பனத்தில் சாக்கிரசுழுத்திகளி னபாவத்தை யறிந்தேன், சுழுத்தியில் சாக்கிர சொப்பனங்களி னபாவத்தை யறிந்தேன் என்பதநுபவமாம். ஆத்மா ஒன்றானும் அறியப்படுவதன்று; பாவாபாவங் (இருப்பு இல்லாமை) கட்குச் சாட்சியா யிருப்பதாம்.

பி - இப்போது விவாத சொரூபமாயுள்ள ஆத்மா துக்கசொரூபமா? சுகசொரூபமா?

உ - ஆத்மா எப்போதும் சுகசொரூபமே,

பி - ஆத்மா சுகசொரூப மென்பதற்குச் சுருதி யுக்தி அநுபவங்களெவை?

உ - பிரகதாரணியோபநிஷத்

† "ஏஷோஸ்ய பரமாநந்த ஏதஸ்யை வாநந்தஸ்யா
ஸ்தாநிபூதாநி மாத்ரா முபஜீவந்தி"

(இ-ள்) ஆநந்தரூபமாகிய ஆத்மா தேகத்தி லிருப்பதனால் ஐந்து ஜாலங்களெல்லாம் ஜீவித்திருக்கின்றன.

‡ "ஆநந்தம் ப்ரஹ்மோஹம்"

(இ-ள்). ஆநந்தவடிவ பிரஹ்மம்நான்.

---

† [illegible]
[illegible]

‡ [illegible]

*"ததேதத் ப்ரேய:, புத்ராத் ப்ரேயோ' வித்தாத்ப்ரேயோ ஆத்மாநமேவ ப்ரியமுபாஸீத்"

(இ-ள்). அஞ்ஞாநிகளுக்குப் பொருளும், மண்ணும், பெண்ணும், புத்திரர்களும் ஆநந்தகரமாகத் தோன்றுதலால், அவர்களுக்கு அவற்றின் மீது பிரியமிருக்கிறது. அவற்றாலே தங்களுக்கபாயஞ் சித்திக்குமாயின், மேல் சொல்லியவற்றையெல்லாம் விட்டுத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளப் பிரயத்னப் படுவார்கள். ஆதலால், சகலத்திற்கும் ஆத்மசொரூபனாகிய தானே தனக்கு மிகப்பிரியமா யிருப்பதனால், ஆத்மா பரமாநந்த சொரூபமாம்.

## ஸர்வஸாரோப நிஷத்.

† ஆநந்தமிதி, அம்பஸாமர்ணவ இவஸாந்த்ர சேதநாநாமதிஷ்டாந நித்தியசுத்தா கண்டாத்வைத சிதாநந்தைக ரசமாநந்தம்.

(இ-ள்). ஆநந்த மென்பதேது வென்றால், ஜலங்களுக்குச் சமுத்திரம்போலச் சுகரூபமான சேதனங்களுக்கு ஆதாரமாயும் நித்திய சுத்தாகண்டாத் துவைத சிதாநந்த ஏகரசமாயும் உள்ளதெதுவோ அதுதான் ஆநந்தம்.

‡ வித்தாத் புத்ர: ப்ரியம் புத்ராத் பிண்ட:, பிண்டாத் ததேந்திரியம் இந்திரியேப்ய: ப்ரிய: ப்ராண: ப்ராணாத் ஆத்மாபர:ப்ரிய:

(இ-ள்). திரவியத்தைவிடப் புத்திரன் பிரியன்; புத்திரனை விடத் தூலசரீரம் பிரியம், சரீரத்தைவிட இந்திரியங்கள் பிரியம், இந்திரியங்களைவிடப் பிராணன்பிரியம், பிராணனைவிட ஆத்மா மகாப்பிரியம். என்பன சுருதிகளாம்.

* 𑌤𑌦𑍇𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌯𑍋 𑌵𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌯𑍋 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤,

† 𑌆𑌨𑌨𑍍𑌦𑌮𑌿𑌤𑌿, 𑌅𑌮𑍍𑌭𑌸𑌾𑌮𑌰𑍍𑌣𑌵 𑌇𑌵𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰 𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌖𑌣𑍍𑌡𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑍈𑌕𑌰𑌸𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂

‡ 𑌵𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑍁𑌤𑍍𑌰𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌪𑌿𑌣𑍍𑌡𑌃, 𑌪𑌿𑌣𑍍𑌡𑌾𑌤𑍍𑌤𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌪𑌰𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃,

## இலக்ஷணாவிருத்தி.

தனதானி யாதிசெல் வப்பிரிய மதுவிரா
சாதியா னீங்குங் காலை
தவிராத கையுடைமை பிரியமது செல்வாதி
தன்னின்று மொருவுங் காலை
யினமான புத்திராதி பிரியமல ரனனுற்ற
விமலமா னீங்குங் காலை
யிழிதால வுடல்பிரிய மதுபுழுதி யானீங்கி
விந்திரியம் பிரிய மதுவும
பினமாம்பி ராணகண் டமதான வாக்கினை
பெறும்போ தகன்றுஜீவன்
பிரியமது வுட்பிராண னிறுகாலை விட்டிடுமெக்
காலுமே பிரிய மருவாய்
கனமான வான்மாவை யன்றியொன் றிவ்விதங்
காணாத படியினாலுங்
கருதுமெக் காலுமே தானாக வற்றாநாங்
கழறுபர மானந்த மே.

## கைவல்லிய நவநீதம்.

புலியுமனு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற்
புதல்வனெனி னும்வெறுப்பாம்
உலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியி
லுதாசீன மாமாதலான்
மலினமுறு சின்மபன் பலவகையு மிப்படி
மகிழ்ச்சியில் விருப்பமிகுமான்
அலகிலா னந்தவடி வாகுமுன் சொரூபத்தை
யாராய்ந்து பார்மைந்தனே.
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற்
பேராப்பிரியமதனால்
அருகாத பிரியஞ் சுகத்தில்வரு மாதலா
லானந்த மாமைந்தனே.

இவற்றையு மூகித்துணர்தற் பாலதாம.

பி - ஆத்மா சுகசொரூப மென்பதற்கு யுக்தியாது?

உ - மணமகனுக்காக மாப்பிள்ளை தோழனுக்கு மாமியார் செய்யும் உபசாரம்போல, தேகவாசனை தோஷ அவிவேகத்தினால்

தனக்காகப் பிள்ளைகள் முதலியவர்களிடத்துப் பிரியமாயிருப்பதே யுக்தியாம்.

பி - ஆத்மாசுகவடிவ மென்பதற்கு அநுபவமியாது?

உ - தனது சுகத்திற் காணியுண்டாகச் செய்யும் புத்திர மித்திர களத்திராதிகளை, நிராகரித்துத் தன்னிடத்திற்றான் மிகப் பிரீதியாயிருப்பதுவே அநுபவமாம்.

பி - நானென்னும் ஆத்மா எவ்வளவுகாலமாக அஞ்ஞான காரியமாய பஞ்சகோசாதிகளை யநுபவிக்கின்றது?

உ - ஆத்மா நித்த, புத்த, சுத்த, முக்த, அசங்க, அப்பிரமேய, அசல, அநாமய, அமிருத, ஆநந்தவடிவமாக விருத்தலின், அதற்கு அஞ்ஞானமும் அதன் காரியமாய பஞ்சகோசாதிகளு மொன்று மில்லையாம்; ஆயினும் மோகவசத்தால் அஃது அஞ்ஞான காரியமான பஞ்சகோசாதிகளை அநுபவிப்பது போன்று விளங்குகின்றது. அஞ்ஞானம் சொரூபத்தாலநாதியாகவும், அதன் காரியங்கள் பிரவாகத்தா லநாதியாகவு மிருத்தலின், ஆத்மா எவ்வளவு காலமாக அஞ்ஞானகாரியமாய பஞ்சகோசாதிகளை யனுபவிக்கின்றது. என்று வினவுதல் வேதாந்த சாஸ்திர மரியாதையை யறியாமையை விளக்குகின்றது. மேலும்,

இக்கேள்வி கடபடாதிகள் நிறைந்துள்ள இருட்டறையிலிருக்கும் புருடனைப்பார்த்துத் தாங்களெத்தனை நாளாயிதனை யனுபவித்து வருகிறீர்களென்றும், ஸ்படிகத்திற்குச் சிகப்பு வர்ணத்தைப்பூசி, ஓ ஸ்படிகமே நீ யிந்தச் சிகப்புநிறத்தை யெத்தனை காலமா யநுபவித்து வருகிறாயென்றும், ஆகாயத்திற் றோன்றும் நீலாதிவர்ணங்களைக் குறித்து ஆகாயத்தை நோக்கி நீ யெத்தனை காலமாக நீலாதிவர்ணங்களை அநுபவித்து வருகிறாயென்றும், மஞ்சள்காமாலை யுடையவன் சங்கைப்பார்த்து ஓ சங்கே! இந்த மஞ்சள்வர்ணத்தை எவ்வளவு திவசங்களா யநுபவித்து வருகிறாயென்றுங் கேட்பதுபோலுமாம். இன்னும் இது மித்தியா சொரூபமாயுள்ள அஞ்ஞாநாதிகள், சத்திய சொரூபமாயுள்ள ஆத்மாவைப்பார்த்து ஓ ஆத்மாவே! நீ பஞ்சகோசாதிகளை யெத்தனைகாலமா யநுபவித்து வருகிறாயென்றும், வந்தியாபுத்திரன் அருந்ததியை யொத்த ஒரு பதிவிரதையை நோக்கி நீ எவ்வளவு தினங்களாக வியபிசாரஞ் செய்து காமவின்பத்தை யநுபவித்து வருகிறாயென்றும் வினவுதல் போலுமாம்.

இக்கேள்வி மிகவும் பரியாசமாயிருக்கின்றது. அது கோர்ட்டாருக்கே நன்றாய் விளங்குமென்று கூறிமௌனமாக விருந்தனன். அதுகண்டு கோர்ட்டார் பிரதிவாதி வகீலாகியகோர மூட புத்தி என்பவனைப்பார்த்து நீர் செய்கிற கிராசினால் அரிசியைக் குத்தக்குத்த அது வெள்ளையாவது போன்று, விவேகனுடைய வுண்மை நன்கு விளங்குகின்றது. இனி நீர் பிரசனைகளை நிறுத்திச் சும்மாயிருமென்று சொல்லி, வாதிதரப்பில் வந்த இந்தச்சாக்ஷி மிக்கயோக்கியதையுடையவனென்று தீர்மானித்து நீர் போகலாமென்று கூறி மற்றச் சாக்ஷிகளில் இரண்டாவது சாக்ஷியாகவுள்ள வைராக்கியனை அழைச்கும்படி சேவகர்கட்கு ஆக்ஞாபித்தனர்.



வாதி தரப்பு.

## 2—வது சாட்சி.- வைராக்கியன் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பிராக்ருத மெனவே தங்கட் பேசிடும் பெண்டு பிள்ளை
தராக்ருகஞ் சுவர்ண மாதி சத்திய மலவென் றோர்ந்து
நிராகரித் தருளை நாடி நிகரற்று நிலைத்து வாழும்
விராகனும் வாதி பக்கல் விளம்பிய சாட்சி சொல்வாம்.

தான்பிடித்த முயலுக்கு மூன்றே காலென்று சாதிக்கும் கோரமூட புத்தியென்னும் பிரதிவாதி வகீலெழுந்து நின்று வைராக்கியனைக் கோர்ட்டார் முன்பழைத்துப் பிரமாணஞ் செய்வித்து,

பி - உமது பெயரென்னை ? கோர்ட்டார் முன்பு உண்மையாக விளம்பும்.

உ - என்னுடைய நாமதேயம் வைராக்கியன்.

பி - நீர் யாருடைய குமாரர்?

உ - நான் விவேகனுடைய குமாரன்.

பி - உமக்கு நானென்னும் ஆத்மா தெரியுமா?

உ - தெரியும்.

பி - நானென்னும் ஆத்மா இப்போது எவ்விடத்திற் பிர காசிக்கின்றது?

உ - கற்பிதாகாரமாகிய தங்களுடைய விருதயத்திற் பிரகா சிக்கின்றது. கற்பிதாகாரங் கெட்ட விடத்து அஃதெங்குஞ் சிதம் பர(ஞானாகாச) மாகவிளங்குவது நன்றாய்த் தெரியும்.

பிரதிவாதிவகீல் கோபங்கொண்டு கண்கள் சிவக்கக் கோர்ட் டாரைப் பார்த்து, இந்தச்சாக்ஷி மிகுந்த மோசக்காரன்; இவன் முதலில் பிரமசரிய மென்னும் ஆச்சிரமத்தி லிருந்து அது பூர்த் தியாவதற்கு முன்னமே அதனைவிட்டு மகா யோக்கியனைப்போலக் கிருகஸ்தாச் சிரமத்திற்குவந்து, அக்கினிசாக்ஷியாய் ஒருபெண்ணை விவாகஞ்செய்துகொண்டு, அவளிடத்தில் மக்கள் பலரைப்பெற்று, பேராசையால் மிகவுங் கஷ்டமடைந்து, மனைவிமுதலியோரிடத் துப் பேரன்புடையவனைப் போன்று காட்டி, பலகுருட்டு வேஷம் பூண்டபிநயித்து, சிறிதுகால மங்கிருந்து திருடனைப்போன்று ஒரு வரோடுஞ்சொல்லாமல் தேசாந்தரஞ் சென்றொளித்தவன். இவனு டைய மனையாள் குழந்தைகளுடன் சென்று பல தேசங்களிலுந் தேடிப்பிறகொரு தேசத்திலிவனைக் கண்டு பிடித்து, உம்மையே கதியாகவெண்ணி யிருந்த எங்களைத் திக்கற்றவ ராகவிட்டு இங் கேன் தனித்தோடி வந்தீரென்றுவினவ, வேலைக்குத்தக்கபடி திரு டன் வேடம்போடுவதுபோல உங்களுக்குச் சம்பாதித்துப்போட வெனக்குச் சக்தியில்லாமையால் தேசாந்தரம் போனேனென்று சொன்னான். அதற்கு அவர்கள், நீர்சம்பாதனைசெய்தெங்களுக்குப் போடவேண்டியதில்லை; சும்மா வீட்டிலிருந்துகாலங்கழியுமென்று பன்முறைவேண்டிக் கொண்டதற்கு, இவன்மோக்ஷசுகத்தை யதி சுலபமா யிங்கிருந்து அநுபவிக்கப் போகின்றேனென்றான். அதை யவர்கள் கேட்டுப் பிரத்தியக்ஷமாயும் நிசமாயுமுள்ள விஷயசு கத்தை விட்டுப் பரோக்ஷமாயும் சுத்தப் பொய்யாயுமுள்ள மோ க்ஷசுகத்தை விரும்புதல், கையிலிருக்கும் பாயசத்தை ஒழுக விட்டு முழங்கையை நக்குவதற்கு அபேக்ஷித்து வீணே சிரமங் கொள்வது போலாம்; கையிற் சிக்கியகனியை விட்டு எட்டுதற் கரிய பழத்திற்குத் துறடு போடுவதுபோலா மென்றுகூறி, கேவ லமாக நினைத்துச் சீச்சியென்று சொல்லவாரம் பிப்பதற்கு முன் னமே, இவன் உங்களை யான் மனப்பூர்த்தியாக விட்டுவிடவில்லை;

உங்களுக்கு வேண்டிய சமயங்களிற் றடையின்றி வருவ னென்று உபாயமாகக்கூறி மோசஞ் செய்து, அவர்களை வீட் டுக்குப்போகுமாறு பக்குவமாகச் சொல்லியனுப்பி விட்டு, பிறகு வானப்பிரஸ்த னென்று ஒரு வேடத்தைப் பூண்டு விசேடகால ங்களிற் றன்வீட்டுக்கு வருவதும் போவதுமாகவிருந்து சிலபிள் ளைகளையும் பெற்று வஞ்சக சித்தத்துடன் சிலகாலங் கழித்தான். பிறகு, இவன் சன்னியாசா சிரமத்தை யடைந்து, அதன்கண் விதித்துள்ள கருமங்களுள் ஒன்றேனு மாசிரிக்காம லிருந்தான். பிறகு இன்சால்மெண்டு வாங்கிக் கொண்டவனைப் போல சந்த விஷயங்களுந் தன்னைப்பாதிக்கா திருக்கும்படி சன்னியாசியென் னும் நாமத்தை நீக்கி, "நீக்குபேபே நீதல்லி தன்றி தாதமுத்தாத லகுன்னு பேபே" என்றுசொல்லிய கோமுட்டியைப்போலப் பூர்வாச் சிரமங்களை மோசஞ்செய்து, அதிவர்ணாச் சிரமியென்று பெயரிட்டுக் கொண்டு தன்னையொத்த கூடா ஒழுக்கமுடைய வர்களைச் சேர்த்துக் கொண்டு விதிநிடேத மின்றி அசுசிவாக்கி யங்களை யெப்போதும் வசனிக்கு மிவனுக்குப் புத்திரசோக மென்னும் விலங்கு போடுவித்து, இவனைக் குடும்பகோரபங்க மென்னும் பெரும் பள்ளத்திற் றள்ளவேண்டும். இவன் சீவன் முத்தியென்னும் பெரிய விலங்கையும், விதேகமுத்தி யென்னும் பெரும் பள்ளத்தையும் அபேக்ஷிக்கின்றவனாதலாலும், பல தப்பி தங்களைச் செய்திருப்பதினாலும் தண்டிக்கத் தக்கவனே யாவன். யாவருக்கும் தெரியும்படி இவனைச் சிட்சிக்கப் பிரார்த்திக்கிறே னென்று கூறி வணங்கி நின்றான். கோர்ட்டார் வைராக்கியனைப் பார்த்து, இவ்வகில் கூறியதற்குச்சமாதானமுண்டோ? என்றனர்.

அதற்கு வைராக்கியன் கோர்ட்டார் சமுகத்தில் பணிவாக நின்று நமஸ்கரித்து, என்னுடைய விண்ணப்பத்தைச் சிறிது செவி கொடுத்துக் கேட்கப் பிரார்த்திக்கின்றேன். நான் கூறும் சமாதானங்களாற் கோர்ட்டாருக்குத் தண்டனைக்குப் பாத்தி யஸ்தர் இன்னாரென்பது வெள்ளிடை மலைபோல் விளங்கும். அதைத் தீர்க்கமாகக் கூறுகின்றேன்.

யாக்ஞ வல்க் யோபநிஷத்.

† "ஜந்ம பல்வல மத்ஸ்யாநாம் சித்தகர்தம சாரிணாம்
பும்ஸாம் துர்வாசநா ரஜ்ஜுர் நாரீபடிசபிண்டிகா

† 𑌜𑌨𑍍𑌮𑌪𑌲𑍍𑌵𑌲𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌤𑌕𑌰𑍍𑌦𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌾𑌂।
𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌦𑍁𑌰𑍍𑌵𑌾𑌸𑌨𑌾𑌰𑌜𑍍𑌜𑍁𑌰𑍍𑌨𑌾𑌰𑍀𑌬𑌡𑌿𑌶𑌪𑌿𑌣𑍍𑌡𑌿𑌕𑌾॥

ஸர்வேஷாம் தோஷரத்நாநாம் ஸுஸமுத் கியாநயா
துக்கச்ருங்கலயாநித்ய மலமஸ்து மமஸ்திரியா"

(இ-ள்). ஜன்மமென்னுங் குளத்தில் சித்தமென்னுஞ் சேற்றிற் சஞ்சரிக்கும் புருஷரென்னும் மீன்களைத் துர்வாசனை யென்னுங் கயிற்றிற் பிணைத்து ஸ்திரீக ளென்னுந் தூண்டிமுள்ளைப் போட்டு மன்மதவலைஞன் பிடித்து மோகாக்கினியிற் சமைக்கின்றான்; துக்கசொரூபமாகிய ஸ்திரீகள் புருஷர்களுக்குக் கால்விலங்குப் போன்றவர்கள்.

மகாவாக்ய ரத்நாவளி.

‡ "ஆதிமத்பா வஸாநேஷு துக்கம் ஸர்வ மிதம்யதஃ,
ஸ்திரீயந்த்யக்த்வா ஜகத்யக்தம், ஜகத்யக்த்வாஸு கீபவேத்

(இ-ள்). ஸம்சாரத்திற்கு மூலமாய்ப் பெண்ணுகிவந்த மனையாளிடத்துக் காலத்திரயத்திலும் துக்கமே சம்பவிக்கும். ஸ்திரீயை விட்டால் ஜகத்து நீங்கிவிடும், ஜகத்தை விட்டால் சுகமடைவார்கள்.

துவாதச மஞ்சரி.

* -நாரீஸ்தநபர நாபீதேசம் த்ருஷ்ட்வா மாஹா மோஹாவேசம்,

ஏதந்மாம்ஸவ ஸாதிவிகாரம் மநஸி விசிந்தய வாரம் வாரம்.

(இ-ள்). ஸ்திரீகளுடைய ஸ்தனத்தைப் பார்த்து விகாரப்படுகிறவர்கள். அதிலுள்ள மாம்சத்தையும், நாபிஸ்தானத்திலுள்ள மலமூத்திராதிகளையும் சினை நீர் நிரம்பிய குடல்களையும் சிந்திக்கில் வெகு விகாரமுள்ள அவர்களிடத் துண்டாகிய பிராந்தி நீங்கிவிடும்.

---

ஸர்வேஷாம் தோஷரத்நாநாம் ஸுஸமுத்கியாநயா
துக்கச்ருங்கலயாநித்யம் அலமஸ்து மமஸ்த்ரியா

‡ ஆதிமத்யாவஸாநேஷு துக்கம் ஸர்வமிதம் யதஃ
ஸ்த்ரியம் த்யக்த்வா ஜகத்த்யக்தம் ஜகத்த்யக்த்வா ஸுகீபவேத்

* நாரீஸ்தநபரநாபீதேசம் த்ருஷ்ட்வா மாஹாமோஹாவேசம்,
ஏதந்மாம்ஸவஸாதிவிகாரம் மநஸிவிசிந்தயவாரம் வாரம்"

### பதிபசு பாசவிளக்கம்.

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தால் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.

ஆசையாற் சந்திர னங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபரி யறிவை நீக்கினன்
ஆசையா னராசுர னுவி போக்கினன்
ஆசையால் வாலியு மழிந்து போயினன்.

### பத்திரகிரியார்.

ஆறாத புண்ணி லழுந்திக் கிடவாமல்
தேறாத சிந்தைதனைத் தேற்றுவது மெக்காலம்.

### தாயுமானவர்.

உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ.

### சூதசங்கிதை.

யௌவன பருவத் தழகுவாய்ந் தண்ணுந் தடிபாரந் தெழு முலை யாரைச், செவ்விதி னுய்தல் கடிமணம் புணர்தல் சிறப்பு நா டொறுமவர்க் கியற்றல்,வெவ்விய வூட லொழித்தனல் லாடை விளங்கிழை யாதிக ணேட,லொவ்வுற வவற்றைப்பாதுகாத் திடுத லாதியி னுறும்பல துன்பம்.

### பட்டினத்துப் பிள்ளை.

நாவார வேண விதஞ்சொல்லு வாருனை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வறண்டாற்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதியோ விறைவா கச்சி யேகம்பனே.

### ஞானவாசிட்டம்.

வந்துறு போதி னன்றாய் வரியளிச் சிறகு போலச்
சந்ததஞ் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந் தன்னை
முந்துநோய் மரண மூப்பு முதலவாந் துயர்கட் கஞ்சிச்
சிந்தையில் விரும்பே னெங்ஙன் சேர்வரும் பதத்தைச் சேர்வேன்.

இங்ஙனமுள்ள பிரமாணங்களால் சம்சாரம் துக்கவடிவமா மென்பது ஸ்பஷ்டமாய் விளங்கும். இவ்வாறுய சம்சாரத்தை இச்சிப்பது நாயானதுசுடுகாட்டில் வெந்துலர்ந்துசாரமற்றஎலும்பைக் கண்டு அதிற்சார மிருப்பதாகப் பிரமித்து நெடுங்காலங் கடித்து, தனது தந்தங்களி லிருந்துவரும் ரக்தத்தைச் சுட்கசல்லியத்தின் கண்ணுண்டாகிய ரக்தமென்று பிரமிப்பது போலாம். அது பின்னும் பின்னுங் கடிக்கத் தன்பற்களி லிருந்துவருகின்ற இரக்தத்தினுல் அதிகபாதையை யடைந்து அந்தஎலும்பைக் கடிப்பதை விட்டுச் சிரமத்தை நிவாரணஞ் செய்து கொள்வது போலாம் ஒருவன் சந்நியாசம் பெறுவது. இந்த ஹீன சம்சாரத்தின்கண் அதிகப்பிரிய முடையவன் நரகத்திலும் பிரியமுடையவனுவன், அசார சம்சாரத்தில் சாரமிருப்பதாகக் கருதி இரவும் பகலுங் கஷ்டப்பட்டுக் கொண்டு நாளுக்குநாள் தேகஞ் சுட்கித்து, பெரும்புண்ணிய வசத்தால் சம்சார கஷ்டங்களுக்கு மூலகாரணமாயுள்ள மனைவியின் வடிவத்தை மலமூத்திரக் கேணியாகவும், இரக்த மாமிசத் தொட்டியாகவும் பார்ப்பவன் எப்படி அவளை நேசிப்பான்?

ஸ்திரீயின் முகமானது சுந்தரமாயின், அதனை யழகுசெய்ய மஞ்சள் கந்தந்திலக முதலியன தேடுவதேதன்? கண்கள் சுந்தரமாயின், அவற்றிற்கு மையிடுவ தெற்றிற்கு? வாய் சுவாசனை யுடையதாயின், தாம்பூலாதிகளைப் போடுவதேதன்? சரீரம் அழகாயின், சித்திரவர்ண பச்சைகள் குத்துவதேதன்? தேகம் நாற்ற மில்லாத தாயின், அதனைக் கறுப்புச் சிட்டக்கல் முதலிய வற்றால் யானைகளைத் தேய்ப்பது போன்று சீக்காய், இலுப்பைப் புண்ணாக்கு, சப்பு முதலிய வற்றால் தேய்த்துக் கழுவவ தெற்றிற்கு? அவர்களுடைய வாக்கியங்கள் மதுரசுபாவ முடையனவாயின், சங்கீத சாயித்தியங்களைக் கேட்பதேதன்? அவர்களுடைய வடிவங்கள் சுந்தரமாயிருப்பதாயின், அவற்றை ஆடையாபரணங்களால் அலங்கிருதஞ் செய்வ தெற்றிற்கோ? புனுகு, சவ்வாது, சந்தனம், அத்தர் முதலியன பூசி மகிழ்வதேதனோ? இவ்வாறு அதிஹேயமாயும் மிகதோஷமாயு முள்ள ஸ்திரீவடிவங்களை யெடுத்தியம்புதற்குஆயிரம்வாயும் இரண்டாயிரம் நாவுமுடைய ஆதிசேஷனுலும் முடிவுறுமோ? கோர்ட்டா ரவர்களே தயவு செய்து இந்த நியாயங்களை யோசித்துத் தருமமார்க்கமாகத் தீர்மானிக்கவேண்

டேனைப் பிரார்த்திக்கிறேனென்று மிசவணச்சமாக நின்றான் கோர்ட்டார் வைராக்கியன் சொன்ன வார்த்தைகளையும் அவற்றிற் கிசைந்த வாறாகக்கூறிய சுருதி யுக்தி யநுபவங்களையும் ஆலோசித்துப் பார்த்து, இந்தச்சாட்சி மிகுயோக்கியன், சத்திய வாதியென்று தீர்மானித் தெழுதி, நீர் போகலாமென்று கூறி, பிறகு சேவகர்களை நோக்கி மற்றச் சாட்சிகளை யழையுமென்றார்.



## வாதி தரப்பு.

## 3—வது சாட்சி-சமனென்பவன் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

இம்மையு மறுமை யுஞ்சே ரின்பத்தை யிகழ்ந்து வெய்ய
மும்மலங் களையு மற்று மோனமெய்ஞ் ஞான மான
தம்மையுங் கண்டா ருள்ளந் தழைத்தேங்கு மாளு கின்ற
செம்மல்முன் சமனும் வந்து செப்பிய சாட்சி சொல்வாம்.

வாதிதரப்பின் மூன்றாவது சாக்ஷியாகவந்த சமாதிசட்க சம்பத்தி யென்ற வர்களைத் தான் பிடித்ததைச் சாதிக்கும் கோரமூடபுத்தியென்னும் பிரதிவாதி வகீலழைத்துப் பிரமாணஞ் செய்வித்துக் கோர்ட்டார் முன்னிலையிற் செய்யும் பிரசினை வருமாறு:

பி - உங்களுடைய பெயரென்ன?

உ - சமன், தமன், சமாதானன், உபரதி, திதிட்சை, சிரத்தை யென்பனவாம்.

பி - நீங்கள் யாருடைய பிள்ளைகள்?

உ - வைராக்கிய னுடைய பிள்ளைகள்.

பி - உங்களுள் முதன்மையானவர் யார்?

உ - சமன்.

பி - (சமனைப்பார்த்துப் பிரதிவாதிவகீல்) உமது பெயரென்ன?

உ - சமன்.

பி - உமக்கு நானென்னும் ஆத்மா தெரியுமா?

உ - நன்றாகத் தெரியும்.

பி - எவ்வாறறிவீர்?

உ - இந்தக் கேசில் பிரதிவாதிகளாக வந்த பரம சத்துருக்கள் நிர்மூலமாய்ப்படி செய்த உத்தர க்ஷணத்திற்றேன் பார்தாண்டனைப்போல விளங்கும் நானென்னும் ஆத்மாவை நன்றாயறிவன்.

பி - அஃது உமது சத்துருக்களுள்ள விடத்தில் விளங்காது இல்லாதவிடத்தில் விளங்குவதற்குக் காரண மென்ன?

உ-ஞானப்பிரகாச பாஸ்கரனாகிய நானென்னும் ஆத்மாவை வருஷகாலத்தி லெழுகின்ற மேகங்களைப் போல அவர்கள் மறைத்து வருகிறார்கள். இதுவுமன்றித் தூர்வாசனைக ளெல்லா முடைய அவர்கள் குலோப்பு, வால்சையிட்டு, ராந்தல் முதலிய வற்றில் அழுக்குக்கள் சேர்ந்து அவற்றிலுள்ள சோதியை மறைப்பதுபோல அந்தக்கரணத்தில் சேர்ந்து ஆத்தும சோதியை மறைக்கின்றார்கள், அதனால் ஆத்மா செவ்விதாக விளங்கா திருக்கின்றது. அந்த நானென்னும் ஆத்ம சாக்ஷாத்காரப் பிரதிகூலர்களைப் பிரகிருதிதத்துவ விவேசனமென்னும் ஐஞ்சாமாருதத்தினால் கெடுத்தால்,மேகாவரணம் நீங்கிய சூரியனைப்போலஅதுவிளங்கும், ஞானபாஸ்கரனாகிய நானென்னும் ஆத்மா யாவருக்கும் எளிதில் விளங்குவதன்று. அன்றியும்,குலோப்பு முதலியவற்றின் மீதுள்ள அழுக்குக்களைத் துணியால் துடைத்துப் போக்கிய விடத்துஅவற்றிலுள்ள தீபம் செவ்வையாக விளங்குவது போல, சத்குரு உபதேச சதாசார அநுஷ்டானங்களால் மலினவாசனா யுக்தர்களாகிய அச்சத்துருக்களை யொழித்த விடத்துச் சுயஞ் சோதியாகிய நானென்னும்ஆத்ம சோதி நன்கு விளங்கும்.

பி - ஆத்மாவிற்கு அவர்களால் நேர்ந்த கெடுதியென்ன? பிரபல ராக்கதர்களில் அவர்களெவர்களைப் போன்றிருப்பவர்? அவர்களிருக்கு மிடங்களில் ஆத்மா ஏன் விளங்குவ தில்லை? அதை நன்றாக யாவருக்குந் தெரியுமாறு சொல்லும்?

உ- அவர்கள் சந்ததியார்களுள் இராகமென்பவன் இராவணேசுரனையும் இரணிய கசிபனையும், காமமென்பவன் நரகாசுரனையும், மதமென்பவன் கார்த்த வீரியனையும், மற்சரனென்பவன் சிசுபாலனையும், ஈர்ஷையென்பவன் இரணியாக்ஷனையும், அசூயை யென்பவன் பௌண்டிரீக வாசுதேவனையும், இடம்பனென்பவன் அபூர்வராஜனையும், தர்ப்ப மென்பவன் தசமுக ராவணனையும், அகங்கா

ரன் முதலியோர் மதுகைடவன் நரகாசுரன் முதலிய பிரமுகரையும் ஒப்பர். அநந்தகோடி புஜபல பராக்கிரம முடைய அதிசூரர்களை இராவணன் முதலியோர் கொலைசெய்தாற் போன்று மிகவேழையாகிய இந்த முமுட்சு வென்னும் வாதியை நீங்களியாவருமொருமித்துக்கூடிக் கெடுப்பதோர் ஆச்சரியமன்று. அன்றியும் ரஜோ தமோ குணவிருத்திகளாய உமது மனைவிமார்களும் விபசாரிகளைப் போல ஒரு விஷயத்தைவிட்டு மற்றொரு விஷயத்தை யவலம்பித் திருத்தலினாலே பதிவிரதைகள் குடிலாங்கனைகளின் கூட்டத்தில் பிரகாசியாமைபோலச் சித்தான ஆத்மா, ஜடமாகமூடிய ராஜஸாதி விருத்தி கூட்டங்களிற் பிரகாசியாது. அவித்தை முதலியவற்றால் சத்துவ மறைந்துள்ள சித்தத்தில் ஆத்மா எவ்வாறு பிரகாசிக்கும்.

பி - ஆத்மா சொப்பிரகாச சுகஸ்வரூப சுபாவமாயின், சர்வப் பிரதேசங்களிலுஞ் சுகமேன் பிரகாசிப்பதில்லை?

உ - நீரின் சீதளந் தீயின்சம்பந்தத்தால் தோன்றாமை போல, மூடகுரோத விருத்திகளின் சம்பந்தத்தால் ஆத்மசுகந் தோன்றா திருக்கின்றது.

பி - ஆத்மசுக மெப்போது தோன்றும்?

உ - புத்தியின்சத்துவ குணத்தால் வைராக்கியமாகிய சாந்த விருத்தியில் ஆத்மசுகம் நன்குவிளங்கும். அச்சாந்தவிருத்திவாய்த் தபோதுதான் ஆத்மா சச்சிதாநந்த வடிவ மென்பது செவ்விதாகவிளங்கும். மேலும், வியபிசாரத்தால் வருந்தீங்கை யுள்ளவா றறிந்தவர் ஒருநாளும் வியபிசாரஞ்செய்ய விரும்பாமை போலத் தத்துவ விசாரத்தால் மூடகுரோத விருத்தியால் வருந்தீங்கை யுள்ளவா றறிந்தவர் ஒருபோதும், அவ்விருத்திகளின் வசமாவதில்லை. சாந்த விருத்தியைப் பொறாதவர்க்கு இவ்வுண்மை விளங்காது என்று கூறியடக்கமாக நின்றான். கோர்ட்டார் மனவடக்க மென்னும் சமன் கூறியவற்றைக் கவனமாகக் கேட்டு இவர்சொல்லிய வசன மெல்லாம் அங்கீகாரஞ் செய்யத்தக்கன வாமென்று தீர்மானித்து, நீர் போகலாமென்று கூறி, பிறகு தமனென்னுஞ் சாட்சியை விசாரிக்க ஆக்ஞாபித்தனர்.



## வாதி தரப்பு.

### 4—வது சாட்சி - தமனென்பவன் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நிலந்தரு முயிர்க ளாயு ணீங்கிட வெமனாய் வந்த
புலந்தரு துன்ப மன்றிப் புகலிட மில்லை யென்று
வலந்தரு புந்தி யாலே வலித்தந்தப் புலன்கள் வென்ற
நலந்தருந் தமனும் போற்றி நவின்றிடுஞ் சாட்சி சொல்வாம்.

தமனென்பவன் கோர்ட்டார் முன்னர் நின்றவுடன் பிரதிவாதி வகீலாயுள்ள கோரமுட புத்தியென்பவ னெழுந்து நின்று கோர்ட்டாரைப் பார்த்து முன்பு சாட்சியாகவந்த சமனென்னுஞ் சாட்சி சித்தத்தின் ராகாதிப் பிள்ளைகளை எப்படி கொன்றானோ, அப்படியே தமனென்னுமிவனும் ஞானேந்திரிய கருமேந்திரியங்களின் விருத்திகளாகிய பிள்ளைகளைச் சற்றும்யோசியாது கொலை செய்த குலபாதகன். அங்ஙனமிவன் கொல்வதற்குக் காரணம் யாதோ? அதனைக் கோர்ட்டாரே விசாரிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

பி - தமனென்பவனைக் கோர்ட்டார் பார்த்து இப்போது பிரதிவாதி வகீல் சொல்லிய வற்றிற் கென்ன சமாதானஞ் சொல்லுகிறீர்?

உ - சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்க ளென்பவற்றை விஷயமாகவுடைய சுரோத்திராதி ஞானேந்திரிய சத்துருக்கள் மிகு பராக்கிரமங்க ளுடையவர்களாய்ப் பிபீலிகாதிப்பிரஹ்ம பரியந்த முள்ள ஜீவகோடிகளைப் பலவகைத் துன்பங்களுக் குட்படச் செய்து கேடுறச் செய்கின்றார்கள். அவர்களுள் ஒவ்வொருவர் செய்யும் துர்மார்க்கங்களுட் சிலவற்றை இங்கெடுத்துக் கூறுகின்றேன்.

சுரோத்தி ரேந்திரிய வாபத்துக்கள்

பாகவதம்.

† க்ராம்ய கீதம் நச்ருணு யாத்யதிர் வநசரஃ க்வசித்,
சிட்சேத ஹரிணாத் பத்தாந் ம்ருகயோர் கீத மோஹிதாத்
(இ - ள்). வேசிகளின் அதிமதுரகீதா கானங்களைக் கேட்பவர்கள் அவசியமவர்களின பாசபந்தங்களி லகப்படுவர்; மான்

---

† க்ராம்யகீதம் ந ச்ருணுயாத்யதிர்வநசரஃ க்வசித்।
சிக்ஷேத ஹரிணாத் பத்தாந் ம்ருகயோர் கீதமோஹிதாத்॥

கள் தீவர்த்திகளைப் பார்த்தும், வேட்டைக்காரர்கள் செய்கின்ற கண்டாநாதத்தைக் கேட்டும் பிரமித்து மெய்ம்மறந்து நிச்சேட்டையாய் நின்று வேட்டைக் காரர்களது வசத்தில் வெகுசுலபமாயகப்பட் டிம்சை யடைவது சகலரும் அறிந்த விஷயமேயாம்.

ஞானவா சிட்டம்!

"படாமூர்க்க மாமனமே விணாய்த் தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்று சந்தந், தொடர்கின்ற புத்தியினு லசுண மாபோற் றுஞ்சுறவேண் டாம்" என்றும், வள்ளலார் சாஸ்திரம் "சத்தத்தா லசுணமாயும்" என்றும் கூறுவதும், ரிஷிய சிங்க மகாரிஷி பிறந்தது முதல் ஸ்திரீகளைப் பார்க்காதவ ராயிருந்தும் ரோமபாதனால் ஏவப்பட்ட (வாரவனிதா) தாசிஜனங்களின் மதுரகான லோலராகி அந்த ஸ்திரீகளுக்கு வசியமாய் அவர்களின் பின்றொடர்ந்து வனத்தைவிட்டுப் புரத்திற்சென்றொரு ராஜகன்னிகையைக் கடிமணம் புரிந்தார் என்றும்.

‡ - பசுர்வேத்தி சிசுர்வேத்தி காநரசம்பணிஃ"

(இ-ள்). சுரசாயித்ய சங்கீத கானரசத்தினால் பசுக்களும், சிசுக்களும், சர்ப்பங்களும் பரவசமாகி மெய்ம்மறந்து அன்னியர்க்கு வசியமாய் மகாவாபத்திற் குள்ளாகின்றன. என்றும் முள்ளனவற்றால் சுரோத்திரேந்திரியத்தினும் பரமசத் துருவாயிருப்பதெதுவாம்! இஃது லகமறிந்த தன்றோ.

துவக் கிந்திரியத் துன்பம்.

பாகவதம்.

† ததாபி யுவதீம் பிச்சுர் நஸ்ப்ருயாசேத் தாரவீமபி
ஸ்ப்ருசன் கரீவபத்யேத கரிண்யா அங்கசங்கதஃ

(இ - ள்). பாகர்கள் கொண்டுவரும் பெட்டை யானைகளின் அங்கஸ்பரிச சுகலேசத்தை யபேட்சித்து ஆண்யானைகள் கட்டுப்படுகின்றன; கட்டுப்படுவதுமன்றி அந்தப் பாகர்களால் பலவுபத்திரவங்களையு மடைகின்றன. ஆதலால் அங்கனுமணிகள் அங்கஸ்பரிசம் சகல வனர்த்தங்களுக்கு மூலமாமென்றறிந்து சுவதருமநிட்

---

‡ பசுர்வேத்தி சிசுர்வேத்தி வேத்தி காநரஸம்பணீ

† ததாபி யுவதீம் பிக்ஷுர்ந ஸ்ப்ருசேத்தாரவீமபி, ஸ்ப்ருசந் கரீவ பத்யேத கரிண்யா அங்கஸங்கதஃ

டர்களாகிய சன்னியாசிகள் ஸ்திரீகளைப் பார்த்த மாத்திரத்தில் தூரமாயோடி விடவேண்டும்; அவர்களுடைய தரிசனமே கூடா தென்றால், அவர்களுடைய பரிசம் சொப்பனத்திலும் ஆகாது.

ஞானவாசிட்டம்.

"தோலின் தொழிலை மேவி, யடர்பரிச முகமா மதனுற்றன்ப மடியாகப் பிடிக்ககன்பா மியானை போல, மடமைமிகு மூர்க்கமா மனமேயென்று மாறாத வாபத்தை மருவவேண்டாம். வள்ளலார் "பரிசத்தாற் றந்தி மாயும், என்றுள்ளவற்றை நோக்குமிடத்துப் பரிசத்தால் வரும் துன்பத்தின் தொகுதி நன்கு விளங்கும். மேலும், ஸ்திரீகளுடைய ஆலிங்கன சம்போகசேட்டைகளா லுண்டாகுஞ் சுகமே ஸ்பரிசாநந்தமாம் இந்தப் பரிசாநந்த விச்சையினால் படமுடியாத பாடுபட்ட வர்களையும் அதனு லிறந்தவர்களையும் அளவிட்டுச் சொல்லுதல் முடியுமா? அவர்களுள் சிலரை யிங்குக் கூறுகின்றேன். பூர்வத்தில் (1) இந்திரன் அகலிகையின் சையோகத்தினால் கௌதம மகாரிஷியின் சாபத்தை யடைந்து தேகமெல்லாம் யோனிக ளுடையவனுய்ப் பிரஷ்டனுனன். (2) மகாபல பராக்கிரமங்களுடைய சுந்தோப சுந்தர்களென்னும் இராக்கதர்கள் அந்நியோந்நிய மித்திரர்களா யிருந்தும், திலோத்தமையின் சையோகத்தை யபேட்சித்து, பிரபல யுத்தம் புரிந்து எமபுரிக்கேகினர். (3) சகலவேத பாரங்கதனுன இராவணேசுவரன் சீதையின் அங்கப் பரிசத்தை விரும்பி ஸ்ரீராமரால் புத்திர மித்திராதி சதுரங்கபலசேனைகளுடன் அதமானுன். (4) கீசகன் துரௌபதையின் பரிசவிருப்பினால் பீமனால் மடிந்தான். இவ்வாறு அநேகரிறந்தனர். பொதுவாக நோக்குமிடத்தில் குலாங்கனைகளின், சம்போகங்களினால் புருஷர்கள் தினேதினே பலவீனராய்ப் புத்திமாந்தியமடைந்து, வியாதிக்கிரஸ்தராய் அபமிருத்தியுக் காளாகின்றனர். இந்தத் துவக்கேந்திரிய வியாபாரத்தா லுண்டாகுந் துக்கத்திலும் வேறெது பயங்கரமானது?

இரசேந்திரிய கஷ்டம்.

பாகவதம்.

* " ஜிஹ்வா யாந்தி ப்ரமாதிந்யா ஜநோ ரஸவிமோஹித:
ம்ருத்யு ம்ருத்யச்ச ஸத்புத்திர் மீநஸ்து படிசைர்யதா,,

* ஜிஹ்வயாதி ப்ரமாதிந்யா ஜநோ ரஸவிமோஹித:।
ம்ருத்யும்ருச்சத்யஸத்புத்திர் மீநஸ்து படிசைர்யதா ॥

ஞானவாசிட்டம். "வெய்ய மனமே நாவின் விருத்தி மேவி யெளிதருந்தி யுணவுகளின் மணத்தி னாலே, யிரைதூண்டிற் கவர்மீன்போ லிறக்க வேண்டாம்." என்றும், வள்ளலார் "பற்றியா ஈர தத்தாலே பாணிமீ னங்கள் மாயும்" என்றும் கூறுவதைக்கூர்ந்து நோக்கினால் சுவையுள்ள பக்ஷணங்களின்மீ தாசைகொள்வது மரணத்திற்கு மூலமாமென்பது நன்கு விளங்கும். இரசேந்திரிய சாபல்லிய முடையவன் அநந்த துக்கங்களைத் தவறா தனுபவிப்பான். மீன்கள் இரசமாதுரிய விநோதங்களால் தூண்டி முள்ளின் கணகப்பட்டுச்சாதல் பிரசித்தமல்லவா? மதுரமாகிய பதார்த்தங்கள் பார்வைக்கு யுக்தமாய்க் காணப்படினும், அவற்றை விட்டுவிடுதலே நலமாம். சுவையுள்ள வுணவின் பிருதியாலன்றோ வியாதிகள் பல வுண்டாகின்றன.

ஜிஹ்வா (நாக்கு) சாபல்லியமுடையவன் தப்பாது பவரோகச் சேற்றிற் புரளுவன். அவன் புத்தி யுக்தனுதலெப்படி கூடும்? கெடுதியுண்டாக்கு மிந்திரியங்களுள் பல முடையது ரசேந்திரியமாம். நாக்கின் துவார மதுர பதார்த்தங்களி னிரசங்களை யுட்கொள்ளும்போது அவைஇந்திரியக்கூட்டங்களுக் குன்மத்தமுண்டாக்குகின்றன. இந்த ரசேந்திரியத்தை ஜயிக்காத விடத்துப் பவ ரோகம் நீங்குவது மிகக் கஷ்டமாம்.

இதுவேயுமன்றி இந்த விரசேந்திரியம் சட்ரசங்களுக்குச் சபலத்துவமடைந்து சகல ரோகங்களையும் விருத்தி செய்து ஆயுள் க்ஷீணிக்குமாறுசெய்து அகாலமரண முண்டாக்குகின்றது. இது லோகாநுபவமாம். மனிதர்களிவ்வாறு நாசமடையச் செய்விக்கின்ற விந்த நாக்குச் சகல வார்த்தைகளுக்கு மாதாரமாயிருக்கிறது. இது காலதேச வர்த்தமானங்கட் கிசையச் சமயோசித வார்த்தைகளாலே சௌக்கிய சிரேயசுகளை யுண்டாக்குவதை விட்டுப் பெரும்பான்மையாகக் கெட்ட வாக்கியங்களால் லோகாபவாதம், பகை, திரஸ்காரம், பிராணவாணி முதலியனவற்றை யுண்டாக்குகின்றது.

‡ "சத்யம் ப்ரூயாத் ப்ரயம் ப்ரூயாத், நப்ரூயாத் சத்யமப்ரயம்."

(இ-ள்). சத்தியம் பேசவேண்டும்; பிரியமாகப் பேசவேண்டும்; சத்தியமானபோதிலும் உலகத்திற் கப்பிரயமானவற்றை வசனித்தலாகாது.

---

‡ ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் நப்ரூயாத் ஸத்யமப்ரியம் ।

என்பதைக் கருதிப் பண்டிதர்கள் எவ்வளவு சாக்கிரதை யாக வார்த்தையாட ஆரம்பித்த போதிலும், நாக்குத்தனது சுபாவீக குணங்களினால் அவர்கட்குத் தவறுதலை யுண்டாக்குகின் றது; பிறர்க்கதிருப்தியு முண்டாக்குகின்றது. இக்காரணங்க ளாற்றான் பெரியோர்கள் வாக்கு மவுனத்தையும், மனோமவுனம் காட்டமவுனம் என்பனவற்றோடு அவலம்பிக்கின்றார்கள்.

## ஞானவாசிட்டம்.

வாக்கு மவுனஞ் சொற்றடையாம் வலிந்திந்திரிய மடக்கு வித்தல்
ரூக்கு காண மவுனமதாந் தனது சேட்டை யெலாம்விடுதல்
வீக்குங் காட்ட மவுனமதாம் விளங்குஞ் சித்த வியாபார
நீக்க மில்லா மூவகையாய் நிகழ்த்து மவுன மிவையாகும்.

என்று கூறுவதால், மனோஜயத்திற்கு இரசேந்திரிய நிக்கிர கம் முக்கிய காரணமாமென்று தெரிகின்றமையால், எதையும் மவு னமாகவே யுச்சரித்தல் வேண்டும். சுருதிகளு மவ்வாறே சொல் லுகின்றன.

## வராகோபநிஷத்.

† "சத்ய சித்கந மகண்ட மத்வயம் ஸர்வ த்ருச்ய ரஹிதம் நிராமயம், யத்பதம் விமல மத்வயம் சிவம் தத்ஸதாகமிதி மௌந மாச்ரய"

(இ-ள்). சத்யசித்கந அகண்டாத்வயமாயும், திருசியங்களல் லாததாயும், கல்மஷங்களற்றதாயும், சுத்தமாயும், இரண்டாவதற் றதாயும், மங்களகரமாயு மிருப்பது எந்தப் பிரஹ்மமோ அது நா னென்று எப்போதும் மவுனத்தை யாச்சிரயித்துக்கொண்டிரு.

‡ "ஜந்ம ம்ருத்யு ஸுகதுக்க வர்ஜிதம் ஜாதிநீதிகுல கோத்ர தூரகம், சித்விவர்த்த ஜகதோஸ்ய காரணம் தத்ஸதாக மிதி மௌநமாச்ரய."

---

† 𑌸𑌤𑍍𑌯𑌚𑌿𑌤𑍍𑌘𑌨𑌮𑌖𑌣𑍍𑌡𑌮𑌦𑍍𑌵𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌶𑍍𑌯𑌰𑌹𑌿𑌤𑌂 𑌨𑌿𑌰𑌾𑌮𑌯𑌂, 𑌯𑌤𑍍𑌪𑌦𑌂 𑌵𑌿𑌮𑌲𑌮𑌦𑍍𑌵𑌯𑌂 𑌶𑌿𑌵𑌂 𑌤𑌤𑍍𑌸𑌦𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑍌𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯.

$ 𑌜𑌨𑍍𑌮𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 𑌜𑌾𑌤𑌿𑌨𑍀𑌤𑌿𑌕𑍁𑌲𑌗𑍋𑌤𑍍𑌰𑌦𑍂𑌰𑌗𑌂, 𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌵𑌰𑍍𑌤𑌜𑌗𑌤𑍋𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑌤𑍍𑌸𑌦𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑍌𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯॥

(இ-ள்). பிறப்பிறப்பு சுகதுக்கமற்றதாயும்; ஜாதி நீதி குல கோத்திர மற்றதாயும்; ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரணமாயுமிருப்பது எதுவோ அந்தச் சித்நானென்று மௌனத்தை ஆசிரயஞ் செய்வாய்.

()-"பூர்ண மத்வய மகண்ட சேதநம் விஸ்வபேத கலநாதிவர்ஜிதம். அத்விதிய பர ஸச்சிதம் சகம் தத்ஸதாக ஙிதி மௌநமாச்ரய."

(இ-ள்). பூர்ணமாயும், இரண்டாவதற்றதாயும், அகண்டசேதநமாயும், பிரபஞ்சபேத சம்பந்தாதிக ளற்றதாயும், அத்துவிதியமாயும், பரசச்சிதம் சகம் (அம்சமுடையது) ஆயுமிருக்கிற அந்தப் பிரஹ்மம் நானே யென்றெப்போதும் மௌனத்தை யாச்சிரயிப்பாய்.

தாயுமான சுவாமிகள்.

சும்மா யிருக்கச் சுகஞ்சுக மென்று சுருதி யெல்லா
மம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
யெம்மான் மௌனி மொழியையுந் தப்பியென் பேதைமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேனந் தோவென் விதிவசமே.

என்று கூறுவதால், நாவடக்க முடையாரே நலமெலாம் பெறுவாரென்பது நன்குவிளங்கும். ஆகையால், நாவடக்கமா யொழுகுவது பரம சிரேயஸாம்.

கிராணேந்திரியத் துன்பம்.

ஞான வாசிட்டம்.

" நளினவித யத்துளுயிர் நெறிபோய்த் தந்த
நாட்டத்தாற் கட்டுண்ணே ளனவண் டேபோல்"

என்று கூறுவதால், கிராணேந்திரியத்தால் வருந்துன்பமினிது விளங்குவதாம். சுகந்த துர்க்கந்தமென்னு மிருவகைக்கந்தத்துள் சுகந்தத்தையே பிராணிகள் விரும்புகின்றன, சில ஜீவராசிகள் தமக்குப் பழக்கமாயுள்ள சில வாசனைகளைச் சுகந்தமாய் அநுபவித்து வருகின்றன. சில ஜீவராசிகளவற்றைத் துர்க்கந்த மென்று நிவிர்த்திக்கின்றன. சாதாரணமாக ஜீவகோடிகள் தமக்குப் பிரியமாகிய வஸ்துக்களை அவற்றின் வாசனைகளினுல் தெரிந்துகொண்டு அவையுள்ள விடத்திற்கேகிப் பேராசையால் மிகுதியாகவுண்டு அதனுலிறந்துவிடுகின்றன. கீடகங்களென்னும் வண்டி

---

() "[Grantha script text, illegible]"

ஙங்களுள் சில வாசனுவசமாய்ப் புஷ்பங்களின் மகரந்தங்களையுண்டு சண்பக புஷ்பத்தில் விழுந்திறக்கின்றன. ஈக்களுள் சில வாசனுவசமாய்க்கட்குடங்களிற்சூழ்ந்து அவற்றுள் விழுந்திறக்கின்றன. எறும்புகள் தேன், நெய் முதலிய பாத்திரங்களைச்சூழ்ந்து அவற்றில் விழுந்து மடிகின்றன. மூஷகாதிகள் மாமிச வுணவை யபேக்ஷித்து அவற்றின் வாசனைகளால் ஆத்திரமடைந்து அவை வைத்துள்ள போன்முதலிய வற்றிலகப்பட்டுப் பிராணனையிழக்கின்றன. இவ்வாறே மனிதரும் வாசனுயுக்தமாயும் அபத்தியாபத்தியத்திற் கேதுவாயுமுள்ள பதார்த்தங்களை யுண்ணவிரும்பி அவற்றை யிஷ்டப்படி வயிறு நிரம்பவுண்டு பலவித ரோகங்களாற் பீடிக்கப்பட்டு வருந்துகின்றனர். ஆதலால், சன்மார்க்கரோ வெனின், கர்மேந்திரிய விஷய வியாபாரங்களுக் கிடங்கொடாது சகலேந்திரியங்களையும் ஜயித்து ஆத்மாராமராயும், சுகசொரூபராயு மிருப்பார். இந்தப் பஞ்சவிஷயேந்திரியங்களையும் ஜயித்தவரே பிரமாநந்தமடைவாரேயன்றி மற்றையர் அடையார்.

விவேகசூடாமணி

$ சப்தாதிபிः பஞ்சபி ரேவபஞ்ச பஞ்சத்வமாபுः ஸ்வகுணேர் நிபத்தாः, குரங்க மாதங்க பதங்க மீநப்ருங்காநரः பஞ்சபிரஞ்சிதகிம்"
தோஷேண தீவ்ரோ விஷயः க்ருஷ்ண ஸர்பவிஷாதபி,
விஷம் நிஹந்தி போக்தாரம் த்ரஷ்டாரம் சக்ஷுஷாப்யயம்"
'விஷயாசா மஹாபாசா த்யோவ முக்தஸ்ஸு துஸ்த்யஜாத்,
ஸஏவ கல்பதே முக்த்யை நாந்யः ஷட்சாஸ்த்ரவேத்யபி"

"உலவுபாம் பானை விட்டி லூருமீன் வண்டிவ் வைந்து
மொலிமுதற் புலனென் றொன்றி லுவந்ததா லிறக்கு மாயின்
புலனிவை யைந்தி னும்மால் பொருந்திய புருடன் சேரும்

---

$ ശബ്ദാദിഭിഃ പഞ്ചഭി രേവ പഞ്ച പഞ്ചത്വമാപുഃ സ്വഗുണേന ബദ്ധാഃ। കുരങ്ഗമാതങ്ഗപതങ്ഗമീനഭൃങ്ഗാ നരഃ പഞ്ചഭിരഞ്ചിതഃ കിം॥
"ദോഷേണ തീവ്രോ വിഷയഃ കൃഷ്ണസർപ്പവിഷാദപി।
വിഷം നിഹന്തി ഭോക്താരം ദ്രഷ്ടാരം ചക്ഷുഷാപ്യയം॥
"വിഷയാശാമഹാപാശാദ്യോ വിമുക്തഃ സുദുസ്ത്യജാത്।
സ ഏവ കല്പതേ മുക്ത്യൈ നാന്യഃ ഷട്ശാസ്ത്രവേദ്യപി॥

பலவிதத் துன்பந் தன்னைப் பகர்ந்திட முடியு மோசொல்.
தவ்விய புலனைத் தந் தன்னுடைத் துகளி னாலே
வெவ்விய கருநா கத்தின் விடத்தினுங் கொடிதே யாகுங்
கவ்விய வவ்வி டந்தான் கடித்தலாற் றவனைக் கொல்லும்
தவ்விய புலனி னைந்தோன் தன்னையுங் கொல்லு மன்றே.
பரவிய புலன்க டம்மை பற்றிய வாசை யாகு
முரவிய மாபா சத்தை யுள்ளவா றறுக்க வன்றா
னருமையா முத்திப்பேற்றை யடைந்திடச் சதுரன்மற்றோன்
கருதிய வாறு நூல்கள் கற்கினுஞ் சதுர னன்றால்.

## ஞானவாசிட்டம்.

உரைத்தவசு ணைங்களிறு கிட்டின் மீன்றே
னோசையுநு ரொளியிரத நாற்ற மென்ன,
நிரைத்தவிவற் றொன்றொன்றான் மாய்ந்து போகு
நிலையழிக்கு மவையைந்து மேரே கூடிக்,
கரைத்தலுறு பவர்க்கின்ப மெங்கே யுன்றன்
கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்,
புரைத்தெழுமெந் தேயதுவே போகு மாகிற்
பொருவில்சய மஃதுனக்குப் புகலுங் காலே.

## சிவஞான வள்ளலார்.

ஓதிய வசுண மாதி பொன்றொன்ற லழிபா நிற்குங்
காதினாற் றொக்கான் மூக்காற் கண்ணினா னாவா லிந்தச்
சாதிமா னுடர்க ளெல்லா மஞ்சினாற் சாகா நிற்பர்
போதமே விட்ட காலம் புலன்வழி போகா ரன்றே.
ஐம்பு லன்வழி யோடிமா னுடரெலா மழிவ
ரைம்பு லன்வழித் தாவிமே லமரரு மலைவா
ரைம்பு லன்வழி யடைத்தவன் யோகியே யன்றி
யைம்பு லன்வழி யடைத்தவ ருலகினில் யாரே.

## வேமந்த சிவயோகி.

காதானது சதா சத்தவடிவத்திற்றனே யிழுக்கின்றது; சர்ம மானது சதா சீதோஷ்ணங்களிலே யிழுக்கின்றது; நாவானது சட்ரசங்களுக் கிழுக்கின்றது; மூக்கானது சுகந்தநார்க்கந்தங்களுக் கிழுக்கின்றது; கண்ணானது பஞ்சவர்ண ரூபங்களிலே தன்னு

கின்றது. இந்த ஐந்துடன் கூடிய உடம்பின்பற் றொழித்துத் தன்னை யறிந்து சுகித்தல் தகுதியா மென்றுங் கூறியிருக்கிறார். இப்பிரமாணங்களாலும் இந்திரியங்களின் கொடுமை நன்குவிளங்கும். இந்திரியங்களின் கொரோங்களை நன்றாக வுணர்ந்தவர்கள் விஷயங்களைச் சுகமாக வெண்ணுவரோ? இப்பிரபஞ்சத்தில் ருண சேஷமும், சத்துரு சேஷமும் வைத்தல் கூடாதென்று பெரியார் பணித்திருப்பதனால், இந்த ஞானேந்திரியங்க ளென்னும் குலபாதக சத்துருக்களை நிர்மூலஞ்செய்வது நியாயமாம்; நிர்மூலஞ்செய்யாதுவிடின் உலகம் க்ஷேமமடையாது. ஆகையால் அவர்களைக் கொல்வதால் புண்ணியம் வருமேயன்றிச் சிறிதும் பாபம் வாராது என்று பலவாறாகத் தனது நியாயத்தைச் கூறி யடக்கமாக நின்றான். இப்படி தமன் வாதித்ததைக் கோர்ட்டார் மிகச் சந்தோஷத்தோடுகேட்டு இவன் மிகயோக்கியனென்று நிர்மாணித்து நீர் போகலாமென்றுகூறி, உபரதியை விசாரிக்க வாரம்பித்தனர்.



வாதிதரப்பு.

## 5—வது சாட்சி - உபரதியென்பவள் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சபதபம் விரத மாதிச் சாற்றுஞ்சட் கரும மீறு
யுபஜன்மந் தருவ தல்ல லொழித்திடா தொழிக்கு மந்த
விபுதனக் கபய முற்று மெய்மமையார் ஜட்ஜி முன்னர்
உபரதி முமுட்சுப் பக்க முரைத்திடுஞ் சாட்சி சொல்வாம்.

பி. பிரதிவாதி தரப்பு வகீல் எழுந்து நின்று கோர்ட்டார் சன்னிதானத்தில் உபரதியென்பாளை யழைத்துப் பிரமாணஞ்செய்வித்து உம்மாலன்றோ சகல கருமங்களுங் கெட்டொழிந்தன; அப்படிச்செய்யலாமா? அதுபெரும்பாவ மல்லவா? கர்மத்துரோகியென்று பேரெடுத்ததேனோ? கர்மத்தாலன்றோ சித்தி முத்திகளுண்டாகின்றன?

உ. (அந்தமாது கோரமூட புத்தியென்னும் பிரதிவாதி வகீலைப் பார்த்து) யாவர்க்கும் கருமத்தால் துக்கமும், கருமத்தியாகத்தால் சுகமும் உண்டாகின்றன. கருமத்தின் ஆரம்பத்திலும் மத்தியிலும் அந்தத்திலும் துக்கமேயுண்டாகின்றது. இது யாவர்க்

கும் அநுபவமாம். அங்ஙனமிருக்க, நான் கருமத்தைக்கெடுத்தது அதிசயமுமன்று, தோஷமுமன்று. கருமத்தால் முத்திபெற்றோ ரொருவருமில்லை. கர்மத்தால் முத்தியடைவது திண்ணமாயின், கரும பலன்களான சுவர்க்காதிபோகங்களை யநுபவித்துப் பிறகு பூமியில்வந்து ஜனன மெடுப்பதேன்? கருமமே முத்திப்பேற்றைத் தருவதாயின், அதை உபநிடதாதிகள் நிஷ்பிரயோசன மென்று கூறுமா? சுருதி யுத்தி யநுபவமில்லாத வசனம் சபைக் கேற்குமா?

## கைவல்யோபநிஷத்.

† "நகர்மணு நப்ரஜயா தநேந த்யாகேநைகே அமுர்தத்வ மாநசு:"

(இ-ள்). அமிர்தத்வமாகிய மோட்சம் காமங்களாலும், புத்திரர்களாலும் அளவிறந்த திரவிய தானங்களாலு முண்டாவதில்லை.

## பகவத் கீதை.

‡ - அநேக சித்த விப்ராந்தா மோகஜால ஸமாவ்ருதா:,
ப்ரஸக்தா காமபோகேசு பதந்தி நரகேசுசௌ."

(இ-ள்). சித்தப் பிராந்தியை யுடையவர்கள் காமியகருமாநுட்டானங்களாற் காலத்தைக் கழித்து நரகத்தை யடைகின்றனர்.

## சிவகீதை.

* - நகர்மணு மநுஷ்டாநை ஸ்தபஸாந தாநாபிவா,
கைவல்யம் லபதே மர்த்யா: கிந்து ஜ்ஞாநேந கேவலம்.

(இ-ள்). கைவல்லிய (மோட்ச) மானது கேவலம் ஞானத்தினாற் சித்தியாகுமேயன்றி, ஸ்நாநம் சந்தி, சபதபம், தாநாதிகளாற் சித்தியாது.

---

† 𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌨 𑌪𑍍𑌰𑌜𑌯𑌾 𑌧𑌨𑍇𑌨 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇𑌨𑍈𑌕𑍇 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵
𑌮𑌾𑌨𑌶𑍁𑌃

‡ 𑌅𑌨𑍇𑌕 𑌚𑌿𑌤𑍍𑌤 𑌵𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾 𑌮𑍋𑌹𑌜𑌾𑌲𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃।
𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑌾 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑍇𑌷𑍁 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌨𑌰𑌕𑍇𑌽𑌶𑍁𑌚𑍌

* 𑌨𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑍈𑌸𑍍𑌤𑌪𑌸𑌾 𑌨 𑌦𑌾𑌨𑌾𑌪𑌿 𑌵𑌾।
𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌃 𑌕𑌿𑌂𑌤𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌕𑍇𑌵𑌲𑌮𑍍

## விவேக சூடாமணி.

$ - நயோகேந நஸாங்க்யேந கர்மணாநோ நவித்யயா,
ப்ரஹ்மாத்மை கத்வ போதேந மோக்ஷஸ்ஸித்யதி நாந்யதா.

ஓங்கிய பரசி வைக்கிய முணர்ந்திடு மியோகத் தானுஞ்
சாங்கிய மதத்தி னானுஞ் சார்ந்திடு மியோகத் தானும்
வீங்கிய கன்மத்தானும் வேறுபா சனையி னானு
மோங்கிய முத்திப் பேற்றை யொன்றுவ தென்று மில்லை.

## ஞானவாசிஷ்டம்.

தவமகந் தீர்த்தஞ் சேவை யருச்சனை தான மாதி
வவமயக் கத்தா னீனுள் விலங்குபோ லவத்தா வாழ்வர்
பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரம போதங்
கவரறப் பற்றி யெல்லாக் காதலு நீக்கி நிற்பாய்.

## தாயுமான சுவாமிகள்.

பத்திநெறி நிலைநின்று நவகண்டபூமிப் பரப்பைவல மாகவந்தும், பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும் பசிதாக மின்றியெழுநா; மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை வன்பசித னக்கடைத்தும், மவுனத்தி ருந்துமுயர் மலைநுழைவு புக்கியும் மன்னுதச நாடி முற்றுஞ்; சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச் சோமவட் டத்தடைத்தும், சொல்லரிய வமுதுண்டு மற்பவுடற் கற்பகங் கோடாறு நிலை நிற்க வீறு; சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ சித்தாந்த முத்தி முதலே, சிரகிரிவிளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே சின்மயா நந்த குருவே.

## சிவஞானதீபம்.

சாத்திரம்புத் தகம்பூசை சமயமதந் தருக்கந் தந்திரமந் திரயோகந் தவவிரதஞ் சில, மேத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா மெப்பயனு முத்திவிலக் கெனவொருசொல் லதனால், தீர்த்தவன்மெய்த் தேசிகனு மவனருளாலகலாச் சித்தமல மறுத்துலகிற் றீமைநன்மை செயினும், வாய்த்தகதி ரவன்செயல்போ லிசைந்திசையா தொழுகும் வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மைநிலையனரே.

---

$ நயோகேந நஸாங்க்யேந கர்மணாநோ நவித்யயா
ப்ரஹ்மாத்மைகத்வ போதேந மோக்ஷஸ்ஸித்யதி நாந்யதா’

## சூத சங்கிதை.

கருமமே யநுட்டிப்போர் கண்ணிலா வொருவன் மற்றோர் கண்ணிலானை, வெருவிறணை யாக்கொடுசென் றெதிருறுகூபத் தழுந்த விழுதலேபோல், தருதுயர்மோகத்தாலே பிரவிருத்தியாய்ச் சமுசாரத்தில் வீழ்வார், மருவதஞன் ஞானமன்றிக் கருமத்தி னற்பந்த மாய்வுறுதே.

இப்பிரமாணங்களால் கருமம் அஞ்ஞானத்திற்கு விரோதமின்றியதாம்; ஞானத்திற்கு விரோதமா மென்பது விளங்கும். "ஞான மலது கதிகூடுமோ" என்றுபெரியார் பணித்தவாறு ஞானமே முத்திக்கேதுவா யிருத்தலின், அஞ்ஞான விருத்திக்கேதுவாய கர்மம் முத்திக்கேதுவாகாது. கிணற்றில் விழுந்து அதில் முளைத்திருக்கும் கோரைப்புல்லைப் பிடித்துக் கொண்டுதொங்குகிற புருடனொருவன்தான் மேலேயேறி வருமாறு ஒருதயாளுவானவன் விட்டகயிற்றினை யுறுதியாகப் பிடித்துக்கொண்டு அப்புல்லை விட்டுவிட்டால் மேலேவந்துவிடுவான்; அங்ஙனஞ் செய்யாதிருப்பானாயின், அவனொருபோதும் மேலே வரமாட்டானல்லவா? அதுபோல அஞ்ஞானமாகிய கிணற்றில் விழுந்து அதிலுற்பத்தியாயுள்ள கருமமென்னுங் கோரைப்புல்லை யுறுதியாய்ப் பற்றிக் கொண்டு ஜன்மாதி துவந்துவங்களை யநுபவித்துத்துன்புறுகின்றவன்தான் முத்தியடையுமாறு மைத்திரியாதி குணங்களுடைய தத்துவஞானி உபதேசித்த மெய்ஞ்ஞானமாகிய கயிற்றை யுறுதியாய்ப் பற்றிக்கொண்டு கருமத்தை விட்டுவிட்டால், முத்தியென்னும் நிலைக்குவந்து விடுவான்; அங்ஙனஞ் செய்யாதிருப்பானாயின், அவனொருபோதும் மோட்சமடைவ தில்லையாம். மேலும், அமாவாசையிருளுக்குவிரோதமில்லாத மேகாவரணம் அந்தகாரத்தைக் கெடுக்காமல் மேலும் மேலும் அவ்வந்தகாரத்தை யபிவிருத்தி செய்வதுபோல அஞ்ஞானத்திக்கு விரோத மில்லாத கருமசமுதாயமும் மயக்கத்தைக் கெடுக்காமல் மேலு மேலுமதனை யபிவிருத்தி செய்வதாகவிருத்தலால், கருமத்தி லொருபோதும் அஞ்ஞானம் போவதின்றாம். அஞ்ஞானத்தை யபிவிருத்தி செய்யும் கருமத்தினால் முத்தியுண்டா மென்பது மலடிமகன் அளவிறந்த வரக்கரைவென்று அமராபதியை யாளுகின்றானென்பது போலவாம்.

ஆத்மபோதம்.

† "அவிரோதி தயாகர்ம நாவித்யாம்வி நிவர்த்தயேத்,
வித்யா வித்யாம் நிகந்த்யேவ தேஜஸ் திமிரஸங்கவத்"

(இ-ள்). சேற்றைச்சேற்றினால் கழுவக்கூடாமை போலக் கருமசமூகத்தினால் அஞ்ஞானத்தைப் போக்குதல் கூடாது; ஆனால், சுயம் பிரகாச ஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதியா யிருத்தலின், அஃது இருட்கூட்டத்தைச் சூரியப்பிரகாசம் நாசஞ்செய்வதுபோல அஞ்ஞானத்தை நாசஞ் செய்யும்.

என்றநந்த சாஸ்திரங்கள் கூறுவது பொய்யாமோ? உபசாந்தியின் பொருட்டுச் சர்வகருமங்களையும்விட்டு மகாமவுன முற்றசைவறவிருக்கு மென்னைக் கருமத் துரோகியென்று பிறர் கூறுவது மயக்க புத்தியேயாம். இஃது ஐம்பெரும் பாதகங்களைக்கணக்கின்றிச் செய்பவன், நிர்மல சித்த முடையானைப் பார்த்து ஓபாபீ? என்றுவிளித்துப்பழித் துரைப்பதுபோலாம்,என்றுகூறியுன்முகப்பட்டு நின்ற வுபாரதியைக்கோர்ட்டார் நோக்கி, இவள் கார்க்கியோ அல்லது மைத்திரேயியோ என்றையுற்று அம்மாநீங்கள் போகலாமென்று கூறி, சிரத்தையை விசாரணை செய்ய வாரம்பித்தனர்.



வாதி தரப்பு.

ஆறாவது சாட்சி – சிரத்தை யென்பவள் விசாரணை.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பெருத்தசார் வாக ராதிப் பேசும்வா தங்க ணீங்கப்
பரத்துவத் தீர்ப்பளிக்கும் பதியெனுஞ் சட்ஜி முன்னர்த்
தெரித்தவே தாந்த நூலுந் தேசிகன் மொழியு நம்புஞ்
சிரத்தையும் வாதி பக்கஞ் செப்பிடுஞ் சாட்சி சொல்வாம்.

கோர மூடபுத்தி யென்னும் பிரதிவாதி வகீலெழுந்து, கோர்ட்டார் முன்பு சாட்சியாகவந்த சிரத்தையென்பவளைப் பிரமாணஞ்செய்வித்துக் கேட்கும் கேள்வியாவது;

பி. ஏ! பெண்மணங்காய்? நீ சகலசாஸ்திராபிப்பிராயங்களையுமறிந்த பெரியோர்களையும், சகலபந்து ஜனவாச்சல்யத்தையும்,

---

† அவிரோயிதயா கமு நாவிஷ்யாம் விநிவத்யெகு।
விஷ்யாவிஷ்யாம் நிஹந்த்யெவ தெஜஸ்திமிரஸஂவவகு॥

சர்வசாஸ்திராபி மானத்தையும், இயமநியம ஆசனப் பிராணயா மங்களையும், ஈசுரபக்தி முதலியசர்வ கர்மோபாசனைகளையும் விட்டுச் சோரநாயகனைத் தெய்வமாக நம்பிக்கெட்டவளன்றோ?

உ. (அதற்குச் சிரத்தை பிரதிவாதி வகில் முகத்தை நோக்கி) ஆத்மாநுபவங்களை விளக்கிவைக்கின்ற வேதாந்த சாஸ்திரங்களையும், ஆத்மநாதனுகிய சற்குரு சுவாமிகளையும் நம்பியநான் சோரநாயகனை நம்பிக்கெட்டவளாவனே? பளா! பளா! மிகுநன்றுயிருக்கின்றது; நான்கெட்டதொரு போதுமின்று; என்னைவிசுவாசித்தவர்க் கொருபோதுங் கேடுண்டாகாது. இங்கு வேதாந்த லட்சணத்தைச்சொல்லுகிறேன்; அதனைக் கவனித்துக்கேட்க வேண்டும். வேதமென்றும், சுருதியென்றும், ஆம் நாயமென்றும் ஒன்றேயாம் - இதற்குப்பிரமாணம் கீழ்வருவனவாம்.

† "விதந்த்யநேந தர்மாதர்மா விதிவேதஃ.,

(இ-ள்). தர்மாதர்மம், காமமோட்சங்களை விளக்கிவைப்பதனல் வேதம்.

‡ - "வேதய திதிவேதஃ." (இ-ள்). அறிவிக்கின்றமையால் வேதம்.,

* - "ச்ரூயதே தர்மாதர்மாதி கமந யேதி ச்ருதிஃ.,

(இ-ள்). தர்மாதர்ம்மங்கள் இதன் சகாயத்தால் கேட்கப்படுகின்றமையால் இது சுருதியாம்.

$ - "ச்ரூயத இதிச்ருதிஃ. (இ-ள்). கேட்கப்படுவதால் சுருதியாம்.

† - "ஆம் நாயதே பாரம்பர் யேணேத் யாம் நாயஃ.,

(இ-ள்). பரம் பரையாக அப்பியசிக்கப் படுகின்றமையால் இஃது ஆம் நாயமாம்.

பிரஹ்ம வித்தையை விரித்துரைக்கும் வேதத்தின் சிரோபாகம் உபநிடதமென்றும், வேதாந்தமென்றுஞ் சொல்லப்படும்.

---

† 𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍇𑌨 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌵𑌿𑌤𑌿 𑌵𑍇𑌦𑌃।

‡ 𑌵𑍇𑌦𑌯𑌤𑍀𑌤𑌿 𑌵𑍇𑌦𑌃

* 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌕𑌮𑌨𑍇𑌨𑍇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃

$ 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃

¶ 𑌆𑌮𑍍𑌨𑌾𑌯𑌤𑍇 𑌪𑌾𑌰𑌮𑍍𑌪𑌰𑍍𑌯𑍇𑌣𑍇𑌤𑍍𑌯𑌾𑌮𑍍𑌨𑌾𑌯𑌃

† - "ப்ரத்யக்ஷேணாநுமித்யாச யஸ்தூபாயோ நவித்யதே ஏதம் விதந்திவேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா"

(இ-ள்). பிரத்தியட்சத்தாலும், அநுமானத்தாலும் எவருமெளிதிலறிய முடியாதவஸ்துவைத் தெளிவாய்க்காட்டுஞ் சொன்மயக் கருவியாயுள்ளது வேதமாம். என்று பூர்வ மீமாஞ்சை வார்த்திகமாதி வகுத்தருளிய பட்டபாதர்கூறியிருக்கின்றார். ஜோதிஷ்டோமம்முதலியன சுவர்க்காதி சுகங்களைத்தரும், கள்குடித்தல் முதலியனபெரும்பாதகத்தையுண்டாக்குமென்றற்றொடக்கத்தூரகசியங்கள் பிரத்யட்ச அநுமானங்களால் அறியப்படா; ஆகவே, அவற்றைக்காட்டுவதுவேதமெனபதாயிற்று. அவ்வேதம் அவித்திபாவசபபட்ட ஜீவர்களின் அறிவாற்றலுக்கு எளிதிலெட்டாத விஷயங்களைத்தெரிவிக்கும் பெருங்கருவியாகநின்று ஞானத்தை எடுத்துப் புகட்டுவதாம்.

## வராகோபநிஷத்.

‡ - " ஆசார்ய சாஸ்திர மார்கேண ப்ரவிச்யா சுஸ்திரோபவ.

(இ-ள்). ஆசார்யன், சாஸ்திரம் என்னு மிந்தமார்க்கத்தில் சீக்கிரமாகப் பிரவேசித்து அதில் ஸ்திரமாகவிரு.

* - குருசாஸ்திர ப்ரமாணைஸ்து நிர்ணீதம் தாவதாசரஃ.,

(இ-ள்). குருவினாலும், சாஸ்திரங்களாலும் நிச்சயிக்கப்பட்டிருக்கிற விதியை யாசரி.

## முக்திகோபநிஷத்.

$ - நிஸ்வாச பூதாமெ விஷ்ணோர் வேதா ஜாதாஸ்ஸு விஸ்தராஃ., திலேஷு தைலவத் வேதே வேதாந்தஸ்ஸுப்ரதிஷ்டிதஃ',

---

† 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣𑌾𑌨𑍁𑌮𑌿𑌤𑍍𑌯𑌾 𑌵𑌾 𑌯𑌸𑍍𑌤𑍂𑌪𑌾𑌯𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌤𑌂 𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑌿 𑌵𑍇𑌦𑍇𑌨 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑍇𑌦𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌤𑌾"

‡ 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌯𑌾𑌶𑍁 𑌸𑍍𑌥𑌿𑌰𑍋 𑌭𑌵 ।

* 𑌗𑍁𑌰𑍁𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑍈𑌸𑍍𑌤𑍁 𑌨𑌿𑌰𑍍𑌣𑍀𑌤𑌂 𑌤𑌾𑌵𑌦𑌾𑌚𑌰𑌃

$ 𑌨𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌭𑍂𑌤𑌾𑌮𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌵𑍇𑌦𑌾 𑌜𑌾𑌤𑌾𑌸𑍍𑌸𑍁𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌾𑌃
𑌤𑌿𑌲𑍇𑌷𑍁 𑌤𑍈𑌲𑌵𑌦𑍍𑌵𑍇𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑍁𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃

'வேதோ நாராயணஸ்வாஸோத் ஸைப்பூர்தி சுச்ருப:,
வேதஸ்ய சேச்வராத் மத்வாத் தத்ர முஹ்யந்தி ஸூரய:,

(இ-ள்). ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வாசங்களால் சதுர்வேதங்களும் பிறந்தபடியால் அந்தவேதங்களும் நாராயண சொரூபமே. எள்ளினிடத்துத் தைலமிருப்பதுபோல அந்தச் சதுர் வேதங்களின் முடிவில் ப்ரஹ்மைக்கியஞானம் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தவேத சிரசே வேதாந்தங்களென்றும் உபநிடதங்களென்றுஞ் சொல்லப்படும்.

யோகசிகோபநிஷத்.

† - வேதசாஸ்திர புராணாநாம் ஸ்வயங்கர்த்தாபவிஷ்யதி'

(இ-ள்). வேதசாஸ்திரபுராணங்களுக்குக்கர்த்தா பரமாத்மாவேயாம்.

அந்தப்பரமாத்மாவினிடத்திருந்து சுவாசம் வெளிப்படுவதுபோலச் சதுர்வேதங்களும் வெளிப்பட்டன; அந்தப்பரமாத்மா விராட்புருஷனென்றும், ஹிரணிய கருப்பனென்றும், ஈசுரனென்றும், விஷ்ணுவென்றும், சிவனென்றும், ஆதிபுருஷனென்றும் அநந்த பெயர்களாற் சொல்லப்படுகின்றது. அந்தப்பரமாத்மாவருளிய வேதங்களை முக்கியப் பிரமாணங்களாகப்பெரியார் கொள்வர். வேதத்திற் கன்னியமாகச்சொல்வதெல்லாமிங்குப்பிரமாணங்களாகா.

சூதசங்கிதை.

வான்கருதியமறை வழியை விட்டுமேற்
றான்கருதுதல்சது ரன்று தன்கையில்
தேன்கமழ் திரளையைச் சிந்திச் சந்தியால்
கூன்கையிற் விழுந்துளி கொண்ட தன்மையே.

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்ற துணரார்
மருள்கொண்ட சமயங்கண் மதிகொண்ட கதியா
யருள்கொண்ட பரவின்ப மடைகின்ற வவர்போ
லிருள்கொண்ட பொருள் கண்ட வவரன்றி யிவரார்.

---

" வேதோ நாராயணஸ்வாஸோத் ஸைப்பூர்தி சுச்ருப:
வேதஸ்ய சேச்வராத் மத்வாத் தத்ர முஹ்யந்தி ஸூரய:"
வேதசாஸ்த்ர புராணாநாம் ஸ்வயங்கர்த்தா பவிஷ்யதி

காதுப்வா தியர்களாலே கலியுகத் துள்ளோர் கெட்டு
வேதமோ தியவாசெய்யார் மிருதிசொல் வதுவுஞ் செய்யார்.

தருமம தறிவில்பா சாண்டர் தங்கள்
மருவலார் வேதமா வாக்கி யபொருள்
கருதிடா ரதுகர மணியிற் காட்டிடின்
குருவையும் வழிபடார் துதர்க்க மேலார்.

என்றுள்ளவாற்றல் வேதத்திற்கு மாறுபட்டன பிரமாணமாவதில்லை யென்பதுநன்கு விளங்கும். ஜீவகாருண்ணியம், ஈசுர பத்தி, பாசவைராக்கியம், பிரமஞானமென்னும் இந்நான்கையுஞ் சொரூபமாகக்கொண்டு ஆறுநற்கல்வி யறிவடக்கமுதலியநற்குணங்களுடையவராய், ஜீவப்பிரஹ்மைக்கிய நிச்சயத்தால் ஆத்மஞானத்தில் நிலைத்தவராய், சிஷ்யனுடைய புத்தியிற் றோன்றும் ஜீவேசுரபேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடபேதம், ஈசுர ஜடபேதம் ஜடஜடபேதம் என்னும் ஐவகைப் பேதங்களையும், பேதப்பிராந்தி, கர்த்ருத்வ போக்த்ருத்வப் பிராந்தி, சங்கப்பிராந்தி, விகாரப்பிராந்தி, ஜகத்தின் சத்தியத்வப்பிராந்தி யென்னும் ஐவகைப் பிராந்தியையும், நாநாவித யுத்திகளால் நிராகரித்து, அத்வயமாயும், அவித்யாதி மலரகிதமாயு முள்ள ஆத்ம சொரூபத்தை ஐயந்திரிபின்றி உள்ளவாறு தரிசிப்பித்துச் சகல சம்சாரத்தையும் மித்தியாவடிவமாக்கி அறிவிற்கரைத்து அறிவாகாரமாகவே சிஷ்யனை நிலைக்கச் செய்பவரெவரோ அவரே குருவாவர்; ஞானமின்றிச் சடையைவளர்த்துக் கொண்டும், மொட்டையடித்துக்கொண்டும், விபூதி நாமம், உருத்திராக்கவடம், துளசிவடமுதலிய சின்னங்களைப் பிறர்பார்த்து மருளுமாறு தரித்துக் கொண்டும், அப்படியேதமது சிஷ்யர்களைச் செய்வித்துக் கொண்டிருப்பவர்கள் "வேட நெறிநில்லார் வேடம்பூண்டென்பயன்" என்று பெரியார்பணித்தவாறு கேவலம் வேடதாரிகளேயாவர்; அவர்கள் ஒருகாலத்தும் உண்மையான குருவாகமாட்டார். சம்சாரமாகிய முதலைவாயினின்று விடுவிக்கின்றவரும், தத்துவ போதனை செய்கின்றவருமா யுள்ளவரே குருவாவர். குருவென்னும் பதத்தில், கு - என்பதன் பொருளந்தகாரமாம், ரு - வென்பதன் பொருள் அதனை யொழிப்பதாம். சிஷ்யனுடைய அஞ்ஞானத்தை யொழிக்கும் திறமையற்றவர் குருப்பட்டம் விழைந்து பொருள் பறிக்கத் திரிதல் புலி பசுத்தோலைப் போர்த்துத் திரிதல் போலவாம்.

சிடர்களுடைய பேதபுத்தியைத் தீக்ஷாத்திரயஞ் செய்து சக்தி சாமர்த்தியங்களால் ஒழித்து அபேதபுத்தியை யுண்டு பண்ணி, ஸகஜாமநஸ்க சிவராஜ யோகசுக ஸமாதிவாயிலாக ஆத்மசாட்சாத் காரத்தை யுண்டுபண்ண, பரமாத்மாவே குருவாகவந் ததினால் குருவினிடத்து ஈசுவரனிடத்து வைக்கும் பக்தியினும் அதிக பக்திவைத்து அவரைவணங்கி அவரே சிவமெனக் கருதல் வேண்டும்.

யோகசிகோபநிஷத்.

† - குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு குருர்தேவஸ் ஸதாசிவ:
நகுரோரதிக கச்சித் த்ரிஷுலோகேஷு வித்யதே
திவ்யஞானோபதேஷ்டாரம் தேசிகம் பரமேச்வரம்
பூஜயேத் பரயா பக்த்யா தஸ்ய ஞான பலம்பவேத். ,

(இ-ள்). குருவே பிர்மா, குருவே விஷ்ணு, குருவே யெப்போதும் நாசமற்ற தேவன். இம்மூன்றுலகங்களிலும், குருவைக் காட்டிலும் சிரேஷ்டமொருவனுமில்லை. திவ்விய ஞானத்தை யுபதேசிக்கிறவராகியும், பரமேசுவரராகியு மிருக்கிற குருவை அதிபக்தியுடன் பூசிக்கவேண்டும், அப்படி பூசிக்கிறவனுக்கு ஞானமென்னும் பலனுண்டாகிறது

சூதசங்கிதை.

புகழுந் தலையாற் பரமவத் துவித புனித ஞானங் கொடுத்துத்
திகழுந் தெய்வச் சிவஞா னந் தெரிவிப் பவனே குருவாவா
னிகழும் பரிசில் லவனே சிவனென் றுணர்க்கு மெய்ம்மறையு
மகழு மலத்தா ரவன்பா மடைய ருமயலு மாமரே.

திருமந்திரம்

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே

† குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவஸ்ஸதாஶிவ:
ந குரோரதிக: கஶ்சித் த்ரிஷு லோகேஷு வித்யதே ⌊த:
திவ்யஜ்ஞாநோபதேஷ்டாரம் தேஶிகம் பரமேஶ்வரம்
பூஜயேத் பரயா பக்த்யா தஸ்ய ஜ்ஞாநபலம் பவேத்.

ஞானசாரம்.

தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
றானே குருவாகித் தன்னருளான் - மானிடர்க்கா
வின்னிலத்தே தோன்றுதலால் யார்க்குமவன் றாளிணையை
யுன்னுவதே சால வுறும்.

மெய்ம்மொழி.

பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோ ரதனைக்கூடிற்
செறிந்திடா வாறு போலத் தேகமுந் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததி னிற்பி னுங்கேள்
செறிந்திடா வாறு செய்யுந் தேசிகன் றேசி கன்றான்.

சூதசங்கிதை.

ஈச னுக்கப ராத மியற்றிடின்
மாசி றேசிக னெண்ணுபு மாற்றிடும்
பேசு தேசிகற் குப்பிழை செய்யினத்
தேசிக னன்றித் தீர்ப்பவ ரில்லையே.

என்றற் றொடக்கத்துப் பிரமாணங்களைச் சிறிதேனுங் கவனியாது வாழ்நாளை வீணாளாகக் கழிக்கும் மூடர்கள் அநாத்ம சாஸ்திரங்களையும், அநாத்ம சாஸ்திரஞர்களையும் ஆதரவாகப் பிடித்து, குடிலாங்கனைக(விபசாரிக)ள்நாழிகைக்கொரு நாயகனைக் காசுக்காசைப்பட்டுப் பிடிப்பதுபோலக்கடலலைப் போன்றுமாறுஞ் சித்தவிருத்தி யுடையவராய் மாயாபரவசர்களாய் நாழிகைக்கொருசாஸ்திரத்தையும், நாழிகைக்கொரு குருவையும் மாறிமாறிப் பிடித்து அவஸ்தைகளடைந்து, குருகாணிக்கை முதலியவற்றின் நிமித்தமாய் மனஸ்தாப மடைந்து, காடுகளில் மேயும் ஆடுகள் போன்று ஓரிடத்துந் திருப்தி யுறாது, பித்தம் பிடித்துத் திரிகின்றார்கள். அவர்களைக் கேட்குங் கேள்வியை என்னைக் கேட்பது தகாது. தாங்கள் யாருக்காக வகிலாக வந்தீரோ அவர்களே தாங்கள் வினவிய வினாக்களுக்குரியவர்கள். ஒதுக்குண்டலையுஞ் சுணங்கன் தன் ஹீனகாரியத்தை யெண்ணிப்பாராது, சிங்காசனத்தில் சக்ரவர்த்தியின் றொடை மீதுமகாவுந்நதமாக வீற்றிருக்கும் இராஜஸ்திரீயைப் பரிகாசஞ்செய்வது போலிருக்கிறது என்னைத்தாங்கள்பரிகாசஞ்செய்வதென்று கூறி, அந்தர்முகமாகவமைந்து நின்றான். கோர்ட்டார் சிரத்தை கூறியவற்றைக் கவனமாகக்கேட்டு நன்கு மதித்து சும்மா நீங்கள் போகலாமென்றுகூறி, சமாதானனை விசாரிக்கவாரம்பித்தனர்.



## வாதிதரப்பு.

## 7-வது சாட்சி-சமாதானன் விசாரணை.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அடைவுற வருளளிக்கு மாபலத் தரசன் முன்பு
விடையங்க ளகன்ற சித்தம் விட்சேப மடைந்தி டாது
தடைசெயும் விருத்தி தன்னைத் தனுவெனப் பெற்று வாழ்நன்
னடைகொள்ச மாதா னன்று னவின்றிடுஞ் சாட்சி சொல்வாம்.

கோர்ட்டார் சமுகத்தில் சாட்சியாகவந்தசமாதானனைகோர மூட புத்தி யென்னும் பிரதிவாதி வகீல் பிரமாணஞ் செய்வித்து,

பி. நீர் சதா ஸ்திரீபுமான்களுக்கு வரும் கோபாவேசங்களை மத்தியஸ்தர்கள் சமாதானஞ்செய்வது போன்று சித்தாகாரமான விருத்தியையுண்டாக்கி ஜீவனை ஏகாசமாதம்படிசெய்து வருகின்றீரல்லவா? இங்ஙனஞ்செய்வது குண்டுணியேயல்லாதமன்றோ?

உ---ஆம்; ஆம். அதுதவறன்று, தாங்கள் குண்டுணிவேலையா மென்றது தகுதியுடையதாகாது. பிரதிவாதிகள் தங்கள் தாய்மார் களையும், தங்கள் மருமகள் மார்களையும், தங்கள் மனைவிமார்களை யும், தங்கள் தங்கைமார்களையும், கண்டவருக்கெல்லாம் எப்போ துஞ்சேர்த்து ஜீவனஞ்செய்துவருவதை இந்தக்கோர்ட்டார்முன்பு சொல்ல எனக்குச் சமயம் வாய்த்தது. நானதைப்போன்றுநாளும் வயிற்றிலடித்துக்கொண்டு தக்கவிடத்தைப்பார்த்துக் கொண்டி ருந்தேன்; தக்கவிடமின்று சம்பவித்தமையின் சொல்லுகின்றேன். பிரதிவாதிகள் தங்கள் தாயாகிய அவித்தையைச் சுழுத்தியவஸ்தை யின்கண்பிராக்ஞனிடத்து அவனது சுகார்த்தமாகச்சேர்த்து வை ப்பதும், ஜாக்கிராவஸ்தையின்கண் தங்கள் மனைவியார்களாகிய இராகத்துவேஷாதிகளையும், குமாரத்திகளாகிய சுரோத்திரமுத லிய இந்திரியாதிகளையும், சத்தாதிவிஷயங்களிடத்திலும், விசுவனி டத்திலும், தமது சுகார்த்தமாகச்சேர்த்து வைப்பதும், சொப்பனா வஸ்தையின்கண் தங்கள் சகோதரிகளாகிய பன்மைவிருத்திகளைத்த மதுசுகார்த்தமாக ஆண்டுள்ள விஷயங்களோடு, தைசதனோடுஞ் சேர்த்துவைப்பதுமுலகறிந்த விஷயமேயாம். அவ்வாறு செய்வதா லன்றோ அவர்கள் ஜீவிக்கின்றார்கள். அவர்கள்பலவிதமாகச் செய் யும்துர்மார்க்கச் செயல்களைமறைத்து, என்னைத்தாங்கள் குண்டுணி

யென்றது குணமாமா? "தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின், என்குற்றமாகு மிறைக்கு" என்று நாயனார் கூறியுள்ளதைத் தாங்கள் கவனிக்கவேண்டும். சித்தவிருத்தியை சிதாநந்தாகாரமாக வடக்கும் நான் ஒருபோதும் குண்டுணியாகேன். சித்தவிருத்தியாகிய மணமகளை ஜீவனாகிய மணமகனுடன் சேர்த்து சொரூபாநுபவமென்னுஞ் சுகமநுபவிக்குமாறு சமாதானஞ்செய்வது துர்மார்க்கமாமா! மானமறப் பலரோடு தங்கள்மனைவி முதலியவர்களைப் புணர்வித்து மகிழ்வுறும் பிரதிவாதிகள் செய்கையன்றோ துர்மார்க்கமாகும்? எனது செய்கை நன்மை தருவதாமென்பது அறியீர்போலும்! இவ்விஷயம் கோட்டாருக்குத் தெரிந்திருந்த போதிலும் இச்சபையிலுள்ளவருக்குத் தெரியும்படி சில வெடுத்துக்கூறுகிறேன்.

விஷத்தை விஷத்தினாலும், அயத்தை அயத்தினாலும், அம்பை அம்பினாலும் கெடுப்பது போன்று அசுத்தமான சங்கற்பத்தைச் சுத்தமான சங்கற்பத்தாற் கெடுக்கவேண்டும். விடயவாசனை காரணமாகக் கடலிலெழு மலைபோலெழுவது, மனத்தினின்றெழுஞ் சங்கற்பத்தைவிவேகத்தால் அடிக்கடி கெடுத்துக்கொண்டே வருமிடத்து அசத்சங்கற்பம் நாளுக்குநாள் குறைந்து கொண்டு வரும். அவ்வாறு குறைந்து கொண்டு வருமிடத்து மனத்தின அசுத்தவாசனையெல்லாம் ஒழிந்துபோம். போகவே, சுத்தவாசனை மிகும், சுத்தவாசனை மிகுமிடத்துச் சாந்தவிருத்தி மேம்பட்டிருக்கும். சாந்த விருத்தியுள்ளமனம் போட்ட விடத்தே கிடக்கும் பொருள்போன்று நிறுத்தின விடத்தினின்று பிறழாதிருக்கும். சாந்தவிருத்தியுள்ளமனம் விஷயத்திலுவர்ப்புற்று நிற்றலின், அது நிற்குமிடம் ஆத்மாவேயாம். அசுத்தசங்கற்பம் ஆத்மாவைநோக்கி நின்றபோது பிணஞ்சுடுதடி யீற்றில் அனல்மயமாய் விடுதல்போன்று ஆத்மாகாரமாய் விடுதற்குச் சுத்த சங்கற்பமே காரணமாம். சுத்தசங்கற்பத்தாற் கெடுக்காதவிடத்து அசுத்தசங்கற்பங் கெடாதாகலின், சங்கற்பத்தைச் சங்கற்பத்தாற்றான் கெடுக்கவேண்டும் அவ்வாறு செய்தாற்றான் மேன்மையுமுண்டாகும். அம்மனம் ஆத்மாவில் இலயப்படுங் காலத்துக் "களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது, விளங்கியதன் மயமாகிய யபேதமாகி விகற்பமின்றி நிருவிகற்ப மாகுற்போல" ஏகரசமாய் விளங்கும். அவ்வாறு

விளங்குகின்ற விடத்தான் பாவனைநாசம்; அதனாற்றான் ஆத்மசாக்ஷாத்காரம் சித்திக்கும்; அதுசித்திக்கிறதனாற்றான் அவிசனையற்றறக் கெடுதல்வாயிலாக மோக்ஷங்கைகூடும். ஆதலால், சுத்தசங்கற்பம் அசுத்தசங்கற்பத்தின் கேட்டிற்குக் காரணமாயிருத்தலேயன்றி ஆத்மாவில் இலயப்படுதல் மூலமாகத் தன் கேட்டிற்குங் காரணகாரணமாயிருத்தலால், அதனால்யாதொருகெடுதியுமின்றாம். மேலு லயமுண்டாதற்கு சுத்த சங்கற்ப மொழியாதுபோனும், அசுத்தசங்கற்பம் முற்று மொழிந்த விடத்துச் சுத்தசங்கற்ப முண்டாதற்குக் காரணமின்மையின், அசுத்தசங்கற்பத்தின் ஒழிவே சுத்தசங்கற்பத்தினொழிவிற்குக் காரணமாயிருத்தலின், சங்கற்பத்தாற்றான் சங்கற்பத்தைக் கெடுக்கவேண்டுமென்க. சங்கற்பவடிவமாகிய மனத்தை நிஷ்களங்க ஞேயமயமாய் விளங்கும் அகண்டாகாரபரபரமத்தில் கரைந்து விடச்செய்வதுவே பரமபத மென்றும், சர்வதுக்கநிவிர்த்தியென்றும், பரமாநந்தப்பிராப்தியென்றும், மோக்ஷமென்றும், ஜீவபிரஹ்மைக்கியமென்றும் சொல்லப்படும்.

பைங்களோபநிஷத்,

† மநஸோஹ்யுந்மநீபாவே த்வைதம்நைவோபலப்யதே,
யதாயாத் யுன்மநீபாவஸ் ததாதத்பரமம்பதம்.,

(இ-ள்). மனதானது உன்மனீபாவம் (விருத்தியற்ற நிலைமையை) அடைந்தால், த்வைதம் ஒருபோதும் காணப்படுகிறதில்லை. எப்போது உன்மனீபாவம்வருகிறதோ அப்போது அதுவேதான் பரமபதம்.

(தியானபிந்தூபநிஷத்.)

* யந்மநஸ்த்ரிஜகத் ஸ்ருஷ்டிஸ்திதிவ்யஸந கர்மக்ருத்
தந்மநோவிலயம்யாதி தத்விஷ்ணோ: பரமம்பதம்.,

(இ-ள்), எந்தமனமே, மூன்றுலகத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி லயகாரியங்களைச் செய்கிறதோ அந்த மனம் லயித்துப்போனால்,

---

† 𑌮𑌨𑌸𑍋 𑌹𑍍𑌯𑍁𑌨𑍍𑌮𑌨𑍀𑌭𑌾𑌵𑍇 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌨𑍈𑌵𑍋𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ।
𑌯𑌦𑌾 𑌯𑌾𑌤𑍍𑌯𑍁𑌨𑍍𑌮𑌨𑍀𑌭𑌾𑌵𑌸𑍍𑌤𑌦𑌾 𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

* 𑌯𑌨𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌜𑌗𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌵𑍍𑌯𑌸𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍
𑌤𑌨𑍍𑌮𑌨𑍋 𑌵𑌿𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

அதுதான் விஷ்ணுவின் பரமபதம்.(வியாபகப்பிரஹ்மத்தினடைவாகிய மோக்ஷம்.)

## மண்டல பிராஹ்மணோபநிஷத்.

* பரமசாந்திம் ஸ்வீக்ருத்யமனः ப்ரசாந்த சூந்யம் பரமாத்மநி லீநம்பவதி! பயஸ்ரவாநந்தரம் தேநுஸ்தநக்ஷீரமிவ ஸர்வேந்த்ரிய வர்க்கே பரிநஷ்டே மநோநாசம்பவதி, ததேவாமநஸ்கம்.,,

(இ-ள்). சிரேஷ்டமான சாந்தியையடைந்த மனம், சலனமற்றதாய்ப் பரமாத்மாவினிடத்தில் லயமடைகிறது. கறந்தபிறகு பசுவின் முலைப்பால் நஷ்டமாவது போல் இந்திரிய கூட்டமெல்லாம் நஷ்டமானால் மனோநாச முண்டாகின்றது. இதுவே அமநஸ்காரம்.

## தேவி காலோத்திரம்.

நருத்தடங்கின் முத்திபது கையகலிற் கட்டாகும்
விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்
திருத்தருநல் லறிவாலே சித்தத்தைத் திறப்பாம
லருத்திபுட னிலைநிறுத்து மதுவரின் பயனுமால்.

## அத்வய தாரகோப நிஷத்.

‡ - குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பராகதிः
குசப்தஸ்த்வந்தகாரஸ்யாத் ருசப்தஸ் தந்நிரோதகः,,
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபி தீயதே.,,

(இ-ள்),குருவே பரப்பிரஹ்மம்; குருவே யடையத்தகுந்த சிரேஷ்டமான கதி; குருவென்னும் பதத்தில், கு-என்னுமெழுத்து அஞ்ஞானம் என்னும் அர்த்தமுடையது, ரு - என்னுமெழுத்து அதை விலக்குவதென்னு மர்த்தமுடையது. அஞ்ஞானமாகிய விருட்டைப் போக்குவதனாலவர் குருவென்று சொல்லப்படுகிறார்.

---

‡ 𑌪𑌰𑌮𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌲𑍀𑌨𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌪𑌯𑌸𑍍𑌰𑌵𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌧𑍇𑌨𑍁𑌸𑍍𑌤𑌨𑌕𑍍𑌷𑍀𑌰𑌮𑌿𑌵𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌰𑍍𑌗𑍇 𑌪𑌰𑌿𑌨𑌷𑍍𑌟𑍇 𑌮𑌨𑍋𑌨𑌾𑌶𑌂𑌭𑌵𑌤𑌿, 𑌤𑌦𑍇𑌵𑌾𑌮𑌨𑌸𑍍𑌕𑌮𑍍.

𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵𑌪𑌰𑌾𑌗𑌤𑌿𑌃
𑌗𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌰𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍋𑌧𑌕𑌃
𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌗𑍁𑌰𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇.

நிஷ்டாநுபூதி.

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே சரியை கடந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பரனும்
அலையு மனத்தை யகத்தடக்கு மவனே ஞானி யதிசூரன்.

தாயுமானவர்.

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெலாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லாற்கு வாயேன் பராபரமே.

ஞானவாசிட்டம்.

தன்னுடைய விவேகமெனும் பெருங்காற்றாற் சங்கற்ப முகிலைத் தள்ளி, மன்னுசாற் காலத்தின் வானம்போ னின்மலத்தை மருவா நிற்கு, முன்னுடைய சங்கற்ப மெனுமழுக்கை யுன்னாலே யுனக்கு மாற்றித், துன்னிமிகு தெளிவுற்றுப் பரமாநந் தக்கடலிற் றுளைந்து வாழ்வாய்.

பிரபுலிங்கலீலை.

கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
யெடுக்க வல்லது மிம்மன மென்றதை
யடக்க வல்லவ னைய பவக்கடல்
கடக்க வல்லவ னவன் கடிதரோ.

மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பினைத்துணை யின்றது பெற்றன னுயிற்
றனிச்சிவ மேயொரு தானெனன வாழ்வ
னினைத்து மறந்து நிலத்துழ லானே.

குறுந்திரட்டு.

உன்னையே யல்லா லொருதுணை யுளதோ வுனையொழிந் திறைகழ லடைந்தேன், பொன்னையே பெற்றும் பொதிந்திடக் கூறைப் பொதிந்திடப் பொறியிலார் மாலே, யென்னைநீ வந்திங் குடன்படத் தழுவி யெம்பிரான் றிருநடன் கழற்கே, மன்னுபே ரன்பே மருவுநன் னெஞ்சே வையகத் தரியதே தெமக்கே

என்றற் றொடக்கத்துப்பிரமாணங்களால் இது நன்கு விளங்கும். இனி விரித்துச்சொல்லவேண்டுவதில்லை. சர்வசக்தியுள்ள கோர்ட்

டார் இதைக் கவனித்துக் கருணை புரியவேண்டுமென் றுண்முக மாகி நின்றான். அந்த வசனங்களைக் கோர்ட்டார்கேட்டு, சிந்தித்து நோக்கி இவர் மிகப் பெரியவரா யிருக்கலாமென்று தீர்மானித் து நீர் போகலாமென்று கூறி, பிரதிவாதி வகீலை நோக்கி மற்றச் சாட்சிகளையும் விசாரியுமென்றார்.



வாதிதரப்பு.

## எட்டாவது சாட்சி - விசுவாசன் விசாரணை.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நிசியாமஞ் ஞான கன்ம நிகழுல கேழும் விட்டேச்
சுசியாமெய்ஞ் ஞான மென்று சொல்லுல கேழி லேறிச்
சசியாயெஞ் ஞான்று மோங்கித் தன்னிக ரற்று வாழும்
விசுவாசன் கோர்ட்டார் முன்பு விளம்பிய சாட்சி சொல்வாம்.

கோரமூட புத்தியென்னும் பிரதிவாதி வகீலெழுந்து கோர்ட் டார்முன் விசுவாசனை யழைத்துப் பிரமாணஞ் செய்வித்து,

பி - நீர் பிரபஞ்சத்தில் யாவருமெப்போதும் அனுபவித்து வருகின்ற பீஜ சாக்கிரம், சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப் பனம், சொப்பனம், சொப்பன ஜாக்கிரம், சுழுத்தி யென்னும், (அஞ்ஞான) சப்த பூமிகளினின்றும் நீங்கி யோகிகளும், ஜோகிகளு ம், சோம்பேறிச் சாமிகளுமாகிய பைத்தியக் காரர்கள் வசிக்கும், சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம் சத்தி, பதார்த்தாபாவனை, துரியமென்னும் அவாந்தர சப்தபூமிகளை நம் பிக்கெடுகின்றீரல்லவா? ஐயோ கையிலுள்ள பாயசத்தை யொழுக விட்டு முழங்கையில் வடிந்துவருகின்ற அதன் சிறுபாகத்தையுண் ண நாக்கை நீட்டி நீட்டி முயல்வது போலவன்றோ விருக்கின்றது உமது செய்கை! அனுபவத்திற்கு வாராதவிஷயங்களை நம்பிநீரேன் அதமனுதல் வேண்டும்! இப்படியுங் கெட்டுப்போவாருண்டா? இஃ தறிவீனமன்றோ? நீரெப்போது கரையேறுவீரோ? இந்தக்கோர்ட் டார் முன்வந்த பிறகும் நீர் கெடுவது சரியாமா? கோர்ட்டார் கூறுமாறு நடந்துகொள்ளும்.

உ - சாணியுண்ணும் புழுவிற்குச் சர்க்கரையின்சுவை யெப்படி தெரியும் என்பதற்கிணங்க, சற்சாஸ்திர விசாரமும், சற்சன சாங்

கத்தியமும், சற்குரு சேவையுமில்லாதவர்கள் மூடமாயும், துக்க வடிவமாயும், நரகதுல்லிய மாயுமுள்ள பீஜ சாக்கிர முதலிய பூமியில் வசிக்கின்றார்கள். இப்பூமி யேழனுள் பீஜசாக்கிர முதலியவாறும் கரும ஜன்னியமாம். சுழுத்தியென்னு மேழாம்பூமி அந்தப் பூமிகளுக்கு மூலமான அஞ்ஞானத்தை யுபாதியாகவுடைய ஆன்மா மாத்திரமிருக்கும் ஸ்தானமாம். அவ்வாறிருக்கு மவற்றைத் தாங்கள் மகா கௌரவமாகச் சிலாகிப்பது வியப்பாயிருக்கின்றது. அப்பூமிக ளதோகதியை யடைவிப்பனவாம். அவற்றின் சொரூபங்களை வெளிப்படையாகக்கூறுகின்றேன்; சித்த சாவதானமாய்க்கேட்டல் வேண்டும்.

## அஞ்ஞானபூமிகளின் லட்சணம்.

### மஹோப நிஷத்.

† "பீஜசாக்ரத் ததாஜாக்ரந் மஹாஜாக்ரத்ததைவச, ஜாக்ரத் ஸ்வப்நஸ்ததா ஸ்வப்நஃ ஸ்வப்நஜாக்ரத் ஸுஷுப்திகம், இதிஸப்த விதோமோஹஃ புநரேஷபரஸ்பரம்.,,

(இ-ள்). பீஜசாக்கிரம், ஜாக்கிரம், மகாசாக்கிரம், ஜாக்கிர சொப்நம், சொப்நம். சொப்ந ஜாக்கிரம், சுழுத்தியென்னும் இவ்வேழும் மோகபூமிகளாம். இவை, ஒன்றற்கொன்று காரணங்களா யிருக்கின்றன.

### கைவல்லிய நவநீதம்.

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல் வித் தாகும், இந்தவறி விறபண்டில் லாவகந்தை முளைபோலா மிது நனவாம், வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாநனவாம், நந்துமகங் கொடுநனவின் மனோராச்சி யஞ்செயலெ நனைக் கனவே.

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்பே ருடைய தாகும், பண்டுகனக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பது

---

† ஸீஜஜாக்ரத்தயா ஜாக்ரந்மஹாஜாக்ரத்தயைவ ச ।
ஜாக்ரத்ஸ்வப்நஸ்தயா ஸ்வப்நஃ ஸ்வப்நஜாக்ரத்ஸுஷுப்திகம் ॥
இதி ஸப்தவிதோ மோஹஃ புநரேஷ பரஸ்பரம் ।

சொப் பனநனுவாம். மண்டூமிருண் மூடுவது சுழுத்தியா மஞ்ஞான வகைகள் சொன்னோம்.

என்றுள்ள பிரமாணங்களின்படி அஞ்ஞான பூமிகளின் றன்மையை விளக்குகின்றேன்.

1 - வது பீஜசாக்கிரம்:—கீழேழுலகத்தி லொன்றாய், அதலமென்னும் பெயருடையதாய்,கீழ்வயிறிடமாய், சுவேதவர்ணமாய், திரிகுணாத்மகப் பிரகிருதியோடுகூடிய அகண்டசச்சிதாநந்தபரப்பிரஹ்மத்தினிடத்தெழுந்த அறிவு,பின் வருவனவற்றிற்குப் பீஜரூபமா யிருப்பதால், அது பீஜசாக்கிர மெனப்படும். இது ஞெப்திக்குநூதனவத்தை யென்றுஞ் சொல்லப்படும். அன்றியும், சிருஷ்டியினாரம்பத்தில் மாயையோடுகூடிய சேதனத்தில்நின்றெழுந்த ஆபாச சேதனமே பிரதமாவத்தையா யிருத்தலின் பீஜசாக்கிரமாம். இது தேகோத்பத்தியின் பின்னுண்டாய் விருத்தியாகா நிற்கும் சித்தஞ் ஜீவன்முதலியபெயர்கட்கும், அர்த்தங்கட்கும், அவற்றின் செயல்களுக்கும் காரணபூதமாய் நிற்றல் பற்றிப் பிரசித்தமாகப் பீஜசாக்கிரமென்று கூறப்படுகின்றது.

ஞானவாசிட்டம்.

சித்திலே நின்றோ ரறிவு பேரின்றிச் செறிமல மின்றிமேல் வந்து, வர்த்தியா நிற்குஞ் சித்த சீவாதி வருபெயர் செயல்களுக்கிடமாய், வித்துரு பமதாய் நின்றிடு மதனால் விதைநன வாமுதற்பதமே. என்பதிங் கறியத் தக்கதாம்.

2 - வது ஜாக்கிரம்:—கீழேழுலகத்தி லொன்றாய்,விதலமென்னும் பெயருடையதாய் பிருஷ்ட (புட்ட) பாகவிடமாய், கறுப்பு வர்ணமாய்ப் பீஜசாக்கிர அறிவில் யானெனதென்னும் அகமமதைகள், பிரபஞ்சாபி முகப்பட்டுச் சூட்சுமமாகவெழுவதே சாக்கிரமாம். இது நனவென்றுஞ் சொல்லப்படும்.

ஞானவாசிட்டம்.

இதுவென தெனப்பண் டிலாமையா ஞெய்தா யெழுந்துள வறுதியே நனவாம். என்பதிங் குணரத் தக்கதாம்.

3 - வது மகாசாக்கிரம்:—கீழேழுலகத்தி லொன்றாய், சுதலமென்னும் பெயருடையதாய், தொடையி லிருப்பதாய், பச்சை வர்ணமாய்,லோகவாசனை முதலியவற்றால் பிரவிருத்தியதிகரித்து,

பலவகைப்பட்ட விபரீத பாவனைகளால் அறிவினிடத்து அகமமதைகள் திடதரமாயுண்டாதலே மகா ஜாக்கிரமாம்.

ஞானவாசிட்டம்.

இதுதனை யொழிய விவனவ ஞனே விதுவது வெண்ணதென் றெண்ணு மிதுமுதற் பிறதொடர்ச்சியாய்ப் பலர்க்கு மிந்தநிச்சயம்பெரு நனவாம். என்பதிங்கு நோக்கத்தக்கதாம்.

4-வது சாக்கிர சொப்பனம்:—கீழேழுலகத்தி லொன்ருய், தராதல மென்னும் பெயருடையதாய், முழங்காலிடமாய், (இராக்கதர் பிறப்பதற்கிடமாய்) முன்னர் அறிந்துள்ள விடயத்தைப் பற்றியாகிலும் அறியாத விடயத்தைப் பற்றியாகிலும், அதனதன்மயமாக நின்று மனோராச்சியஞ்செய்தலே சாக்கிர சொப்பனமாம்.

ஞானவாசிட்டம்.

அறிந்துள தெனினு மறியலா தெனினு மழுந்துறத் தானது வாகிச், செறிந்துள நனவிற் சித்தராச் சியமே செய்வது நனக்கன வாகும். என்பதிங் கறிதற்பாலதாம்.

5-வது சொப்பனம்:—கீழேழுலகத்திலொன்ருய், மகாதல மென்னும் பெயருடையதா, கணைக்காலிடமாய், பருவதமயமாய், சாக்கிரதையு மறிவுமில்லாமல் க்ஷணகாலத்தில் அநேக விடயங்களைக் கண்டறிந்தன மென்றுசிந்திப்பதே சொப்பனமாம்.

ஞானவாசிட்டம்.

அற்பகா லத்திலனேகமாஞ் செயல்கண் டறிந்தன மெனுங் கனவழிந்து, முற்படு செயலை நினைவது கனவாம். என்பதிங்குணரற்பாலதாம்.

6-வது. சொப்பன சாக்கிரம்:—கீழேழுலகத்தி லொன்ருய் இரசாதலமென்னும் பெயருடையதாய்க் கணுக்காலி லிருப்பதாய், சொப்பனங்கண்டு மறந்த விஷயத்தை மீண்டுஞ் சிந்தித்து நினைப்பது சொப்பன ஜாக்கிரமாம். சொப்பனத்திற் கண்டபொருள் சொப்பனசாக்கிர மெனினு மொக்கும்.

ஞானவாசிட்டம்.

முந்துகண் டதனைநா ளகன்று பிற்படக் காணும் பொருள்களை மறந்து, பெரும்பொழு துணர்வுற நோக்கும். சொப்பன நன

வு போணன வுக்கே, தோன்றுமிச் செயல்களு ௗனவே என்பதிங் கறியத் தக்கதாம்.

7-வது சுழுத்தி:—கீழேழுலகத்திலொன்ருய், பாதாளலோக மென்னும் பெயருடையதாய், உள்ளங்காலி லிருப்பதாய், மேற் கூறிய ஆறவத்தைகளும் நீங்கி மேலநுபவிக்கத் தக்க சுபாசுபகர் மங்களின் சமஸ்கார மிருத்தற்கிடமாய் அஞ்ஞானவடிவ இருளால் மூடப்பட்டுச் சடமாயுள்ள அவத்தை சுழுத்தியாம்.

ஞானவாசிட்டம்.

அறுவகை யவத்தை யகற்றிய சீவ னடைந்துள வவத்தையி னியற்கை, யுறுசட மாகி மேல்வருந் துயர்கூ ருணர்வுள தாமிது சுழுத்தி. என்பதிங் குணரத் தக்கதாம்.

இந்தப் பூமிகளேழும் தம்மிடத்து வசிப்பவரை யதோகதி யடைவிப்பனவாகலின், அஞ்ஞானிகளாகிய பெத்தர்களே அதமங் களாகிய விந்தப்பூமிகளிற் சஞ்சரிப்பார்கள். இனி ஞான பூமிகளைக் கூறுகின்றேன்.

ஞானபூமிகளின் லட்சணம்.

மகோபநிஷத்.

‡ முக்திஸ்தஜ்ஞேய மித்யுக்தா பூமிகாஸப்த காத்பரம், ஜ்ஞாநபூமிஸ் ஸுபேச்சாக்யாப்ரதமாஸமுதாஹ்ருதா, விசாரணாத் விதியாது, த்ருதீயாதநுமாநஸி, ஸத்வாபத்திச் சதுர்திஸ் யாத்ததோஸம் ஸக்திநாமிகா, பதார்த்தபாவநா சஷ்டி ஸப்தமீ துர்யகாஸ்ம்ருதா, ஆசாமந்தஸ்திதா முக்திரஸ்யாம் பூயோ நசோசதி.

---

‡ 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑍇𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌭𑍂𑌮𑌿𑌕𑌾𑌸𑌪𑍍𑌤𑌕𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌭𑍂𑌮𑌿𑌶𑍍𑌶𑍁𑌭𑍇𑌚𑍍𑌛𑌾𑌖𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌾 ।
𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌤𑍁 𑌤𑍃𑌤𑍀𑌯𑌾𑌤𑌨𑍁𑌮𑌾𑌨𑌸𑌿 ।
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌪𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍀𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌤𑍋𑌸𑌂𑌸𑌕𑍍𑌤𑌿𑌨𑌾𑌮𑌿𑌕𑌾
𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌭𑌾𑌵𑌨𑌾 𑌷𑌷𑍍𑌠𑍀 𑌸𑌪𑍍𑌤𑌮𑍀𑌤𑍁𑌰𑍍𑌯𑌗𑌾𑌸𑍍𑌮𑍃𑌤𑌾 ।
𑌆𑌸𑌾𑌮𑌂 𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌂𑌭𑍂𑌯𑍋𑌨𑌶𑍋𑌚𑌤𑌿 ॥

என்று சுருதி கூறியவாறு சுபேச்சை, விசாரணை, தநுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமென ஞானபூமிகள் ஏழாம். அவற்றுள்

1-வது சுபேச்சை:—சுபேச்சைக்கிடம் நாபியாம். முற்பிறப்பிலாவது இப்பிறப்பிலாவது செய்துள்ளநிஷ்காம கருமோபாசனைகளால் முறையே பரிசுத்தமும், ஏகாக்கிரகமும் பொருந்திய சித்தமுடைய புருஷனுக்குச் சாதனசதுஷ்டய முண்டாய் ஆத்மாவையறியவேண்டுமென்றுண்டாகுந் தீவிரவிச்சையே சுபேச்சையாம். பூலோகத்தில் மனிதர் வாசஞ்செய்யு மிடமுமாம். இப்பூமியில் மந்தப் பிரக்ஞையும் அகங்காரமு மில்லையென்பார்.

ஞானவாசிட்டம்.

நவையுறுமோ கத்தோடு நாமடைவ தென்னே நல்லோராணன்றாலா னன்று ஞானச்,சுவைபெறுதா நிராசையினாலென்றுநாடல், சுபம் விரும்பலாகும். என்று கூறுவதின் கறிதற் பாலதாம்.

2-வது விசாரணை:—ஆன்மாவை யறியவேண்டு மென்னுந் தீவிரவிச்சையால் சற்குருவையடைந்து விதிப்படி வணங்கி அவர் வாயிலாகச் சீவப்பிரஹ்மங்களி னபேதத்தையுணர்த்தும் வேதாந்த வாக்கியங்களைக் கேட்டு அவ்வாக்கியங்களின் பொருள் நன்றுகமனதிலமையும் நிமித்தம் பலவிதயுக்திகளால் மநநஞ்செய்தல் விசாரணையாம். இதற்கிடம் வயிறு; உலகத்தில் புவர்லோகமுமாம். இவ்வுலகத்தில் யக்ஷ ராக்ஷஸ, கந்தர்வ, கின்னர, கிம்புருட, சித்தர், முனிவர்கள் வாசஞ்செய்வர்.

ஞானவாசிட்டம்.

இந்தச் சுபேச்சை முற்றிக், கவையறுநல் லோரியற்கையாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல்வேண்டும். என்று கூறுவதின் கறிதற்பாலதாம்.

3-வது தனுமானசி:—சொரூபசாட் சாத்காரத்தின்பொருட்டுச் சிரவணமநநவாயிலாக நிச்சயித்த பிரஹ்மான்மவைக்கிய அர்த்தத்தை யிடைவிடாது சிந்தித்தலாகிய நிதித்தியாசனத்தால் பகிர்முகமாகிய தூலமனத்திற்கு அந்தர்முக மென்னும் சூக்குமத்தன்மையுண்டாதல் தனுமானசியாம். இதற்கு மார்பு இருப்பிடமாம்; உலோகத்தில் சுவர்க்கலோகமுமாம். இதிற்றேவர்கள், வசுக்கள்,

உருத்திரர்கள், ஆதித்தர்கள் வாசஞ்செய்வார்கள். அன்றியுமிது சந்திரலோகத்திற்கும், பிதுர்லோகத்திற்கு மிடமாம்.

ஞானவாசிட்டம்.

இனையசுபம் விரும்பலொடு விசார மென்ற விரண்டுநிறை தனும்விடயத் திச்சை மாற்றி, நினைவுகுவி வதுசித்தம் சிறுகலாகும். என்று கூறுவதிங்கறிதற்பாலாம். இப்பூமிகள்மூன்றுஞ் சாக்கிராவத்தையாம்; புநர்ஜந்மவேதுவாம்.

4-வது சத்துவாபத்தி:—சிரவண மனன நிதித்தியாசனங்களால் ஐயந்திரிபின்றிச் சொரூபசாட்சாத் காரமாகிய நிருவிகற்பஸ்திதி யுண்டாவதுபற்றிச் சித்தத்தில் சொரூபசத்தையி னடைவுண்டாதல் சத்துவாபத்தியாம். இதற்கிடங்கழுத்து, இதுவே மகாலோகமாம். இங்குப்பிருகுமுதலியவர்களும் வசிப்பவர். மேற்கூறிய மூன்று பூமிகளின் அப்பியாசத்தினுல் மனம் சங்கல்ப ரகிதமாய் இந்திரிய விஷய வியாபாரங்களற்றுப் பரப்பிரஹ்மநிட்டையைப்பெற்றிருக்கு மிப்பூமியில் உலகம் சொப்பனம்போலக்காணப்படுதலின், இது சொப்பனுவத்தையாம். இவ்வநுபவ முடையவன் பிரமவித்தாவன். பிரம்மவித்து பிரஹ்மத்தை (தானுக) அறிந்தவன்.

5-வது அசம்சத்தி:—நிருவிகற்பசமாதி யப்பியாசத்தின் பரிபக்குவத்தினுல் உடம்பினிடத்து எவ்வாற்ருனும், யானெனதென்னும் பற்ருெழிந்து ஒன்றினும் ஆசக்தியுண்டாகாதிருத்தல் அசம்சத்தியாம். அசம்சத்தி-சம்பந்தமின்மை, இதற்கிடம் முகமாம். இதுவே ஜனர்லோகமாம். இங்குச் சனகாதிகள் வசிப்பர்; மேல் நான்கு பூமிகளின் அப்பியாசத்தினுல் விஷயசங்கற்ப திரிகுண ரகிதமாயும் சுத்த சத்துவப்பிரதானமாயுமுள்ள பிரமநிஷ்டை ஸ்திரமாயிருக்கும். இது சுழுத்தியவஸ்தையாம். இந்த நிலையிலிருப்பவன் பிரமவித்வரனுவன்.

ஞானவாசிட்டம்.

சிறக்குஞ் சற்பா வந்தானே சேட மாக நின்றிடுவர், பறக்குஞ் சித்த மிறத்தலினுற் படர்ந்த விகற்ப மெலாந்தோன்ரு, உறக்குஞ் சுழுத்திப் பதமென்ன வுரைக்கு மைந்தாம் பூமியிற்போய், நிறக்கும் விசேட மனைத்துமற நிற்ப னென்ரு நிலமட்டில்.

## ஞானவாசிட்டம்.

இருமை யென்னு மிருள்போயுள் ளொளியா நின்ற பேருணர்வோ, னருமை யான சுழுத்திநிலை யாகி நிற்ப னனவரதம், பொருளி னுண்மைக் குடனிற்பன் புறத்திற் றொழிலிற் புரிந்தேயு, மொருமை யுபசாந் தத்தாலே யுறக்க மிருந்தோன் போற்றெரிவன். என்று கூறுவதினின் டறிதற்பாலதாம்.

6-வது பதார்த்தாபாவனை:—நிருவிகற்பசமாதி யப்பியாசத்தின் முதிர்ச்சியால் தேகாதி சகலபதார்த்தங்களும் அதிஷ்டான பிரஹ்மவடிவமாகத் தோற்றுதலால், எப்பதார்த்தத்தின் அபாவமுண்டாகின்றதோ அது பதார்த்தாபாவனையாம். இதற்கிடம் புருவமையமாம்; தபோலோகமுமாம். இதில் வைராக்கியமுடையோர் வசிப்பர். இவர்களே பிரஹ்மாவின்மானசபுத்திரர்களாவர். மேற்கூறிய ஐந்து பூமிகளின் அப்பியாசத்தினால் அந்தர்பகிர்மத்திய திருசியங்களற்றுச் சர்வவாசனையும் க்ஷயமாய், அந்நியமின்றியாவுந்தானேயாய் விளங்கும் இது துரியமாம். இந்த நிலையிலிருப்பவர் பிரஹ்மவித்வரியரெனவர்.

## ஞானவாசிட்டம்.

அழுந்து துரிய மெனுநாமத் தாறாம் பூமி யடைந்தொழுங்கி
னெழுந்து பலவா தனையிலனா யிப்பூ மியிலே பரிசயிப்ப
னுழைந்து நானென் பதுமென்ற தறவு முளது மில்லாதுங்
கழிந்து வெறிதே நினைவிலனாய்க் காணு னிருமை யொருமைகளை.

செறியு முடிச்சு மையமும் போய்ச் சீவன் முத்த சுபாவத்தால், வெறிது விடன் றியும்வீடு விளங்கா வியத்தின் விளக்கொப்பான், பிறிவில் விண்ணில் வெறுங்கடம்போற் பிறிது புறனுட் சூனியமா, யெறியுங் கடலி னிறைகடம்போ லெங்கும் புறனுண் ணிறைந்திருப்பன். என்று கூறுவதின் குணரத்தக்கதாம்.

7-வது துரியம்:—ஞாதுரு ஞான ஞேயமென்னுந் திரிபுடியுள்ள நான்காம்பூமி, ஐந்தாம்பூமியைப்போன்று பாவவடிவமாகவும் ஆறும்பூமியைப்போன்று அபாவவடிவமாகவும் தோன்றுது, தன்னாலும் பிறராலும் எழுதலில்லாத சொரூபத்தில் நிலைத்தமனதின் நிலையே துரியமாம். இதற்கிடம் கபாலமாம். இது சத்திய

லோகமுமாம். இங்குச்சர்வலோகங்களு மிருக்கின்றன. மேற்கூறிய அப்பியாசமுதிர்ச்சியால் சகலமுந்தன் சொரூபமாம்; அகண்ட சச்சிதாநந்த பரப்பிரஹ்மந்தானேயாம். இதனைத் துரியாதீத மென்றும், விதேகமுத்தியென்றும் சொல்வதுண்டு. இந்நிலையிலிருப்பவன் பிரஹ்மவித் வரிஷ்டனாவன். இவ்வேழுபூமிகளுள் முதல்மூன்று பூமியுந்தத்துவஞானத்திற்குச் சாதனமாம்; நான்காவது பூமி தத்துவஞானவடிவமா யிருத்தலின், ஜீவன்முத்தி விதேக முத்திகளுக்குச் சாதனமாம்; ஐந்தாவது ஆறாவது ஏழாவதுபூமிகள்ஜீவன்முத்தியின விலக்ஷண ஆநந்தத்திற்குச் சாதனமாம். இங்குக்கூறிய பூமி யேழனுள்முதல் மூன்று பூமியிலும் வசிப்பவன் முமுட்சுவாவன்; நான்காம்பூமியில் வசிப்பவன்பிரஹ்மவித்தாவன்; ஐந்தாம் பூமியில் வசிப்பவன பிரஹ்மவித்வரனாவன்; ஆறும்பூமியில் வசிப்பவன் பிரஹ்மவித்வரியானவன்; ஏழாம்பூமியில் வசிப்பவன் பிரஹ்மவித்வரிட்டனாவன். இவ்வேழுபூமியும் ஒன்றற் கொன்று அதிசயமாக விளங்குவனவாம்.

ஞானவாசிட்டம்.

நிறைந்தவிவை யாருலும் பேதம் போக்கி நிலைபெறுதற் சுபாவத்தே நிற்ற றனே, மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகு மாசறுசீ வன்முத்தர் வழியீ தாகும்.

சொன்னதன்மே லுடலிறந்த முத்தர் மேவுந் துரியாதீ தப் பதமாந் துரியச் செல்வர, தன்னுணர்வாற் றனையறிந்த பெருமை சான்ற தலைவனுலையதலுறு தன்மை யாகு,மன்னியவிப்பதமடைந் த சீவன்முத்தா மகிழ்ச்சிமருக் கத்தழுந்தார் மரபி னலே,யன்னி யர்சொல் வழிதுயில்விட் டெழுந்தார்போல வடுத்தனசெய் குவர் செய்யா ராகி வாழ்வார்.

இஞ்ஞான பதமேழு மிகவும்புந்தி யெய்தினார்க்கல் லதுதோன்று விவற்றை யெய்தி, லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகியதேகியெனினும்முத்த னைய மில்லை, மெய்ஞ்ஞான மென்பதுதன் மனத்தின் கட்டு விடுதலிது பெறின்துவே வீடு பேறும், பொய்ஞ் ஞானங் கானலினீர் முதலா மோகம் பொய்யெனப்போ மடமையும்பொய் யென்னிற் போகும்.

தனையறியு நிட்டையுளோர்க் கெய்தலாகுந் தத்துவபூ மிகளறிந்த தலைமைமேலோர், நினையவுந்தா முவுமுரியார் பொறிக

ளென்னு நெடும்பகைவென் றோரழியா நிலையினின்றோர், துணை தருபல் லுயிரிறைஞ்ச மேலாய் வாழுஞ் சுரேந்திரரு நரேந்திரருந் துரும்பாய்த் தோன்று,மனையபெரும் பதம்பெற்றோ ரவரே யாரு மல்லதோர் பவக்கடலி லமிழ்ந்தா நிற்போர்.

## கைவல்லிய நவநீதம்.

சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சன்ம
பாவன மாகு மென்று பழமறை முழங்கு மிப்பால்
மேவருஞ் சீவன் முத்தர் விதேகமுந் தியுநீ கேளாய்.

எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி லேயுராம் பூமியிலிருந்தா னே, லவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரனுபவ சுகபோதம், விவகா ரதிர்சய மிதுவே யனுபவ மெனமுன் சொல் லிய விவகாரி,யுவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிக ளென் முடிமேலே.

என்றிவ்வா றளவிறந்த பிரமாணங்களால் புகழப்படும் ஞானபூமிகளேழும் ஒன்றற்கொன்று கோரசம்சார துக்கார்ணவ மக்கின ஜனங்களை மேலுக்குத் தூக்கி யெடுத்துக் காப்பாற்றுஞ் சாமர்த்திய முடையனவாம் அங்ஙனமாக ஊர்த்துவகதியை யடைவிக்கும் ஞானபூமி யெங்கே? அதோகதியை யடைவிக் கும் துர்ச்சேட்டை சுபாவமாகிய அஞ்ஞான பூமியெங்கே? இவற்றின் தாரதம்மியங்களை யிந்தக் கோர்ட்டிற்கு வந்திருக்கும் விவேகிக ளறிந்தே யிருப்பார்கள். இப்படி யிருக்க, பிரதிகட்சி வகீல் சிறிதேனும் முன்பின் சிந்தித்துப்பாராது அஞ்ஞான பூமிகளைச் சிலாகித்தது தகுதியுடையதன்று. கோர்ட்டார் இவ் விவாதங்களைத் தீர்க்காலோசனைசெய்து நிர்ப்பளிக்க வேண்டு மென்று சொல்லி மவுனமாயிருந்தான். சர்வஞ்ஞான சற்குருப் பிரபு சாட்சிகளின் வாதங்களை நன்றாயோசித்து விசுவாசன் கூறி யது சுருதியுக்தி யனுபவமுடையதென்று நிர்மாணித்து, விசுவா சனைநோக்கி நீபோகலாமென்று கூறி, இனிச் சாட்சிவிசாரணை யநாவசியகமாம். வகீல்களிரங்கி செய்யலாமென்றுஆக்ஞாபித்தார். அங்ஙனமவர்க ளிரங்கி செய்யவாரம்பித்தனர்.



## கோரமூடபுத்தி யென்னும்
## பிரதிவாதிவகீல் செய்யுமீரங்கி.
### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்னுடைச் சாட்சி யாலு மியம்பிய சுருதி யுக்தி
மன்னநு பவங்க ளாலும் வழக்கினைக் கெலித்தே னென்று
மன்னவன் முன்ன நின்று மகிழ்கோர மூட புத்தி
யென்னும்வக் கீலீ ரங்கி யியம்புதல் சொல்ல லுற்றும்.

தான்பிடித்த முயலுக்கு மூன்றேகாலென்று சாதிக்குரியலுடைய கோரமூடபுத்தி யென்னும் பிரதிவாதி வகீலெழுந்து, அசலபரப்பிரஹ்ம சொரூபராயெழுந்தருளியிருக்கும் கோர்ட்டார் முன் நின்று நமஸ்கரித்து, என்னுடைய சாட்சிகளாலும், ரிகார்ட்டுக்களாலும், அவர்களியம்பிய சுருதி யுக்தி யநுபவ வசனங்களாலும், வாதிவகீல் வாதித்த ஈரங்கி வசனங்களாலும், எங்கள் பக்கமே ருஜுவாயிருத்தலால், வாதிகொண்டுவந்த வழக்கைத் தள்ள, உபநிடதமாதிதஸ்தாவேஜுகளை நிக்ரகித்து, அவற்றின் பேதங்களையும் வாதி சாட்சிகளின் பேதங்களையும் குறித்து விளங்கும்படி மனுவுசெய்து கொள்வது யாதெனின்,

வாதிதரப்பு சாசனங்களாகிய சுருதிகள் முதலில் கருமாநுஷ்டானத்தால் ஈச்சுர கிருபையுண்டாகு மென்றும், அதனால் சித்தசுத்தியுண்டாகுமென்றும், அதனால் நித்தியாநித்ய வஸ்து விவேக முண்டாகுமென்றும், அதனால் சாந்த சமதமாதிசட்குணஐச்வரியங்க ளுண்டாகுமென்றும், அவற்றால்முமுட்சுத்வம்லபிக்குமென்றும், அதனால் சற்குருதரிசனமும், சதுர்விதசுச்ரூஷைகளும், சிரவண மநநநிதித்யாசன சமாதிசாதனங்களு முண்டாகுமென்றும், அதற்குமேல் சற்குரு கடாட்ச முண்டாகுமென்றும், இவையன்றிச் சாதனாந்தரங்க ளொவ்வையுமில்லையென்றும், ஓரிடத்தில் ஆத்மா ஏகமென்றும், மற்றோரிடத்தில் பலவென்றும்,ஓரிடத்தில் பந்தமோட்சங்களுண்டென்றும், மற்றோரிடத்தில் பந்தமோட்சங்களில்லையென்றும், இப்படி பலவிதமாகப் பித்தங்கொண்டவனைப்போல உளறுகின்றன. பந்தமோட்சங்களுக்கு ஆத்மா விலட்சணமாயிருத்தலால் பந்த நிவிர்த்தியாகிய மோட்சத்தைப்பற்றி மேற்கூறிய பிரயாசைகளொவ்வையும் வேண்டுவதில்லையே. ஆத்மாவுக்குப் பந்தம்யதார்த்தமாகவிருக்கின்றதெ

ணின், அது காக்கையின் கறுப்புப்போன்று ஒரு காலத்தும் போவதன்றாம். போகத்தகாததைப் போக்கமுயல்வது அறியாமையின் முதிர்ச்சியாம். இவ்வாறநந்த விரோதங்களிருக்கின்றன. ஆதலால், வாதியின் பிரியாதைத்தள்ளிவிட்டு எப்போதும் போலப் பிரதிவாதிகளின் அநுபவப் பிரகாரம் வித்தியாசமில்லாது பாமரன் கருமிமூடபக்தனென்பவர்களுக்குக் கீழ்க்கோர்ட்டார்செய்ததீர்ப்பை யங்கீகரித்து இந்தக் கோர்ட்டாருந் தீர்ப்புச் செய்வது சுலபமாம். அவ்வாறேயிந்த மேல் கோர்ட்டாருந்தீர்ப்பளிக்கப் பிரார்த்திக்கின்றோம். இதற்குமேலப்பீலிருந்தால் அவர்கள் ஆனவரையில் பார்ப்பார்; இந்த வாதிகளை லேசாகவிடார். இதற்குமே லப்பீலில்லாமையால் இவர்கள் பக்கம் தீர்ப்பளிக்கப் பிரார்த்திக்கின்றேனென்று பிரதிவாதிவகீல் கூறிநின்ற மாத்திரத்தில், வாதிவகீலெழுந்து செய்யு மீரங்கி வருமாறு:—

## வாதிவகீல் செய்யுமீரங்கி.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீரிலகு பரமார்த்த நியாயத் தீர்ப்புச் செய்திலகுஞ் சற்குருவாஞ் சட்ஜி முன்னர், தாரிலகு முமுட்சென்னும் வாதி பக்கல் சாட்சிகளுஞ் சுருதியுக்தி யநுப வத்தா, னேரிலகு ருசுவாயிங் குள்ள தென்றே யெழிற்சூக்ம கிராகியசாத் வீக புத்திப், பேரிலகு வகீலவரு மெழுந்திரங்கி பேசியதை யுலகறியப் பிறங்கச் சொல்வாம்.

ஸ்ரீமத் பரமார்த்த நியாயத்தீர்ப்புக் கோர்ட்டாராய், அசல பரப்பிரஹ்ம சொரூபாபரோக்ஷ சாக்ஷாத்கார சற்குருப்ரபு சக்ரவர்த்தியாய் விளங்குஞ் சட்ஜி அவர்கள் திவ்யசமுகத்தில் பிரதிவாதிகள் ரிகார்ட்டுகளையும், அவர்களின் சாட்சிகளையும், பிரதிவாதி வகீலவர்கள் கிராசுகளென்னுந் தருக்கப் பிரசனைகளையும் கோர்ட்டாரவர்கள் பார்த்தும், கேட்டும் விசாரித்தவளவில் அவை சுத்தப் பொய்யாய்ப் போயின. எங்கள் தரப்புச் சாட்சிகளாலும், ரிகார்ட்டுகளாகிய உபநிடதாதிப் பிரமாணங்களாலும் ருசுவாயிருக்கும் விஷயங்கள் கோர்ட்டாருக்குப் பூரணமாய்த்தெரியும். இன்னமும் பிரதிவாதிவகீல் பயமற்று எதிர்வாதஞ் செய்வதை நோக்குமிடத்து அஃது இளங்கன்று பயமறியாது துள்ளிக்குதிப்பதுபோன் றிருக்கின்றது. பிரதிவாதி

களுக்காதார மில்லாதிருப்பதை யறியாதவராய் அவர்களது வகில் தைரியமாகப் பேசுகின்றதைக் குறித்து இச்சபையிலுள்ளவருடன் யானும் பேராச்சர்ய மடைகின்றனன். தருமதேவதை சொரூபமாகவிளங்குங் கோர்ட்டாரவர்கள் ஏழைகளின்மீது தயவு செய்து எனது ஈரங்கிவசனங்களைக் கேட்டுத் தீர்ப்பு சொல்லும் வரையிலிந்தப் பிரதிவாதிகள் சுழுத்தி யென்னுங் காட்டிலும், மூர்ச்சையென்னுங் குகையிலும் ஓடி ஒளிந்துக்கொள்ளா வண்ணம் அவர்கட்குப் பதுமாசனமுதலிய விலங்குகளைக் காலிற்பூட்டி, சின்முத்திரையென்னும் விலங்கைக் கையிற்பூட்டி, நாசாக்கிர திருஷ்டியென்னும் பாதுகாவலில்வைக்கும்படி அருள்புரியவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்குக் கோர்ட்டார் தீர்மானத்தை யெதிர்பார்க்க வேண்டுமேயன்றி இப்போது தாங்களிவ்வாறு கேட்பது கூடாதென்று கூற, பிறகு வாதிவகில சூட்சுமக்கிராகிய சாத்வீகாம்சபுத்தி கோர்ட்டாருக்கு நமஸ்கரித்துச்சொல்லத் தொடங்கினார்.

கேவல பரமாத்ம சொரூபமாகிய அகம்பதலக்ஷியார்த்தத்தில் அஞ்ஞானம், விட்சேபம்; ஆவரணம் என்பனவும், வேறெந்த விதமான சங்கல்பங்களும் காலதந்திரயத்திலுமில்லை. காலத்திரயத்திலு மில்லாதவை போவதெப்படியோ? இருந்தாலன்றோ போம். வியவகாரத்தின்கண் தேகமே தானாய்க் கருதியிருக்குங்காலத்தில் சொப்பன வுலகம் போன்று சகத்திருக்கின்றது. அதில் சீவர்களிருக்கின்றார்கள், ஈசுவர னிருக்கின்றா னென்னும் வியவகாரம் நிகழ்கின்றது. சகஜீவபரமென்னு மூன்றுந் தன்னை யுள்ளவாறறியாக்காலத்திருப்பனவாம். அவை தன்னில் விழித்தபோது தமக்கென வடிவமின்றி யொழிந்துபோம். சகஜீவபரம் பாரமார்த்திகப் பொருளென்னும் பிராந்தி நீங்குதற் பொருட்டுச்

சுருதிஸ்மிருதிகள்

நிஷ்காமகருமாநுஷ்டானத்தினால் ஈசுரகிருபை கிடைக்குமென்றும், அதனால் சித்தசுத்தி யுண்டாகுமென்றும, அதனால் நித்தியாநித்திய வத்துவிவேகாதி சாதன சதுஷ்டய சம்பத்துண்டாகுமென்றும், பூரணமாக அந்தச் சாதன சதுஷ்டயத்தையுடையவனே அதிகாரியாமென்றும், அவ்வதிகாரியே தாபத்திரய துக்கத்தினாற் தபிக்கப்பட்டவனாய்ச் சிவசொரூபமாகிய தேசிகரிடஞ்சென்று சம்சாரதாபத்தைநீக்கப்பிரார்த்திக்க வேண்டுமென்

றும், குருவான் அன்போடு உன்னை நீயறிவையாகில் உனக்கொரு கேடுமில்லை தன்னை யறியாமையினால் ஜனனமரணாதிப் பிரவாகம் தொன்றுதொட்டுவருகின்றது; அதனை அத்தியாரோப அபவாதயுக்தியினாற் கெடுத்து முத்திபடைதல் வேண்டும்; சிதாத்ம சொரூபமாகிய தன்னிலிருந்து தன்னை மறைக்கும் அஞ்ஞானம் முக்குணமுடையதாம்; அம்மூன்றனுள் சத்துவத்திற் சேர்ந்த பிரஹ்மம் ஈசுவரனும்; இரஜோகுணத்திற் சேர்ந்த பிரஹ்மம் ஜீவனும்; தமோகுண சகிதப் பிரஹ்மம் ஆவரண விட்சேபமாம்; ஆவரணத்தால் ஆத்மாநாத்மாக்களின் பேதந் தெரிவதில்லை; மறைப்பது ஆவரணமாம்; தோற்றுவிப்பது விட்சேபமாம்; முக்குணங்களை யற்பமாகவுடைய விட்சேபத்திலிருந்து பஞ்சபூதங்களுண்டாயின; அவை சூக்குமபூதமாம்; அந்தச் சூக்குமபூதங்களிலிருந்து சத்துவகுணத்தின் சமஷ்டிவியஷ்டிகளினால் அந்தக்கரணமும் ஞானேந்திரியங்களுமுண்டாயின; இரஜோகுணத்தின் வியஷ்டி சமஷ்டிகளினாற் கருமேந்திரியங்களும் பிராணாதி வாயுக்களும் உண்டாயின; தமோகுணத்திலிருந்து சூட்சும (அபஞ்சீகரண) பூதங்களுண்டாயின; அவற்றின் பஞ்சீகரணத்தால் ஸ்தூலபூதங்களுண்டாயினவென்றும், விவேக (சுத்த) மாயையினால் அவிவேக(அசுத்த) மாயையைக்காலிலுள்ள சேற்றைசுத்தஜலத்தினால்கழுவிப்போக்குவதுபோலப் போக்க வேண்டுமென்றும், இச்சுத்தாசுத்தமாயைகளாலே ஜீவர்களுக்குச் சப்தாவஸ்தைக ளுண்டாகின்றனவென்றும், அவைதசமதிருஷ்டாந்தத்தால் ஜீவனிடத்தில் விளங்குமென்றும், தசமன்தானே தன்னைப்பத்தாமவனென்றறிந்ததுபோலத் துவம்பத விசாரவாயிலாகப் பஞ்ச கோசங்களை நேதிநேதியென்னும்வாக்கியத்தினால் நிவிர்த்திசெய்து சச்சிதாநந்த தேசோமயமாய்ப் பிரகாசிக்கின்ற அறிவையறிய மற்றோரறிவில்லையென்றும், மகாவாக்கிய மந்திரோப தேசஞ்செய்யும் வாக்கியங்களில் வாச்சியத்திற் பேதமேயன்றி லட்சியத்தில் எவ்விதபேதமுமில்லையென்றும், சீடன் கூடஸ்த பிரஹ்மங்களை ஐக்கியப்படுத்தி அநுபவித்தானென்றும், மறுபடியும் அஞ்ஞான சந்தேக விபரீதங்களான பிரதிபந்தங்களினால் ஞானம் ஸ்திரப்படமாட்டாதென்றும், சிரவணமனன நிதித்தியாசனத்தினால் அந்தப் பிரதிபந்தங்களாய முத்தடைகளும் நிவிர்த்தியாகிப் பிரஞ்ஞானம் ஸ்திரப்பட்ட பிரமஞானிகள் பிரம்மவித்து, பிரம்மவித்வான் பிரம்மவித்வரியான் பிரம்மவித்வரிஷ்டனென நால்வகைப்படுவரென்றும், இந்த

நால்வரில்பிரமவித்து அஞ்ஞானிகளைப்போலத்தனக்குரியவருணாச் சிரம தருமக்கிரியைகளை லோகோபகாரமாய் வியவகரித்தபோதிலும், யாதொரு சம்பந்தமுமற்ற ஆகாயம்போல அசங்கனாயிருப்பனென்றும், சஞ்சிதகருமங்கள் சலசபத்திரத்தில் ஜலமொட்டாவாறுபோல அகர்த்தாவா யுள்ளவர்களை யொட்டாவென்றும், பிராரப்தகருமங்கள், காலாதீதமாய்க் கஷ்டப்படுத்திவந்த ரணங்களாறிவரும்போதவற்றை யனுபவிப்பதுபோல ஜீவன் அநுபவிக்கவேண்டுமென்றும், பிராரப்தாநுபவத்தாலுண்டாகிய பாபபுண்ணியங்களைத் தூஷணைபூஷணை செய்யுமவர்கள் ஏற்றுக்கொள்வாரென்றும், தத்துவஞானம் வந்தவுடனே பிரகாசத்தைக்கண்ட விருள்போன்று காரணசரீரம் நஷ்டமாய் விடுமென்றும், தூலசரீரம் பிராரப்தநாசத்தில உடைந்த கடம்போல ஸ்தூலபூதங்களிலயமாகுமென்றும், கடாகாசம் கடமுடைந்தவுடனே மகாகாசமாவதுபோல விதேகமுத்தி யடைவர்களென்றும் கூறும். இங்ஙனங்கூறியசுருதிஸ்மிருதி வசனங்களியாவும் ஆகாயமறியாதவனுக்குக் கிளையெடுத்து ஆகாயத்தைக்காட்டுவதுபோலன்றி வேறன்று, வாஸ்தவத்தில் இந்தப் பிரதிகட்சிகளும் நாமரூப தேகேந்திரியாந்தக்கரண திருசியப் பிரபஞ்சமும், கானல்நீரும் இப்பி வெள்ளியும், வந்தியாபுத்திரனும், கட்டையிற் கள்வனும் போலக்காலத்திரயத்திலும் தங்கள் திருவடியின் மீதாணைப்படி மித்தையேயன்றி நிஜமன்று. பிரஹ்ம சொரூபமாகிய ஆத்மாதத்தத்தையன்றி மற்றெதுவும் கூர்ந்துபார்த்தா லில்லையென்றறியும். * "சர்வங்கல்விதம் பிரஹ்ம" பரமார்த்ததோ நகசிதஸ்தி "பிரக்ஞானம் பிரஹ்மேகம்" தஸ்மாத் பிரஹ்மவியதிரிக்தம் ஸர்வம் பாதிதமேவ பரபிரஹ்ம" என்று சுருதிகூறுவதால், நானென்னும் பிரக்ஞான சொரூபமாகிய ஆத்மாவே சத்திய மென்று பிரமாணஞ் செய்துநின்றான்.

கோர்ட்டார் இதுகாறும் கேட்டவை மிகச்சந்தோஷகரமாயிருக்கின்றனவென்று மனதிலெண்ணி, பிரதிவாதிவகீலையழைத்

* [illegible]

து, பிரதிவாதிகளுக்கு நானென்கிற ஆத்மசொத்தை யுரியதாகக் கொள்ள யாதொரு சம்பந்தமும் வாஸ்தவத்தி லேற்படவில்லை; அவர்கள் சமாதானமாய்ப் போய்விடுவது நன்றும். இல்லாவிட்டால் நானென்கிற ஆத்மார்த்தத்தை யவர்களிடத்திலிருந்து வேறுபடுத்தி அவர்களைப்புத்திரமித்திரகளத்திராதிகளுடன் மாண்டவ்யமகாரிஷியைக் கழுவிலேற்றியவாறு கழுவிலேற்றத்தண்டனை விதிக்கப்படும்.

ஆதலால், இவ்விரண்டிலெது சம்மதமென்றார். பிரதிவாதிகள் கோர்ட்டாரைப்பார்த்து நாங்கள் சமாதானமாக மாட்டோம், எங்கள் பிராணனை வாங்கினாலும் நாங்கள் பரமார்த்தத்தைக் கொடுக்கமாட்டோம் என்று முன்புகழுவி லேறியிறந்த சமணர்களைப் போன்று சொன்னார்கள். அதுகேட்டுக்கோர்ட்டார் இவர்கள் மிக வனியாயக்காரர்கள்; பிரமேந்திராதியாராய கீழ்க்கோர்ட்டார் இவர்களிடத்திற் கர்மோபாசனை யோகங்களை இலஞ்சமாகப் பெற்றுக்கொண்டு வாதியினுடையநியாயமான வியாஜ்ஜியத்தைத்தள்ளிவிட்டார்களென்றறிந்து இதுபரமார்த்த நியாயத்தீர்ப்புக்கோர்ட்டு; இதற்குமேல் அப்பீல் கோர்ட்டில்லை என்று கூறினார். சகலநியாயங்களையும்கண்டுபிடித்தசற்குருப்பிரபு சக்கிரவர்த்தியாகிய ஜட்ஜியவர்கள் சர்வசித்தாந்த வேதாந்தசமரஸ ரகசியமாகிய தீர்ப்பை யாவருமறியுமாறு சொல்வாராயினர்.

## ஜட்ஜி தீர்ப்புச்சொல்ல ஆரம்பித்தல்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பூவுல காதி யாகப் புகழுல கெல்லா மோங்கிக்
கேவல சகல மற்றுக் கிளர்பரி பூர்ண னாகிப்
பாவலர் துதிக்க நாளும் பரமசற் குரவ னென்னுங்
காவல னாரம் பிக்குங் கனதீர்ப்பைக் கழற லுற்றும்.

அநந்த கலியாண குணகண சகிதோர்ந்தராயும், வேதாந்த சித்தாந்த சமரஸ சன்மார்க்க சம்பூர்ணராயும், சுதந்தரசின்மய சுபாவ;சுவிசாரபரமார்த்தநியாயத்தீர்ப்புக் கோர்ட்டில் அசலபரப்பிரஹ்மசொரூப சாக்ஷாத்கார சின்மயசற்குருபிரபுச்சக்கிரவர்த்தியாயும் விளங்கும் ஜட்ஜியவர்கள் சன்னிதானத்தில் தாபத்திரயத்தால்வருந்தும்ஜீவனென்னும்வாதிபால் சத்துவகுண சகிதோர்ந்த விவேகியான வகீல் வாயிலாகநானென்னுமாத்மார்த்தம் பிரதிகட்சி

காரர்களுக்குச் சம்பந்த மற்றிருக்குமாறு செய்ய வேண்டுமென்று பிரியாதர்ஜி கொடுக்கப்பட்டது.

அஞ்ஞானியின் புத்திரர்களான இகலோக காமியர்களுள் ஒருவனைபாமரனும், பரலோக காமியர்களுள் ஒருவனை கருமியும், தேவதாந்தரங்களுள் ஒருவனை மூடபக்தனும் என்னு மிம் மூன்று பிரதிவாதிகளாலுங் கோரமூடபுத்தி யென்னும் வகீல் வாயிலாக ஆன்சர்(விடை)கொடுக்கப்பட்டது. பிரதிவாதிகளின் சாட்சிகளை ஆரம்பத்திலிருந்து அந்தம்வரையில்விசாரணை செய்ததில்அவர்களுடைய தஸ்தாவேஜுகளும் அவர்களுடைய சாட்சிகளும் சுத்தப்புரட்டானவை யென்று வெள்ளிடை மலைபோல் விளங்கிற்று.

வாதிதரப்புச் சாட்சிகளும் அவர்களுடைய யோக்யதைகளும், அவர்களுடைய வாக்குமூலங்களும், யுக்தியநுபவங்களும், உபநிஷத் கீதாவாசிஷ்டாதிகளின் பிரமாணங்களும், பூர்வாசாரியர்களாய சுக வாமதேவ வசிஷ்ட வான்மீகாதி பகவத் சொரூபர்களின் அநுபவங்களுக்குச் சம்பந்தமாகிய விசேஷத்தைக் குறித்துத் தக்கதிருஷ்டாந்தத்தோடுசொல்லியவற்றின் சம்பந்தங்களும், வாக்குச் சாதுரிய மரியாதைகளும், ஆத்மாவைக் குறித்துச் சொல்லிய நிந்தாஸ்துதிகளும், ஈசங்கிசமயத்தில் வாதிவகீல் வசனித்த ஒவ்வொரு அதிசயாநந்தாநுபவ சத்திய சங்கதிகளும் கேட்கப்பட்டன. இவை யெல்லாம் உண்மையாக விருப்பதால், வாதிபட்சந் தீர்ப்புச் சொல்லப்படுகின்றது:—

முதல்பைன்டு இசுவுக்குச் சமாதானம்.

தற்கால தாவா சொத்தாகிய ஆத்மார்த்தம் ஒருவருக்கும் பிரத்தியேக பாத்தியம் எந்தவிதத்து மில்லாமலே சமத்துவமாகியும், அசங்கமாகியும், இருக்கிறதா? அல்லது ஏகதேசமாய் மற்றொருவருடைய பாத்தியத்திற்குட்பட் டிருக்கிறதா? என்னும் முதல் பைன்டு இசுவுக்குச் சமாதானம் வருமாறு:—

நானென்னும் ஆத்மா அறிவென்னும் ஞானசொரூபமாயிருப்பதனாலும், அதற்கன்னியமாக அஞ்ஞானமாதி தேகேந்திரிய திருசியப் பிரபஞ்ச பரியந்தமுள்ள சகல வஸ்துக்களும் அநாத்ம (ஜட) சொரூபமாயிருப்பதனாலும், புருஷனால் கடபடாதிகளாளப்படுவதேயன்றி, அந்தப்புருஷன்கடபடாதிகளாலாளப்படாமையி

ஞாலும், சொப்பன பதார்த்தங்களைத் தானறிவதன்றித் தன்னை யந்தப் பதார்த்தங்கள் அறியாமையினாலும், எப்போதும் நானென்னும் ஆன்மா ஒருவருடைய ஆளுகைக்குட்பட்டிருக்கும் பாத்தியமுடையதன்றாம். வெள்ளரிக்காயை நரிபுசியாமைபோல அஃதொன்றோடும் பற்றின்றி யிருத்தலின், இந்த ஆத்மார்த்தமானது அசங்கமென்று தீர்மானிக்கப்பட்டது.

2 - வது பைன்டு இசுவுக்குச் சமாதானம்.

மேற்படி வாதி பிரியாது கொண்டுவருவதற்கு அருகனுவனென்பதற்குச் சம்சயமில்லை. அஃதெப்படியெனின், க்ஷத்திரிய வைசிய சூத்திர சண்டாளராதி ஜனங்கள் பௌருஷேயப்பிராஹ்மணத்துவத்தைக் குறித்து, வியாச்சியஞ் செய்ய முடியாமையாக விருந்தபோதிலும் பிராஹ்மணன் பிராஹ்மணத்துவத்தைக் குறித்து வியாச்சியஞ்செய்யஅருகனாக விருப்பதுபோல, நானென்னும் ஞான சொரூபனாகிய சீவன் தேகாதிபஞ்ச கோசங்களை நானென்று சொல்வதற்கு நியாயமில்லாமற் போனாலும் அவற்றைப்போல ஜடமாகாது சித்தாக விருப்பதனா லிந்த வாதி தாவா கொண்டுவருவதற்கு அருகனாயிருக்கிறா னென்று கோர்ட்டார் அபிப்பிராயப்பட் டிருக்கின்றனர்.

3-வது பைன்டு இசுவுக்குச் சமாதானம்.

இந்தப்பிரியாது கால நிருணய சட்டத்தினால் பாதிக்கப்படுமா? படாதா? என்னும் மூன்றாவது பைன்டு இசுவுக்குச் சமாதானம் வருமாறு:—

இராசாங்க சட்டத்தில் காலநிருணயத்தைக் குறித்துச் சில விதி சில வஸ்துக்களுக்கு மாத்திரம் சொல்லப்பட்டிருக்கின்றன; தெய்வசொத்துக்களுக்குக் காலதோஷங்கள் கற்பிக்கப்பட்டிருக்கவில்லை. வாஸ்தவமாக ருசுவில் கொடுக்கப்பட்ட சில சொத்துக்களுக்கு மாத்திரம் காலநிருணய சட்டமுண்டு. ஒருவன் தன் சொத்துக்களைக் களவாடினவனை யந்தச் சொத்துக்களால் கண்டுபிடித்துத் தாவா கொண்டுவரின், அப்போதச் சொத்துக்களுக்குக் காலதோஷங்களுண்டாவதில்லை. களவாடின சொத்தை நான் கொடுக்கமாட்டே னென்றால்திருடனை விடுவதுண்டோ? நியாயாதிபதிகள் அவனைத் தண்டிப்பது மன்றி அந்தச் சொத்தை எந்த விதத்திலாகிலும் வாங்கி யுடையவருக்குக் கொடுப்

பாரன்றோ? அதுபோல இங்கு நானென்னும் பிரஞ்ஞான சொரூப மாகிய தெய்வீக சொத்தை அஞ்ஞானிகள் ஒருவரும் அறியாமல் சோறிசெய்திருப்பதனுல், இந்தப்பிரதிவாதிகளிடத்திலிருந்து இப்போது நானென்னும் ஆத்ம சொத்தைவாங்கிக் கொடுப்பதற்குக் காலதோஷமதனிடத் தட்டிசெய்ய மாட்டாதென்று கோர்ட்டார் அபிப்பிராயப் படுகின்றனர்.

4-வது பைன்டு இசுவுக்குச் சமாதானம்.

இந்தக் கோர்ட்டாருக்கு விவாத சொத்தைப் பிரதிவாதிகளிடத்திருந்து வாங்கி வாதியினிடத்திற் கொடுக்கலாமா? கொடுக்கலாகாதா என்னும் நான்காவது பைன்டேசுக்குச் சமாதானம் வருமாறு:—

இந்தக் கோர்ட்டாருக்கு அந்தச் சொத்தை வாங்கிக் கொடுப்பதற்கு அதிகாரமிருக்கிறதேயன்றி மற்றொருவர்க்கும் அதிகாரமில்லை. அஃதெங்ஙனமெனின், கவர்னர், கலெக்டர், முதலிய ரிவினியூ வகுப்பார்களுக்கு ஒருவர் சுவாதீனத்திலிருக்கும் சொத்தை வாங்கி மற்றொருவருக்குக் கொடுக்கவதிகாரமில்லாமைபோல, கருமாச்ருதர்கள், பக்தர்கள், யோகிகள் முதலியவர்களுபாசிக்கும் மாயாகற்பிதராகிய ஈச்சுராதிகளுக்கு நானென்னும் ஆத்ம சொத்தை வாங்கிக் கொடுப்பதற் கதிகாரமில்லை ; அவர்களுக்கதிகாரமில்லை யென்பதற்குப் பிரமாணம் சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களாம்.

அவை, சீவர்களுக்குச் சிவன்முதலிய தேவர்கள் அவர்கள் செய்த உத்கிருஷ்ட கருமோபாசனைகட் கேற்றவாறுகத் தத்தம் லோகபதவிகளையும், அட்டமாசித்திமுதலிய போக போக்கியங்களையும் தருகின்றாரென்று கூறுகின்றனவேயன்றி, அஞ்ஞானமும், அதன்காரியங்களாய சகஜீவாதிபேதங்களும் சஞ்சிதாதிகருமங்களும், ஜனனமரணாதி சம்சார துக்கங்களும், காலாதீதமின்றிப் பிரவாகம்போல அநாதியாய்த்தொடர்ந்துவந்திருப்பதனுல் அவற்றைக் கெடுத்தற்கு அவற்றிற்கு வியதிரேகமாய் விளங்கும் அபரோக்ஷசாக்ஷாத்காரமா யோங்கும் பிரஹ்மஞானத்தைக் கொடுக்கின்றாரென்று கூறவில்லை. ஆதலால் அந்தப்பிரஹ்ம ஞானத்தை யபேக்ஷித்தவர்கள் சற்குருப்பிரபுச் சக்கிரவர்த்தியின் சரண கமலங்களைத் தஞ்சமாகவடைந்து அவர் கூறும் ஞானோபதேசத்தா

னுச்சிவிக்க வேண்டுமென்றும், முக்கியாதிகாரிகளான சனகாதி முனிகள் ஈச்சுரனைப் பிரஹ்மஞானோபதேசஞ் செய்யுமாறு பிரார்த்திக்க அவரந்த ஈச்சுரரூபத்தை மறைத்துத் தட்சிணாமூர்த்தங் கொண்டு சற்குருவாகத் தோன்றி அந்த முனிபுங்கவருக்கு உபதேசித்தா ரென்றும், சுருதியாதிகள் கூறுவதால், கவர்னர்முதலிய உத்தியோகஸ்தர்களுக்குச் சமானர்களாயுள்ள ஹரிஹரப் பிரமேந்திரர்களுக்குப் பிரஹ்ம சொரூபமாகிய ஆத்மார்த்தத்தை ஒருவரிடத்தி லிருந்து வாங்கி மற்றொருவரிடத்திற் கொடுக்க அதிகாரமில்லை. கவர்னர் முதலிய உத்தியோகஸ்தருக்கு ஒருவருடைய சுதந்திர சொத்துக்களை அவரிடத்திலிருந்து வாங்கி மற்றொருவருக்குக் கொடுப்பதற்கு அதிகார மில்லாவிடினும் மேல் கோர்ட்டாருக்குச் சர்வாதிகாரமு மெப்படி யிருக்கிறதோ, அப்படியே சத்தியஞானாநந்த சொரூபமாய் விளங்கும் சற்குருப்ரபுச் சக்கிரவர்த்தியென்கிற ஜட்ஜியவர்களுக்கு நானென்னும் ஆத்ம சொத்தைப் பிரதிவாதிகளிடத்தி லிருந்து வாங்கி வாதியினிடத்துக் கொடுக்க அதிகார மிருக்கிறது.

## 5-வது பைன்டு இசுவுக்குச் சமாதானம்.

பிரதிவாதிகள் கிரமமாய் வியவகரிக்கும் பக்ஷத்தில் அவர்களைத் தண்டிக்க நியாயசட்ட மிடந்தருமா? தரமாட்டாதா? என்னும் ஐந்தாவது பைன்டிசுக்குச் சமாதானம் வருமாறு:—

சம்சார பந்தத்திற்குக் காரணமாயிருக்கும் அஞ்ஞானமென்னு மிருட்டுக்கு, மெய்ஞ்ஞானமானது பிரசண்ட மார்த்தாண்டனாக விருக்கிறதென்று சுருதி கூறுவதால், சற்குரவ னுபதேசத்தா லுண்டாகிய ஞானபாநு இருட்டை யொத்த அஞ்ஞானதியரை யொழிப்பதற்குச் சட்டவிரோத மின்றென்று பெறப்படுகிறது என்றற்றொடக்கத்து விஷயங்களைத் தீர்க்காலோசனை செய்தெழுதிய தீர்ப்புச் சொல்லப்படுகிறது.



## நியாயத்தீர்ப் பென்னுஞ் ஜட்ஜிமெண்டு.

### எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

நலந்திகழும் வடலூர்ச்சிற் றம்பலத்தே நடனமிடுங் குருப்ரபுச் சக்ர வர்த்தி, நிலந்திகழுந் துரியாதீ தத்தோங்கி நியாயாதி பதியென வே நிலைத்து நாளும், பொலந்திகழுஞ் சுகவாம தேவாதி புடைசூழப் பிரணவசிங் காத னத்தில், வலந்திகழ வமர்ந்தருளான் முமுட்சு வென்னும் வாதிபக்கல் தீர்ப்பளித்த வகையைச் சொல்வாம்.

*சகல வல்லமைகளுமுடைய பிரக்ஞான குணகணசீலராகியும் ஸ்ரீ சற்குருப் பிரபுச் சக்கிரவர்த்தியுமாகிய ஜட்ஜியவர்கள் நியாயத்தானத்தின் கண் எழுந்தருளி, உபயகட்சிக்காரரின் வாதங்களைச் சாவதான ஹிருதயத்தோடுற்று நோக்கிக் கிரமமாக நியாயத்தீர்ப்பளித்தல் வருமாறு.—*

*சர்வ ஜந்துஜாலங்களின் அவஸ்தாத்திரயங்களிலும் அஹமஹமென்று அடிக்கடி ஸ்மரணை செய்வது அல்லது நானென்று ஸ்மரிப்பது ஆன்மாவேயென்று சர்வவேதோபநிடத வாக்கியங்களுத்கோஷித்து வருதலின், அஃது அதற்குவிய திரிக்தமாகக் காணப்படுகின்ற நாமரூபவடிவ சகத்தை அசத்தென்பது பற்றிச் சத்தென்றும், ஜடமென்பதுபற்றிச் சித்தென்றும், அநித்திய மென்பதுபற்றி நித்தியமென்றும், துக்கமென்பதுபற்றி ஆநந்தமென்றும், சகுணமென்பதுபற்றி நிர்க்குணமென்றும், ஆவரணமென்பதுபற்றி நிராவரணமென்றும், சாகாரமென்பதுபற்றி நிராகாரமென்றும், விஷயாநந்தமென்பதுபற்றி நிர்விஷயாநந்தமென்றும், பேதமென்பதுபற்றி அபேதமென்றும், பரோக்ஷமென்பது பற்றி அபரோக்ஷமென்றும், துவிதமென்பதுபற்றி அத்துவிதமென்றும், ஆலம்ப மென்பதுபற்றி நிராலம்பமென்றும், அப்பிரகாசமென்பதுபற்றிப் பிரகாசமென்றும், கண்டமென்பதுபற்றி அகண்டமென்றும், அநேகமென்பதுபற்றி ஏகமென்றும், வியாவகாரிக மென்பதுபற்றிப் பாரமார்த்திக மென்றும், அவஸ்தாத்திரியமென்பதுபற்றித் துரியமென்றும் சங்கமென்பதுபற்றி நிச்சங்கமென்றும், நாமமென்பதுபற்றி நிர்நாம மென்றும், கண்டமென்பதுபற்றிப் பூரணமென்றும், அஞ்ஞானமென்பதுபற்றி நிரஞ்சன மென்றும், சலனமென்பதுபற்றி நிர்ச்சலனமென்றும், மிருத*

மென்பதுபற்றி அமிர்தமென்றும், ஆதியந்த சகிதமென்பதுபற்றி ஆதியந்த ரஹிதமென்றும்,பிரபஞ்சமென்பதுபற்றி நிஷ்பிரபஞ்சமென்றும். லட்சியமென்பதுபற்றி நிர்லட்சியமென்றும் சொல்லப்படுகின்றது. இவ்வியவகாரங்கள் வியாவகாரிகதசையி லிருப்பனவாம். இதனையே அஞ்ஞானதசையென்பர். இந்த அஞ்ஞானதசையில் தேகாதிப்பிரபஞ்சம் சுகமாயும்,சத்தியமாகவுங் காணப்படுகின்றது. இது விஞ்ஞானதசையில் அல்லது பாரமார்த்திகதசையில். * "ஸர்வங்கல்விதம் பிரஹ்ம விச்வமேவே தம்புருஷம்" ஸர்வம் விஷ்ணுமயஞ் சகத்! 'வாசுதேவசர்வமிதி ஸதஸத்தஹமர்சுநா' என்றற்றொடக்கத்துச் சுருதி புராணேதிகாசவாக்கிய விசாரத்தால் அநர்தஜடதுக்கமாயொழியும். நாமரூபதிருசியப் பிரபஞ்சம் திருக்காகியதனக்கு வேறாகியும் திருசியவியவகாரமுடையதாயும்வஸ்துதத்துவபரிசீலனகாலத்தில்தனக்கெனச் சொரூபமிலதாயுமிருத்தலின்,மித்தையெனப்படுகின்றது. பிரபஞ்சம்பொய் அல்லது மித்தையென்பதற்கு வந்தியாபுத்திரன், இரச்சுசர்ப்பம், கானல்நீர், சொப்பனப்பிரபஞ்சம் முதலிய அறுபத்துநான்கு திருஷ்டாந்தங்கள் சுருதிமுதலியவற்றுள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் குறிப்பிட்டுக் கூறிய நான்கும் வருமாறு:—

1-வது:-மலடிமகன் போன்று உலகம் கூர்ந்து நோக்கும் போது காலத்திரயத்திலுமில்லையாம்.சட்சுராதி யிந்திரியங்களுக்குக்கோசரமாயுள்ள இந்தத் தேகாதிப்பிரபஞ்சத்தை யெங்ஙனம் மலடிமகன் போன்றதென்றுங் கூறலாமெனின், † "திரிசியம் நஸ்யதி" என்றும் "உணருருஅசத்து" என்றும், பிரமாணங்களிருத்தலால், காணப்படுவது தனக்கெனச் சொரூபமில்லாததென்று அறியத்தக்கதாம். தனக்கெனச்சொரூபமில்லாமையே இங்கு அசத்தென்பதற்குப் பொருளாம் இதனால் திருக்சொரூபமே பாரமார்த்தமென்பது (காலத்திரயத்திலு மிருப்பதென்பது) பெறப்படும்.

---

* ஸர்வம் க²ல்விதம் ப்³ரஹ்ம விச்²வமேவேத³ம் புருஷம்,
ஸர்வம் விஷ்ணுமயம் ஜக³த்,
வாஸுதே³வஸ்ஸர்வமிதி,
ஸத³ஸத்³ அஹமர்ஜுந
† த்³ருச்²யம் நச்²யதி

2-வது:-இரஜ்ஜு ஸர்ப்ப திருஷ்டாந்தத்தால் சகத்து மித்தையாமென்பது நன்கு விளங்கும். இரஜ்ஜுவையன்றிச் சர்ப்பம்காலத்திரயத்திலு மில்லாமைபோன்று இத்திருசியப் பிரபஞ்சமுந்திருக்காகிய ஆத்மாவையன்றிக் காலத்திரயத்திலு மின்றும். இங்ஙனமிருப்பதே மித்தையாகின்றது. இதனால்பிரஹ்மமேசேடித்து நிற்பதென்பது பெறப்படும்.

3-வது:-கானல்நீர் திருஷ்டாந்தத்தாலிந்த உலகந்தோற்றிக்கொண்டிருக்கும் போதும் மித்தையாமென்பது நன்கு விளங்கும். கானல்நீர் தன்காரணத்தையன்றி யில்லையென் றறிந்தவிடத்தும் தோன்றுவதுபோல உலகமும் தன்காரண (சிவ) த்தையன்றி யில்லை யென்றறிந்தவிடத்தும் தோன்றுகின்றது. இதனால் உலகத் தோற்றத்திற்காதாரமான சிவம் மாறுதசத்தென்பது நன்குவிளங்கும்.

4-வது:-சொப்பனப் பிரபஞ்ச திருஷ்டாந்தத்தால் இச்சகத்து அறிவையன்றி யில்லையென்பது வெளிப்படையாக விளங்கும். சொப்பனப் பிரபஞ்சம் விழித்தகாலத்தில் தன்னைத்தவிரவில்லாமைபோன்று, இந்த நாமரூபாத்மகப் பிரபஞ்சமும், அதன் விவகாராதிலட்சணங்களும் தனது நிஜவடிவத்தை யறிந்தகாலத்தில் அசத்தியமாம். இதனால் தனக்கன்னியமென்பது வாஸ்தவமாகவின்றித் தான்மாத்திரஞ் சேடித்திருப்பதுவே பரமார்த்தமாமென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குவதாம்.

ஆத்மாவுக் கன்னியமாய்ச் சகத்ரூபவஸ்து இருக்குமாயின், அது மித்தையாயிருக்குமன்றிச் சத்தியமாக விராதென்பதுமேலே காட்டிய திருஷ்டாந்தத்தால் நன்கு விளங்கும். சொப்பனப் பிரபஞ்சம்போலச் சர்வமும் நசிக்க ஆத்மாமாத்திரம் சேடித்திருக்கிறது.

* "ஸதேவ ஸோம்யே இதமக்ரமாசீத்" என்றுள்ள சுருதியால் ஆதியில் சத்தே யிருந்ததென்று நிச்சயிக்கப்படுவதால், அந்தத்திலும் ஆத்மாவுக்கு வேறான சத்துஇருக்குமென்பது சித்தியாது.

1. ஆரம்பம் பரிணாமம் விவர்த்த மென்னும் மூவகைக் காரியத்தோற்றத்துள், ஆரம்ப பக்ஷமிங்குக் கொள்ளுதல் கூடாது; ஆத்மா நிரவயமா யிருத்தலின்.

---

* "ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்"

2. பரிணாமபட்சமு மிங்குக் கொள்ளுதல் கூடாது: பிரஹ்மம் நிர்விகாரமாயிருத்தலின்.

3. விவர்த்தபட்சம் அங்கீகரிக்கத்தக்கதாம். இரஜ்ஜுவில் தோன்றுஞ் சர்ப்பம் விசாரிக்கில் வாஸ்தவத்திலின்றாம். இரஜ்ஜு சர்ப்பமாகவுமில்லை; இரஜ்ஜுவில் சர்ப்பமிருக்கவுமில்லை. இல்லாமலே யிந்தச் சர்ப்பத்தோற்றம் மயக்கியதென்பது நன்குவிளங்கும். இதுபோலப் பிரஹ்மம் சகத்திற்கு விவர்த்தோபாதானமாம்; ஆரம்போபாதானமாயின், கடத்திற்குமண்ணையன்றிக்குலாலனும், தண்டசக்ராதிகளும், காரணமா யிருப்பதுபோல உலகத்திற்குப் பிரஹ்மமேயன்றி வேறு காரணமும் வேண்டியிருக்கும். அஃது அசங்கதமாம்; சுருதி விரோதமுமாம். ஆகையால் ஆரம்பவாத மங்கீகாரமாக மாட்டாது.

ஜகத்திற்குப் பிரஹ்மம் பரிணாமோபாதானமா மெனின், பால் தயிராவது போன்று, பிரஹ்மம் சொரூபமாறி ரூபாந்தரங்களை யடையவேண்டும்.

பிரஹ்மம் நிர்விகாரமாகையால், அது வேறுவடிவங்களை யடைவ தெப்போது மின்றாம். ஆதலால் பரிணாமவாதம் பொருந்துவதன்றாம்.

மேலிரண்டு வாதங்களும் பிரஹ்மம் உலக காரணமென்னும் நிச்சயத்திற்கு அநாநுகூலமா யிருத்தலின், விவர்த்தவாதமே கொள்ளத் தக்கதாம்.

கயற்றினிடத்தில் அரவு கற்பிதமாயிருப்பதுபோல உலகு பிரஹ்மத்தின்கண் கற்பிதமாம். உண்மையிலிருப்பது நிர்விகார நிச்சங்க நிர்த்தொந்தமாய் விளங்கும் ஏகப்பிரஹ்மமேயாம்.

ஆதலாலெதுவும் (ஹகமென்னும்) ஆத்மார்த்தத்திற் கன்னியமாகாது; அது சுவ (தனது) ஸ்சொரூபமேயாம். ஆகையால் அதற்கன்னியமாக வொன்று வாஸ்தவமாக விருக்கின்றதென்று பாவிப்பது அசாஸ்திரியமாம். தானென்னும் ஆன்மாவுக் கன்னியமாக வொருபதார்த்தமுமில்லை யென்பது

† "நத்விதீயமஸ்தி—ஆன்மாவிற் கிரண்டாவதில்லை" என்

† நத்வி_தீயமஸ்தி

றும், ‡ "நாஸ்தித்வைதம்—துவிதமில்லை" என்றும், * "குதோ விதிதே வேத்யம் நாஸ்தி—பிரஹ்ம சொரூபந் தெரிந்து கொண்டிருத்தலின், எதனாலுந் தெரிந்து கொள்ள வேண்டிய தில்லை" என்றும், ¶ "ஏகமேவாத் விதீயம்—இரண்டாவதில்லாத வஸ்து வொன்றே" என்றும் † "ஏகமேவஸந் நேஹநா நாஸ்திகிஞ்சின—ஒன்றேயுள்ளது சிறிதேனும் அநேக மென்பதில்லை" என்றும், ‡ "ஏக தைவாநுத்ருஷ்டவ்யம்—ஒரு விதமாகவே பார்க்கப்படுவதாம்" என்றும், * "வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் மிருத்திகேத்யேவ ஸத்யம்—காரியமாயகடம் சொன் மாத்திரமே; மண்ணேசத்தியம்" என்று முள்ள பிரமாணங்களாலும், மண்ணிலுண்டாகிய கடகலசாதிகளும், சுவர்ணத்திலுண்டாகிய கடகமகுடாதிகளும், அயத்திலுண்டாகிய கட்காதிகளும் காரணத்திற்குப் பின்னமாகத் தோன்றினாலும், அவை விசார முகத்தில் சொன்மாத்திரமாக வொழிவதால் அவற்றிற்குப் பொருளில்லை யென்னும் யுக்தியினாலும் நன்கு விளங்குவதாம்.

## பிரஹ்ம புராணம்.

† "புருஷஃ பரமாத்மாது யதொந்யதஸத்யதத், ஏவம்புத்வா சகத்ரூபம் விஷ்ணோர்மாயாமயம் ம்ருஷா."

(இ-ள்.) பூரணமென்னும் புருஷனே பரமாத்மாவாம்; அதற் கன்னிய மென்பதில்லை. இந்தப் பிரகாரந் தெரிந்து கொள்வதால் விஷ்ணுவின்மாயாவடிவமாகிய சகத்தெல்லாம் மித்தையாம்.

‡ 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂

* 𑌕𑍁𑌤𑍋 𑌵𑌿𑌦𑌿𑌤𑍇 𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿

¶ 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂

† 𑌏𑌕𑌮𑍇𑌵𑌸𑌨𑍍𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨

‡ 𑌏𑌕𑌧𑍈𑌵𑌾𑌨𑍁𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂

* 𑌵𑌾𑌚𑌾𑌰𑌮𑍍𑌭𑌣𑌂 𑌵𑌿𑌕𑌾𑌰𑍋 𑌨𑌾𑌮𑌧𑍇𑌯𑌂 𑌮𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑍇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌸𑌤𑍍𑌯𑌂

† 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑍁 𑌯𑌦𑌨𑍍𑌯𑌦𑌸𑌤𑍍𑌯𑌤𑌤𑍍
𑌏𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌜𑌗𑌦𑍍𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌮𑌾𑌯𑌾𑌮𑌯𑌂 𑌮𑍃𑌷𑌾

விஷ்ணு புராணம்.

‡ *"விஞ்ஞானபரமார்த்தோஸௌ த்வைதிநோதத்யதர்சிநஃ நிதகோபதேசேந தேநாத்வைதபரோபவத் ஸர்வ பேதாந்யபேதேந ஸததர்சததாத்மநஃ, ததாபிரஹ்ம ததோமுக்தி மவாபபரமாத்விஜ."*

(இ - ள்.) *இந்த ஆத்மா யதார்த்த தத்துவத்தைப்பார்க்கின்ற அத்வைதிக்கு விஞ்ஞானத்திஞல் சாத்திய சொரூபமாயிருக்கிறது. ஓ! வித்துவானே? இந்தச் சமஸ்த ஜகத்தும் பேதரஹித மாகிய வொரேவஸ்துவாகவே யிருக்கிறது. நிதாகனென்னும் மகாரிஷி வாசுதேவ னென்னும் பெயருடைய பரமாத்மாவின் சொரூப உபதேசத்திஞல் அத்வைதத்தின் கண் ஆசக்தியுடையவஞஞன்; அந்த நிதாகன் சகல பேதங்களையும் தனக்கபேதமாகப் பார்த்தான்; அதஞல் அப்போதே பிரஹ்மசொரூபமாஞன்; அதஞல் சிரேஷ்டமாகிய முத்தியைப்பெற்ருன்.*

* *"ஏகஸ் ஸமஸ்தம் யதிஹாஸ்திகிஞ்சித் ததச்யுதோநாஸ்தி பரந்ததோந்யத், ஸோஹம்ஸசத்வம் ஸசஸர்வபேத தாத்மஸ்வரூபம் த்யஜபேதமோஹம்."*

(இ-ள்.) *இங்குக் காணப்படும் பொருள்களெல்லாம் ஏகஸ்வரூபஞகிய பகவானே; அவனுக்கு வேருனவையும் சிரேஷ்டமானவையுமில்லை. அந்தப் பகவானே நானும்; அந்தப் பகவானே நீயும்; அந்தப் பகவானே இந்தச் சமஸ்தமும். ஆகையால் பேதமிருக்கிறதுபோல மோகத்தைத் தருகின்ற ஆத்மாவிற் கன்னியத்தை விட்டுவிடும்.*

‡ 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑍋𑌸𑍌 𑌦𑍍𑌵𑍈𑌤𑌿𑌨𑍋𑌤𑌥𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃 ।
𑌨𑌿𑌦𑌾𑌘𑍋𑌪𑌦𑍇𑌶𑍇𑌨 𑌤𑍇𑌨𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌪𑌰𑍋𑌭𑌵𑌤𑍍
𑌸𑌰𑍍𑌵𑌭𑍇𑌦𑌾𑌨𑍍𑌯𑌭𑍇𑌦𑍇𑌨 𑌸𑌦𑌦𑌰𑍍𑌶𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌤𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌤𑍋𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑌵𑌾𑌪 𑌪𑌰𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌜॥

𑌏𑌕𑌸𑍍𑌸𑌮𑌸𑍍𑌤𑌂 𑌯𑌦𑌿𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍
𑌤𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑍋𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰𑌂𑌤𑌤𑍋𑌨𑍍𑌯𑌤𑍍 ।
𑌸𑍋𑌹𑌂𑌸𑌚𑌤𑍍𑌵𑌂 𑌸𑌚𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌤𑍍
𑌆𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌤𑍍𑌯𑌜𑌭𑍇𑌦𑌮𑍋𑌹𑌂 ॥

பராசரஸ்மிருதி.

† "அர்த்தஸ்வரூப மஜ்ஞானாத் பச்யந்தம் யெகுத்ருஷ்டயஃ
கூடஸ்தோ நிர்க்குணோவ்யாபி சைதந்யாத்மஸ்வபாவதஃ"

(இ-ள்.) குத்சித வடிவுடைய அஞ்ஞானிகள் பிரபஞ்சத்தை ஒரு பதார்த்தமாகவும் தமக்கன்னியமாகவும் பார்க்கிறார்கள். ஆனாலந்த ஆத்மாவாகிய கூடஸ்தன் சுபாவமாயும், நிர்க்குணமாயும், சர்வவியாபியாயும் சைதன்னிய சொரூபனாகியு மிருக்கிறான்.

‡ "ஆகாசோவை நாமரூபயோர் நிர்வஹிதாதேய தந்தரா தத்ப்ரஹ்மா சர்வாநு பூரித்யேய தநுசாஸநமிதி".

(இ-ள்.) ஆகாசம்போல எந்த நாமரூபங்களையும் வகிக்காது அந்த நாமரூபங்களுக் கெதுமுடிவாயிருக்கிறதோ அதுவே பிரஹ்மம். அந்தப்பிரஹ்மத்திற்கு முன்னுமில்லை, பின்னுமில்லை, உள்ளுமில்லை, வெளியுமில்லை. அஃது ஆத்ம சொரூபம். இந்த ஆத்மாவே நானென்னும் பிரஹ்மஸ்வரூபம். இந்தப் பிரஹ்மம் யாவருக்கும் அகமென்னும் அநுபவ ரூபமானது.

சுருதி ¶ "யத்ராத்மவ்ய திரேகேந த்விதீயம்யோ நுபச்யதி பிரஹ்மபூத ஸஏவைக வேதசாஸ்திர வுதாஹ்ருதஃ

(இ-ள்.) இங்குத் தானென்னும் ஆத்மாவிற்கு வேறாக விரண்டாவது வஸ்துவை யெவனறியானோ அவனப்போதே (இந்தச்சன்மத்திற்றானே) பரப்பிரஹ்ம சொரூபனாகின்றான்.

என்று பிரஹ்மபுராண முதலியவை கூறுவதாலும், சத்தாமாத்திரமாகிய தானென்னும் அகம் பதார்த்தத்திற்கு அன்னியமாக யாதொன்றும் எக்காலத்திலும் சத்தாக வில்லையென்றும் அதுவே பிரஹ்ம மென்றும் நன்றாக விளங்கும்.

---

† [illegible] ।
[illegible] ॥

‡ [illegible]
[illegible] ॥

¶ [illegible]
[illegible]

## ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள்.

¶ நஸாங்கியம் நசைவம் நதத்பாஞ்சராத்ரம், நஜைநம் நமீமாம்ஸகாதேர்மதம்வா, விசிஷ்டாநுபூத்யா விசுத்தாத்மகத்வாத்த தேகோ வசிஷ்ட சிவகேவ லோஹம் நபூமி: நதோயம். நதேஜோ நவாயு:, நகம் நேந்த்ரியம்வா நதேஷாம்ஸமூஹ: அநேகாந்திகத்வாத் ஸுஷுப்த்யேகஸித்த:தத்தேகோவஸிஷ்ட சிவ.கேவலோஹம்.

என்றருளியவாறு சுழுத்தியில் சித்தித் திருக்கிறவனும், அத்விதீயனும், சர்வ துவிதத்திற்கும், பாதமிருப்பினும் தனக்குப் பாதமற்றவனும், பரமானந்த போதசொரூபனும், தர்மமற்றவனும் அஹமாகார விருத்திக்கு விஷயமாயுமுள்ள நான் பூமியன்று, ஜலமன்று, தேஜஸ் அன்று, வாயுவன்று, ஆகாசமன்று, இந்திரியங்களன்று, அல்லது இந்திரியங்களின் கூட்டமுமன்று; இவை யெல்லாம் சுழுத்தியில் வியபிசார மடைந்திருப்பதாலென்றுணராது இவற்றைப் பொருளாகக் கொண்டிருக்கும் (* "ஞாநவிஹீந ஸர்வமதேந முக்திர்நபவதி ஜந்மசதேந என்றபடி) தேகாபிமானிகளுள் தேகாகாரமாய்ப் பரிணமித்தநான்கு பூதங்களை துவம்பதார்த்த மென்னும்சார்வாகனும், இந்திரியங்கள் தனித்தனியே † பொருளென்னும் சார்வாகர்களுள் ஏகதேசிகளும், சட்சுராதிகளின் சமுதாயமே பொருளென்பவரும், மனமே பொருளென்பவரும், பிராணனே பொருளென்பவரும், க்ஷணிக விஞ்ஞானமே பொருளென்னும் சுகதர்களும், சூனியமே பொருளென்னும் மாத்யமிகர்களும் தேகேந்திரியங்களைக் காட்

---

¶ 𑌨 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌨 𑌶𑍈𑌵𑌂 𑌨 𑌤𑌤𑍍𑌪𑌾𑌂𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑌂 𑌨 𑌜𑍈𑌨𑌂 𑌨 𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌕𑌾𑌦𑍇𑌰𑍍𑌮𑌤𑌂 𑌵𑌾 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌦𑍇𑌕𑍋𑌽𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑍋𑌽𑌹𑌂 । 𑌨 𑌭𑍂𑌮𑌿𑌰𑍍𑌨 𑌤𑍋𑌯𑌂 𑌨 𑌤𑍇𑌜𑍋 𑌨 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌨 𑌖𑌂 𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌵𑌾 𑌨 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌮𑍂𑌹𑌃 𑌅𑌨𑍇𑌕𑌾𑌂𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑍇𑌕𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 𑌤𑌦𑍇𑌕𑍋𑌽𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑍋𑌽𑌹𑌂

* 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌹𑍀𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌤𑍇𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨 𑌭𑌵𑌤𑌿 𑌜𑌨𑍍𑌮𑌶𑌤𑍇𑌨

† பொருள்—ஆத்மா.

டினும் ஆத்மா வேறென்பதையுள்ளபடியறியாது சொல்லும்திகம்பரர் வைசேஷிகர் நையாயிகர், பிரபாகரர், பட்டர் சாங்கியர், யோகியர், சைவர் மீமாம்சர்களும், மற்றுமுள்ள மதஸ்தர்களும் கொண்டிருக்கும் அபிப்பிராயங்கள் பரமார்த்தமன்று. சகத் காரணமாயும், அகமாகார விருத்திக்கு ஏதுவாயும், அத்விதீயமாயும், நிர்த்தர்மகமாயும், பரமாநந்த போத சொரூபமாயும், அகண்ட பரிபூரண சச்சிதாநந்த பரப்பிரஹ்மமாயும் விளங்குவதே பரமார்த்தமா மென்று பெரியார் பணித்தவாறு தீர்ப்பளிக்கப்பட்டது.

இதற்கு உபநிடதாதிப் பிரமாணங்களும், வேதாந்த டிண்டிமங்களும் பிரமாணமாவதன்றிக் கீழ்வருவனவும் பிரமாணமாம்.

அருட்பா.

கிழக்குவெளுத் ததுகருணை யருட்சோதி யுதயங்
கிடைத்ததெனை துளக்கமலங் கிளர்ந்ததெனை தகத்தே
சழக்குவெளுத் ததுசாதி யாச்சிரமா சாரஞ்
சமயமதா சாரமெனச் சண்டையிட்ட கலக
வழக்குவெளுத் ததுபலவாம் பொய்நூல்கற்றவர்தம்
மனம்வெளுத்து வாய்வெளுத்து வாயுறவா தித்த
முழக்குவெளுத் ததுசிவமே பொருளெனுஞ்சன் மார்க்க
முழுநெறியிற் பரநாத முரசுமுழங் கியதே.
சாதிகுல மென்றுஞ் சமயமத மென்றுமுய
நீதியி லாச்சிரம நீட்டென்று-மோதுகின்ற
பேயாட்ட மெல்லாம் பிதிர்ந்தொழிந்த வேபிறர்தம்
வாயாட்டந் தீர்ந்தனவே மற்று.

தாயுமானவர்.

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர் பொறிபுலநடங்கு மிடமே—பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம் போனவிட மென்பர் சிலபேர், நாதவடி வென்பர் சிலர் விந்துமய மென்பர்சிலர் நட்டநடு வேயிருந்த—நாமென்பர் சிலருருவமாமென்பர் சிலர்கருதி நாடிலரு வென்பர் சிலபேர், பேதமறவுயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர் பேசினரு ளென்பர் சிலபேர்-பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர் பிறவுமே மொழிவரிவையாற், பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற் பரமசுக

நிஷ்டை பெறுமோ— பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறை கின்ற பரிபூர ணாநந்தமே.

பூவிற்கும் வான்கடையிற் புல்விற்பேர் போலவொன்றைப் பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே.

**தத்துவராய சுவாமிகள்.**

வேதாக மங்கள் சொன்னபொருண் மெய்யேயறிவார் போன்றிருந்து, பேதாபேதஞ் சாதிக்கும் பெரும்பேய் தனக்கும் வாரீரே.

ஞானம் போலச் சிலசொல்லி நாடற்கரிய முத்தியினுந், தானுஞ் சிவமும் பாசமுமாஞ் சைவப் பேய்க்கும் வாரீரே.

**சூதசங்கிதை.**

மேவரு மறைக ளத்து விதமென விளம்பு மச்சொற்
றூவரும் பொருள்வே றன்மை தானென வுரைப்ப ரத்தாற்
சீவர்கள் பலருந் தானாய் நிற்பனந் தேவ தேவன்
பாவனை துவிதங் கொள்ளிற் பவமொழி யாது நாளும்.

**விவேக சூடாமணி.**

இகழுமித் துவித மியாவு மென்றுமே மித்தை யாரும்
புகழுமத் துவித மென்றும் போற்றிய பரமார்த் தந்தான்
மகனேயிப் படியே நேராய் மறைமுடி வுரைக்கக் கண்டோஞ்
சுகசுழுத் தியிலு நித்தஞ் சுத்தவத் துவிதங் கண்டோம்.

கற்பித வஸ்து வுக்குக் கருதிய வதிட்டா னததோ
டொப்பிய வபேதந் தன்னை யுள்ளவா றறிஞ ரெல்லாங்
கற்பித விரச்சு சர்ப்பங் கானனீர் முதலிற் கண்டா
ரிப்படி யிருக்க பேத மிசைந்திடல் பிராந்தியன்றே. மேலும்,

* " நயோகேந நசாங்க்யேந கர்மணாநோ நவித்யாய,
ப்ரஹ்மாத் மைகத்வ போதேந மோக்ஷஸித்யதி நாந்யதா."

---

* நயோகெந நஸாஂவெ்ாந கஂணாநொ நவிஷ்யா ।
ஹாமைகவொயெந மொக்ஷஃ வியதிநாந்யா ॥

என்றுள்ள பிரமாணத்தின்படி பிரஹ்மாத்மைக்ய தத்துவ ஞானத்தினால் மோக்ஷம் ஸித்திக்குமே யன்றி, மற்றைய ஸாங்கிய யோகாதி சாஸ்திர விசாரங்களினால் சித்தியாதாம்.

இவ்விஷயம் சுருதி முதலிய பிரமாணங்களால் தக்கவாறாக ருஜுவாகியிருப்பதால், அஞ்ஞானி புத்திர்களாகிய பாமரன், கர்மி, மூடபக்த னென்னும் பிரதிவாதிக் கட்சிக்காரர் செய்கின்ற வியாஜ்யந்தூர்வியாஜ்யமா மென்று தள்ளப்பட்டது.

இனி அகண்ட பரிபூரணசத்தியஞானாநந்தாநந்த பரப்பிரஹ்ம சொரூபமாகிய (அகம்பதார்த்த மென்னும்) ஆத்மாவை முமுட்சு வென்னும் வாதி நிராட்சேபமாய் நிரந்தரமு மனுபவித்தற் குரியவனாவன்.

இனி நானென்னும் ஆத்மார்த்தத்தைக் கர்த்திருத்வாதி வியவகார கற்பனைகளைச் செய்து எவர்களாயினும் பேராசையோடு அநுபவிக்கப் பிரயத்தனஞ் செய்வார்களாயின், அவர்கள் அஞ்ஞான திமிர சம்சார துக்கபங்க தாபமக்கினர்களா யிருத்தல் வேண்டுமென்றுந் தீர்மானம் செய்திருக்கின்றோம்.

எக்காலத்திலேனும் மிந்தவிரோதிகளாகிய சடுர்மிகள் தோன்றி முன்போலவே தானென்பதற்குக் கோரமூட சம்சார துக்கங்களை விளைவிக்க முயல்வார்களாயின், அவர்கள் சுவிசாராந்தரத்தின்கண் சொலிக்கும் ஞானாக்கினியினால் சுட்டுப் பஸ்மமாக்கப்படுவார்க ளென்று யாவருக்கும் வெள்ளியிடை மலைபோலத் தெரியும்படி விளம்பரஞ் செய்திருக்கின்றோம்.

இந்தப் பரமார்த்த நியாயத் தீர்ப்பைப் பரம சாது சிரோமணிகளாய்க் குருகுல வாசஞ்செய்து குருமுகமாய்ப் பூர்வாபர விரோதமில்லாது நன்றாய்ப் பக்தி சிரத்தையுடன் விசாரித்து அறிந்தவர்கள், பாரமார்த்திக சத்தாய் விளங்கும் நானென்னு மாத்மாவை, கர்த்திருத்வாதி பந்தமறச் செவ்வையாக வறிதற்குரியவராவர். நானென்பதன் பொருள்: சரீரத்திரய விலக்ஷணமாய், அவஸ்தாத்திரய சாட்சியாய், பஞ்சகோச வியதிரிக்தமாய், சச்சிதாநந்த சுயம்பிரகாச அபரோக்ஷ சாட்சாத்காரமாய்ப் பிர்ஹ்மாபின்னமாய் இருப்பது; அநாத்மா அசத்து யென்றுந் தீர்மானஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

சர்வ சாரோபநிஷத்.

† "ஸதிதி சரௌதிப்ரதீதி லக்ஷ்யம் ஸத்யம், அஸதித்ய வாச்யம்ஸத்யம், த்ரிகாலா பாத்யம் ஸத்யம், த்ரிகாலாநவ்யூதம் ஸத்யம்,யதஸ்திதத்ஸத்யம், ஏகமேவாத்விதீயம் ஸத்யம், ஸஜாதி விஜாதி பேதரஹிதம் ஸத்யம், ஸர்வகல்பநாதிஷ்டாநம்வாஸத்யம்".

(இ-ள்.) (மேலாகச சொல்லப்பட்டிருக்கிற) 'சத்யம்' எதுவென்றாலோ வேதங்களால் குறிக்கப்படும் லக்ஷியமான சத்துத்தான் சத்யம்; அசத்தென்றதைச் சொல்லக்கூடாதோ, அதுதான் சத்யம்; முக்காலத்திலும் பாதிகைகப்படாத தெதுவோ அது சத்யம்; முக்காலத்திலுந் தொடர்ந்து எது இருக்கிறதோ அது சத்யம்; எது இருக்கிறதோ அது சத்யம்; இரண்டாவதில்லாமலொன்றாகவே யிருப்பது சத்யம்; சஜாதீய விஜாதீய பேதமற்றது சத்யம்; சகல கற்பனைக்கும் அதிஷ்டானமாய் (இருப்பிடமாய்) இருப்பது சத்யம் என்றும்,

தேஜோபிந்தூபநிஷத்.

‡ "மாயாகார்யாதிகம நாஸ்தி மாயாநாஸ்தி பயம் நஹி, இதம் பிரபஞ்சம் நாஸ்த்யேவ நோத்பந்நம் நோஸ்தி கம்ச்வசித்." என்றும் கூறுவதும்,

சுருதிகள்.

* "நத்வம் நாஹம் நசாந்யம் ஸர்வம் பிரஹ்மைவ கேவலம், நசேதோநச கர்மாணி ஸர்வம் பிரஹ்மைவ கேவலம்" என்றும்,

---

† ஸதிதிஶ்ரௌதிப்ரதீதிலக்ஷ்யம் ஸத்யம், அஸதித்யவாச்யம் ஸத்யம், த்ரிகாலாபாத்யம்ஸத்யம், த்ரிகாலாநவச்சின்னம் ஸத்யம்॥ யதஸ்தி தத்ஸத்யம் ஏகமேவாத்விதீயம் ஸத்யம், ஸஜாதி விஜாதிபேதரஹிதம் ஸத்யம், ஸர்வகல்பநாதிஷ்டாநம் வாஸத்யம்.

‡ மாயாகார்யாதிகம்நாஸ்தி மாயாநாஸ்திபயம்நஹி, இதம் ப்ரபஞ்சம்நாஸ்த்யேவ நோத்பந்நம்நோஸ்திதம்க்வசித்.

* நத்வம்நாஹம்நசாந்யம் ஸர்வம் ப்ரஹ்மைவ கேவலம், நசேதோநச கர்மாணி ஸர்வம் ப்ரஹ்மைவ கேவலம்.

† "ஸர்வம் கல்விதம் பிரஹ்ம" "ஏகமேவாத் விதீயம் பிரஹ்ம" "தத்வமஸி" "நேஹநா நாஸ்திகிஞ்சந" என்றும் வேறு உபநிஷத்துக்கள் கூறுவதும், இத்தீர்மானத்திற்குத் தக்கவாதாரமாம்.

மாயையும் மாயாகாரியங்களும் மித்தை யென்றும், காலத்திரயத்திலும் வஸ்துவாந்தர மில்லையென்றும், நீ நான் அவன் இவன், அது இது வென்னும் வியவகாரங்களால் பேதம் வாஸ்தவமாக இருப்பதில்லை யென்றும் அறிந்து மஹா வாக்கியார்த்த விசாரத்தால் பரப்பிரஹ்மம் நானே யென்னுந் திட நிச்சயத்தோடு நிருவிகற்ப ஸகஜாமநஸ்க சிவ ராஜயோக சுக சமாதி பெற்றிருப்பவன் சுகப் பிரஹ்ம ரிஷியைப்போன்று சத்தியோஜாத முத்தியைப் பெறுவான். இவனே ஜீவன் முத்தனாவன். இவனுக்குத்தான் விதேகமுத்தி சித்தியாம். மற்றையர்கள் வாமதேவ ரிஷி அநுசரித்த பிபீலிகா மார்க்கத்தில் சென்று அநேக ஜன்மங்களைப் பெற்று முடிவில் கிரமமுத்தியை யடைவார்களென்பது ஸ்ரீசற்குரு சக்கரவர்த்தி யென்னும் உத்தம நியாயாதிபதியின் பரமார்த்த நிர்த்தேச மென்னும் நியாயத் தீர்ப்பாம்.

யாவரும் இவ்வாறு சத்தியஞாநாநந்த பரப்பிரஹ்ம சொரூபமாயுள்ள ஆத்மாவை யுள்ளவாறறிந்து ஸகஜாமநஸ்க சிவ ராஜயோகசுக சமாதியை யடைந்து நித்திய திருப்தியைப் பெற, சற்குரு ப்ரபு சக்ரவர்த்தி தீர்ப்புச் செய்த இந்தப் பரமார்த்த நியாயத் தீர்ப்பையும் இதிலடங்கிய சுருதி முதலிய பிரமாணங்களையும் ஆதியந்தமாகப் படித்துணர்ந்து, உணர்ந்தவாறு ஒழுகுகினவன் ஜீவன் முத்தனாவன். இதிற் சந்தேகமில்லை. இந்த ஜீவன் முத்திப் பதவியை யடைந்தவரே தந்நியர்கள்; அவர்களே துக்கபாவமுற்றவர்கள்; அவர்களே கிருத கிருத்தியர்கள்; அவர்களே பரமாநந்தப் பிராப்தி யுற்றவர்கள்; அவர்களே மஹாநுபாவர்கள்; அவர்களே மகாபுண்ணிய புருஷோத்தமர்கள்; அவர்களே சர்வ காமாப்தியை யடைந்தவர்கள். இவ்வாறு கூறியது சர்வ சாத்திர சம்மதமா மென்பது.

---

† 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿, 𑌨𑍇𑌹𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌚𑌨.

## பைங்களோபநிஷத்.

$ “நாஹம் ப்ரஹ்மேதி ஜாநாதி தஸ்ய முக்திர் நஜாயதே”

(இ-ள்.) நானே பிரஹ்மமென் றறியாதவனுக்கு முத்தி யுண்டாகின்றதில்லை.

## ஆத்மபோதம்.

* “நித்ய சுத்த விமுக்தைக மகண்டாநந்த மத்வயம், ஸத்யம் ஞாநமநந்தம் யத்பரம் ப்ரஹ்மாஹ மேவதத்”.

(இ-ள்.) நித்தியமாயும், சுத்தமாயும், விமுக்தமாயும், ஏகமாயும், அகண்டாநந்தமாயும், அத்வயமாயுமுள்ள பிரஹ்மம் எதுவோ அதுவே நானாகவிருக்கிறேன்.

## சுருதி.

‡ “ஆநந்த ரூபோஹ மகண்டபோதః” “பராத்பரோஹம் கநசித் பிரகாசகః” “மேகாய தாவ்யோம நசம்ஸ்ப்ருசந்தி ஸம்சாரது காநி நமாம்ஸ்ப்ருசந்தி”.

(இ-ள்.) நான் ஆநந்தரூபன், அகண்ட ஞானமுள்ளவன், சர்வசிரேஷ்டன், பிரகாசமான சித்கனன், ஆகாசத்தை மேகம் எப்படி தொடுகிறதில்லையோ அப்படி சம்சார துக்கங்கள் என்னைத் தொடுவதில்லை.

## பஞ்சதசி.

† “தந்யோஹம் தந்யோஹம நித்யம் ஸ்வாத்மாநமஞ்ஜஸா வேத்மி, தந்யோஹம் தந்யோஹம் ப்ரஹ்மாநந்தோவிபாதி மேஸ்

---

$ [illegible]

* [illegible]

‡ [illegible]

† [illegible]

பஷ்டம், தந்யோஹம் தந்யோஹம் து:கம் ஸாம் ஸாரிகம நவீ க்ஷேத்ய, தந்யோஹம் தந்யோஹம் ஸ்வஸ்யாஜ் ஞாநம் பலாயிதம் க்வாபி, தந்யோஹம் தந்யோஹம் கர்தவ்யம் மெநவித்ய தேகிஞ் சித், தந்யோஹம் தந்யோஹம் ப்ராப்தவ்யப் ஸர்வமத்ய ஸம்பந் நம், தந்யோஹம் தந்யோஹம் த்ருப்தேர்மே கோபமாபவேல் லோகே, தந்யோஹம் தந்யோஹம் தந்யோதந்ய: புந: புநர்தந்ய:; அஹோபுண்யம ஹோபுண்யம் பலிதம் பலிதம் த்ருடம், அஸ்ய புண்யஸ்ய ஸம்பத்தேர ஹோவய மஹோவயம், அஹோ சாஸ் திர மஹோ சாஸ்திர மஹோ குரு ரஹோ குரு: அஹோ ஜ்ஞாந மஹோஜ்ஞாந மஹோஸுக மஹோஸுகம்".

இதன்பொருள்.

எதனால் ஆத்மாவைச் சாட்சாத்தாக அறிகின்றேனே, அதனால் யான் தன்னியன், யான் தன்னியன்; எதனால் எனக்குப் பிரஹ்மாநந்தம் ஸ்பஷ்டமாகத் தோன்றுகின்றதோ, அதனால் யான் தன்னியன், யான் தன்னியன்; எதனாலிப்போது சம்சாரசம்பந்தியான துக்கத்தினை யான்காணேனே, அதனால் யான் தன்னியன், யான் தன்னியன், அஃதாவது கிருதார்த்தன்; எதனால் எனது சொரூபத்தின் அஞ்ஞானம் எங்கோடிவிட்டதோ, அதனால் யான் தன்னியன், யான் தன்னியன்; எதனாலெனக்குச் சிறிதுஞ்செய்யவேண்டியதில்லையோ அதனால் யான் தன்னியன், யான் தன்னியன்; எதனால் அடையத்தக்க சகலமும் அடையப்பட்டனவோ அதனால் யான் தன்னியன், யான் தன்னியன்; என்னுடைய திருப்திக்கு

---

𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂𑌸𑌾𑌂𑌸𑌾𑌰𑌿𑌕𑌂 𑌨𑌵𑍀𑌕𑍍𑌷𑍇𑌦𑍍𑌯 ।
𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑌲𑌾𑌯𑌿𑌤𑌂 𑌕𑍍𑌵𑌾𑌪𑌿 ।
𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌮𑍇𑌨𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 ।
𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌦𑍍𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌂 ।
𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌤𑍃𑌪𑍍𑌤𑍇𑌰𑍍𑌮𑍇𑌕𑍋𑌪𑌮𑌾𑌭𑌵𑍇𑌲𑍍𑌲𑍋𑌕𑍇 ।
𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋𑌹𑌂 𑌧𑌨𑍍𑌯𑍋 𑌧𑌨𑍍𑌯𑌃𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌰𑍍𑌧𑌨𑍍𑌯𑌃 ।
𑌅𑌹𑍋𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌹𑍋𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌫𑌲𑌿𑌤𑌂 𑌫𑌲𑌿𑌤𑌂 𑌦𑍃𑌢𑌂 ।
𑌅𑌸𑍍𑌯𑌪𑍁𑌣𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑍇𑌰𑌹𑍋𑌵𑌯𑌮𑌹𑍋𑌵𑌯𑌂 ।
𑌅𑌹𑍋𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌹𑍋𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌹𑍋𑌗𑍁𑌰𑍁𑌰𑌹𑍋𑌗𑍁𑌰𑍁𑌃 ।
𑌅𑌹𑍋𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌹𑍋𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌅𑌹𑍋𑌸𑍁𑌖𑌮𑌹𑍋𑌸𑍁𑌖𑌂 ॥

உலகத்தில் உவமை யாதுளது? எதுவுமில்லை; யான் தன்னியன், தன்னியன், தன்னியன், தன்னியன், மறுபடியும் மறுபடியும் தன்னியன்; எனது புண்ணியம் அஹோ (ஆச்சர்யம்) புண்ணியம் அஹோ புண்ணியம் திடமாகப் பலித்தது, திடமாய்ப் பலித்தது; இப்புண்ணியத்தின் சம்பந்தியினால் யாம் அஹோ யாம் அஹோ; வேதாந்தமாகிய சாஸ்திரமஹோ, சாஸ்திரம் அஹோ; பிரஹ்ம நிஷ்டராகிய குரு அஹோ, குரு அஹோ; பிரஹ்ம வித்தையாகிய ஞானம் அஹோ, ஞானம் அஹோ; வித்தியாநந்தமாகிய சுகம் அஹோ, சுகம் அஹோ.

## வாசிஷ்டம்.

காயத்தின் வேறாகத் தன்னைக் கண்டோன் காயமீறினுமறிவான் கன்னற் கட்டி, தீயிற்காயினுமறிந்த போது மின்பந் தீராத வாறுபோற் றெளிந்த ஞானி, மாயத்தின் மோகத்தாற் பேதமாகான மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர் மங்கை, நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யுமாபோ னிகழ்தொழிற் செய்யினும் பரத்தின் நிலைமை நீங்கான்.

நானெனும் பொருள்காணாதோன் ஞானவா காயங் காணான்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவின் மதியை மூடி
நானெனும் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே.

## திருமந்திரம்.

தன்னை யறியத தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றார்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
றன்னை யருச்சிக்கத் தானிருந் தானே.

## சூதசங்கிதை.

கரைகாணா திகட்கோ சரமாயுஞ் சர்வலோ கத்தி னுக்கு, முறைதருகா ரணமாயு மிருக்குமான் மாவையொளி ராடி தன்னில், விரைதரத்தன் னுருநோக்கல் போன்மெய்யிற் பார்ப்பவனே மேவு முத்தி, வரைதருமிவ் வதிகார சரீரத்திற் பாராதான் மருவும் பாசம்.

### கைவல்ய நவநீதம்.

நானென வுடலைத் தானே நம்பினே னனேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே.

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னுத் தரியத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்று நானே தாண்டவ மாடு கிறேன்.

என்றுள்ள பிரமாணங்களால் நன்கு விளங்கும். இவை கூறிய வாறு ஆநந்தித் திருப்பதே இந்த ஜன்ம மெடுத்ததற்குப் பிரயோஜனமாம். சுருதி ஸ்மிருதி புராணாதிகள் கூறியவாறு தன்னை யறிந்து சதாநந்தமாக விருப்பதே இந்நூலின் முக்கியப் பிரயோஜனமாம்.

### வாழி விருத்தம்.

சீரிலகு மருட்சோதிச் செல்வனென வோங்கித்
திகழ்ராம லிங்கனடி தினமும் வாழி
பேரிலகு மரபிலங்கப் பின்னுதித்து வந்த
பெரும்புகழா ளருணாசலேசன் வாழி
யேரிலகு மறைநான்கு மினிதுணர்ந்து
இகபரமற் றெளிதருட்பே ரின்பர் வாழி
நேரிலகும் பரமார்த்த நியாயத் தீர்ப்பு
நிலைத்துலகி லெந்நாளு நீடு வாழி.

பரமார்த்த நியாயத் தீர்ப்பு



# த ச க ம்.



1. ஓதுமண்ணிலை யுதகமிங்கிலை யொளிருந்தேசிலை காலிலை
பூதவிண்ணிலை யிந்திரியமிலை புகன்றவைகளின் றிரளிலை
யேதுமேவிய சாரமேவி யிறப்பதாவிச் சுழுத்தியில்
மீதியாயுள பூரணாநந்த மேனியான சிவோஹமே.

2. சாதியுமிலை யாச்ரமுமிலை ஜாதியாச்ரம தருமமா
நீதியுமிலை தாரணையிலை நிதித்தியாசன யோகமே
ஆதியுமிலை கற்பனையப வாதவாச்ரய மாதலால்
நீதியாய்நிலை நின்றபூரண நித்தபோத சிவோஹமே.

3. தந்தைதாயிலை தேவருமிலை தங்குலோகங் களுமிலை
சந்தைவேதங்க ளில்லையாகங்கள் சகலதீர்த்தங் களுமிலை
தொந்தமற்ற சுழுத்தியிற்றெருட ராதுநீங்குத லான்மகா
நந்தபூரண சத்யகேவல ஞானநித்த சிவோஹமே.

4. பண்ணுஞ்சாங்கிய சைவமுமிலை பாஞ்சராத்திர முமிலை
புன்னுஞ்ஜைநமீ மாஞ்சையுமிலை புலகுண்மற்ற மதமிலை
துன்னுஞானிக ளநுபவப்பிர சித்ததாய சொரூபமாய்ப்
பின்னமேயற நின்றபூரண பரஹ்மமென்ற சிவோஹமே.

5 பகருமேலிலைக் கீழிலைப்பா வுள்ளிலைப்புற முமிலை
யகலமேநடு வில்குறுககிலை யாகிழக்கிலை மேற்கிலை
ககனமென்ன நிறைந்தகண்டசிற் ககனகேவல ரூபமாய்ச்
சுககனச்சுக தாதிபேத விஹீனசுத்த சிவோஹமே.

6. வெள்ளையுமிலை கருமையுமிலை வேறுபீத சிவப்பிலை
குள்ளமுமிலை நெடியதுமிலை குறைபெருத்தலு மில்லையே
தள்ளியிதனை ரூபமுந்தவி ராதசோதி சொரூபமா
புள்ளபூரண சத்யகேவல வுபாதிஹீன சிவோஹமே.

7. சாத்திரந்தனை போதிப்பானிலை சாத்திரம்படிப் பானிலை
சாத்திரமிலைப் பாடமுமிலை சாற்றுநீயிலை நானிலை
சாத்தியாதி ஜகத்திலைச்சல மற்றுமிஞ்சுத லான்மகா
சாத்திரப்பொரு ளானபூரண சாந்தரூப சிவோஹமே.

8. ஜாக்கிரமிலை சொப்பனமிலை சார்சுழுத்தி யிலையிதிற் [ன்
றுக்குவிச்வனிற் றைசதனிலை தங்கும்ப்ராக்யனு மில்லைமூ

ருக்கையுமிலை யவையவித்தை விகாரமாதலி னலிவை நீக்கிநின்றிடுந் துரியபூரண நித்தரூப சிவோஹமே.

9. அதிவியாபகமாதலாலழி வற்றதத்துவ மென்றதால், சுதசித் தப்பொரு ளானதால் தன்னுள் வேறொன்றைத்தொட ராததால், சததமாயுள சிவமொழிந்திவண் சகமெனும்பொ ருளேயிலை, யதுவிதென்றுரை செய்வதற்கரி தாமகண்ட சிவோஹமே.

10. இல்லையேக மெனுஞ்சொ லுமிரண் டென்றுசொல்லுவ தெங் ஙனே, யில்லைகேவல மோட்சகேவல மில்லைசூனியா சூனியம், எல்லையற்றவ கண்டசிற்சுக வேகபூரண வஸ்துவாம், தொல் லைவேத முடிப்பொருடனை தோன்றவெப் படியோதுவாம்.



𑌦𑌶𑌶𑍍𑌲𑍋𑌕𑍀

𑌶𑍍𑌲𑍋॥ 𑌨𑌭𑍂𑌮𑌿𑌃 𑌨𑌤𑍋𑌯𑌂 𑌨𑌤𑍇𑌜𑍋 𑌨𑌵𑌾𑌯𑍁𑌃,
𑌨𑌖𑌂𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂𑌵𑌾 𑌨𑌤𑍇𑌷𑌾𑌂 𑌸𑌮𑍂𑌹𑌃,
𑌅𑌨𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍍𑌯𑍇𑌕𑌸𑌿𑌦𑍍𑌧𑌃,
𑌤𑌦𑍇𑌕𑍋𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃𑌕𑍇𑌵𑌲𑍋𑌹𑌮𑍍 ॥ (௧)

,, 𑌨𑌵𑌰𑍍𑌣𑌾𑌃 𑌨𑌵𑌰𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌮𑌾𑌚𑌾𑌰𑌧𑌰𑍍𑌮𑌾,
𑌨𑌮𑍇𑌧𑌾𑌰𑌣𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌯𑍋𑌗𑌾𑌦𑌯𑍋𑌪𑌿,
𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌹𑌂 𑌮𑌮𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌹𑌾𑌨𑌾𑌤𑍍,
𑌤𑌦𑍇𑌕𑍋𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃𑌕𑍇𑌵𑌲𑍋𑌹𑌮𑍍 ॥ (௨)

,, 𑌨𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾𑌵𑌾 𑌨𑌦𑍇𑌵𑌾𑌨𑌲𑍋𑌕𑌾,
𑌨𑌵𑍇𑌦𑌾𑌨𑌯𑌜𑍍𑌞𑌾𑌨 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑌿,
𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑍌 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑌿𑌶𑍂𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍,
𑌤𑌦𑍇𑌕𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃𑌕𑍇𑌵𑌲𑍋𑌹𑌮𑍍 ॥ (௩)

,, 𑌨𑌸𑌾𑌙𑍍𑌖𑍍𑌯𑌂 𑌨𑌶𑍈𑌵𑌂 𑌨𑌤𑌤𑍍𑌪𑌾𑌞𑍍𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑌂,
𑌨𑌜𑍈𑌨𑌂 𑌨𑌮𑍀𑌮𑌾𑌂𑌸𑌕𑌾𑌦𑍇𑌰𑍍𑌮𑌤𑌂𑌵𑌾,
𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍,
𑌤𑌦𑍇𑌕𑍋𑌵𑌶𑌿𑌷𑍍𑌟𑌃 𑌶𑌿𑌵𑌃𑌕𑍇𑌵𑌲𑍋𑌹𑌮𑍍 ॥ (௪)

,, நசோர்த்வம் நசாதோ நசாந்தர்நபாஹ்யம்,
நமத்யம் நதிர்யங் நபூர்வாபராதிக்,
வியத்வ்யாபகத்வாதகண்டைகரூப:,
ததேகோவஸிஷ்ட: ஸிவகேவலோஹம் ॥ (ரு)

,, நஸுக்லம் நக்ருஷ்ணம் நரக்தம் நபீதம்,
நகுப்ஜம் நபீநம் நஹ்ரஸ்வம் நதீர்கம்,
அரூபம் ததாஜ்யோதிராகாரகத்வாத்,
ததேகோவஸிஷ்ட: ஸிவகேவலோஹம் ॥ (சா)

,, நஸாஸ்தா நஸாஸ்த்ரம் நஸிஷ்யோநஸிக்ஷா,
நசத்வம் நசாஹம் நசாயம் ப்ரபஞ்ச:,
ஸ்வரூபாவபோதோ விகல்பாஸஹிஷ்ணு:
ததேகோ வஸிஷ்ட: ஸிவகேவலோஹம் ॥ (எ)

,, நஜாக்ரந்நமேஸ்வப்நகோ வாஸுஷுப்தி:,
நவிஸ்வோநவாதைஜஸ: ப்ராஜ்ஞகோவா,
அவித்யாத்மகத்வாத்த்ரயாணாந்துரீய,
ததேகோவஸிஷ்ட: ஸிவகேவலோஹம் ॥ (அ)

,, அபிவ்யாபகத்வாத்திதத்வப்ரயோகாத்,
ஸ்வதஸ்ஸித்தபாவா தநந்யாஸ்ரயத்வாத்,
ஜகத்துச்சமேதத் ஸமஸ்தம் ததந்யத்,
ததேகோவஸிஷ்ட: ஸிவகேவலோஹம் ॥ (கூ)

,, நசைகம் ததந்யத் த்விதீயம் குத: ஸ்யாத்,
நகேவலத்வம் நசாகேவலத்வம்,
நஸூந்யம் நசாஸூந்ய மத்வைதகத்வாத்,
கதம் ஸர்வவேதாந்த ஸித்தம் ப்ரவீமி ॥ (ய)

ஸிதாந்தபிந்து ஸம்பூர்ணம்.



விஜ்ஞாந நௌகாஷ்டகம்

ஸ்ரீ. தபோயஜ்ஞ தாநாதிபி: ஸுத்தபுத்தி,
,, விரக்தோ ந்ருபாதே: பதே துச்சபுத்த்யா,
பரித்யஜ்ய ஸர்வம் யதாப்நோதி தத்வம்,
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥ (க)

,, 𑌦𑌯𑌾𑌲𑍁𑌂 𑌗𑍁𑌰𑍁𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌂,
𑌸𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌾𑌰𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂,
𑌯𑌦𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௨)

,, 𑌯𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂,
𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌂 𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌶𑍂𑌨𑍍𑌯𑌂,
𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑍈𑌕𑌗𑌮𑍍𑌯𑌂 𑌤𑍁𑌰𑍀𑌯𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௩)

,, 𑌯𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌂,
𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌂 𑌚 𑌸𑌦𑍍𑌯𑍋 𑌯𑌦𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑍇,
𑌮𑌨𑍋𑌵𑌾𑌗𑌤𑍀𑌤𑌂 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௪)

,, 𑌅𑌨𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌭𑍁𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌂 𑌨𑌿𑌰𑍀𑌹𑌂
𑌶𑌿𑌵𑌂 𑌸𑌙𑍍𑌗𑌹𑍀𑌨𑌂 𑌯𑌦𑍋𑌙𑍍𑌕𑌾𑌰𑌗𑌮𑍍𑌯𑌂,
𑌨𑌿𑌰𑌾𑌕𑌾𑌰𑌮𑌤𑍍𑌯𑍁𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌹𑍀𑌨𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௫)

,, 𑌨𑌿𑌷𑍇𑌧𑍇 𑌕𑍃𑌤𑍇 𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑍀𑌤𑌿 𑌵𑌾𑌕𑍍𑌯𑍈𑌃
𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌦𑌾𑌭𑌾𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂,
𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌤𑍍𑌰𑌯𑌾𑌤𑍀𑌤𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑍇𑌕𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௬)

,, 𑌯𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑍇𑌶𑍈𑌃 𑌸𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌂,
𑌯𑌦𑌾𑌭𑌾𑌤𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌤𑌦𑌾𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂,
𑌯𑌦𑌾𑌲𑍋𑌚𑌨𑍇 𑌹𑍇𑌯𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌸𑌮𑌸𑍍𑌤𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௭)

,, 𑌯𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑌿𑌨𑍍𑌧𑍌 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌃 𑌪𑍁𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍,
𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌲𑌾𑌸𑌃 𑌸𑌮𑌸𑍍𑌤𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌃,
𑌤𑌦𑌾 𑌨 𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌯𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂,
𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌦𑍇𑌵𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑌿॥ (௮)

॥ பலஶ்ருதி ॥

ஶ்லோ. ஸ்வரூபாநுஸந்தாந ரூபஸ்துதிம் ய:,
படேதாதராத்பக்திபாவோ மநுஷ்ய:,
ஶ்ருணோதீஹ வா நித்யமுத்யுக்தசித்தோ,
பவேத்விஷ்ணுரத்ரைவ வேதப்ரமாணாத் ॥

,, விஜ்ஞாநநௌகாம் பரிக்ருஹ்ய கஶ்சித் தரேத்யதஜ்ஞாந
மயம் பவாப்திம் । ஜ்ஞாநாஸிநா யோ ஹி விச்சித்ய
த்ருஷ்ணாம் விஷ்ணோ: பதம் யாதி ஸ ஏவ தந்ய: ॥

இதி ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ ஶங்கர
பகவத்பாதாசார்யவிரசிதம்
விஜ்ஞாநநௌகாஷ்டகம்
ஸம்பூர்ணம்.

ப்ராதஸ்ஸ்மரணத்ரயம்.

ஶ்லோ॥ ப்ராதஸ்ஸ்மராமி ஹ்ருதி ஸம்ஸ்புரதாத்மதத்வம் ।
ஸச்சித்ஸுகம் பரமஹம்ஸகதிம் துரீயம் ।
யத்ஸ்வப்நஜாகரஸுஷுப்திமவைதி நித்யம் ।
தத்ப்ரஹ்ம நிஷ்கலமஹம் ந ச பூதஸங்க: ॥

,, ப்ராதர்பஜாமி மநஸோ வசஸாமகம்யம் ।
வாசோ விபாந்தி நிகிலா யதநுக்ரஹேண ।
யந்நேதிநேதிவசநைர்நிகமா அவோசு: ।
தம் தேவதேவமஜமச்யுதமாஹுரக்ர்யம் ॥ ॥௨॥

,, ப்ராதர்நமாமி தமஸ: பரமர்கவர்ணம் ।
பூர்ணம் ஸநாதநபதம் புருஷோத்தமாக்யம் ।
யஸ்மிந்நிதம் ஜகதஶேஷமஶேஷமூர்தௌ ।
ரஜ்ஜ்வாம் புஜங்கம இவ ப்ரதிபாஸிதம் வை ॥ ॥௩॥

பலஶ்ருதி

,, ஶ்லோகத்ரயமிதம் புண்யம் லோகத்ரயவிபூஷணம் ।
ப்ராத:காலே படேத்யஸ்து ஸ கச்சேத்பரமம் பதம் ॥

ப்ராதஸ்ஸ்மரணத்ரயம் ஸம்பூர்ணம்.

உ

இந்நூலாசிரியரின் மீது

கா. சொரூபாநந்தமணி இயற்றிய

# அக்ஷரமாலிகை.



### நேரிசை வெண்பா.

சீர்கொண்ட க்ஷேத்திரத்திற் றேர்கச்சி மாநகர்வாழ்
நார்கொண்ட ஸ்ரீராமா நந்தன்மேல்—நேர்கொண்ட
வட்சரத்தின் மாலிகையை யன்புடனே யான்சூட
வட்சரன்முன் காப்பா னறிந்து.



இ—ம் சஹாநு தா—ம் ஆதி.

கண்ணிகள்.

ராமாநந் தேந்திர ராமநந் தேந்திர
ராமநந் தேந்திர ராமநந் தாஹர.

1. அண்டமும் பிண்டமு மாண்டப்ர தாபனே
யண்டிவந் தேனெனை யாள்வாய் சுதீபனே. ராமா

2. ஆரண வாகம மறிந்திடா அன்பனே
காரண காரியங் காட்டிடு நண்பனே. ராமா

3 இன்பமுந் துன்பமு மில்லா யிறையோனே
யன்பெனும் பிடியினு ளமரு மறையோனே. ராமா

4. ஈசசு ரேசர்க ளிறைஞ்சிடு நேசனே
வாசா மகோசர மாகும்ப்ர காசனே. ராமா

5. உருவமு மருவமு மாகிய வுண்மையே
யிருண்மய நீக்கிமே லேற்றிடு நன்மையே. ராமா

6. ஊச லாடுமன மோய்ந்தரு ளோங்கிட
நாச மிலாதெனை நயந்தென்றுந் தாங்கிட. ராமா

7. எந்தையே வந்தெனை யென்று மணைந்திடாய்
சந்ததந் தனியமு தளித்தினி மணர்ந்திடாய். ராமா

8. ஏகாந்த சுகந்தந் தெனைமன்றி லேற்றிடாய்
மோகாந்த காரத்தில் மூழ்காமற் காத்திடாய். ராமா

9. ஐம்புலக் கள்வரை யகற்றுமணித் தோளா
வானந்தத் தாண்டவ மாடுமலர்த் தளா. ராமா

10. ஒருமொழி தனைதந் துளவினைக் காட்டினாய்
கருவற வெனுட்சதா கனிந்தமு தூட்டினாய் ராமா

11. ஓங்கார பஞ்சரத் தோங்குமா மதியமே
யீங்கார வென்னுள மெழுமரு ளுதயமே. ராமா

12 ஔவ்வியம் பேசினு னழிந்திடா தருளை
செவ்வெனச் சேர்ந்திடச் செய்தசெம் பொருளே. ராமா

13. அஃதென விஃதென வலைந்துநா னோடி
வஃகித் துயரத்தால் வெம்பினேன் வாடி ராமா

14. கமலா சனன்மால் கண்டிடாச் சோதியே
நிமலா நந்தத்தை நிதமருள் நீதியே. ராமா

15. எப்போல் வனைத்துநான் ஞானசொ ரூபனே
யெப்போது மின்ப மேற்றேன்பர தாபனே. ராமா

16. சமதம குணங்களைத் தன்யனே தருவாய்
இமயவர் பெருமானே யிக்கணம் வருவாய். ராமா

17. ஞாநாஞ் ஞாகவி நாசன நாயகா
மோனா நந்தமா மூர்த்திமெய தாயகா. ராமா

18. டம்ப மிகுந்துநான் டமருக பாணியே
யம்புவி யிற்றுழ்ந்தே னம்புலி வேணியே. ராமா

19. நண்ணும் வினைகெட நாளுமே யாளாய்
விண்ணுமண் ணெங்கும் விளங்கும்பொற் றளா. ராமா

20. தண்ணருள் கொண்டெனைத் தழுவுந் தயாபரா
விண்மணி யாயெங்கும் விளங்கும் குணாகரா. ராமா

21. நாளு மணிமய பூஷண நாதா
நாளு றெனத்தேடு நண்பர்ச மேதா. ராமா

22. பரமக்ரு பாகர பார்வதி மனோஹரா
சரணபத் மந்தாத் தடையேனோ ஹராஹர ராமா

23 மனுலய பூசனே மனோன்மணி நேசனே.
மனுலய பூசனே சின்மய தேசனே. ராமா

24. யெதிராஜ வள்ளல்நின் னிணையடி போற்றினேன்
விதிவழி சாராமல் விலக்கிடாய் சாற்றினேன். ராமா

25. ரவிமதி யொளிர்முக ரஞ்சித போதா
குவிமுலை யுமைபணி குஞ்சித பாதா. ராமா

26. லாவண் யாம்ருத லலித ஸதாசிவ
காருண் யாவெனைக் காக்கும்பிர தாபவ. ராமா

27. வடலூர்ச் சிற்சபை வாழ்சபா பதியே
இடமார் ஞானந்தந் தீர்தயா நிதியே. ராமா

28. வாழ்வருட் சபையில் வளர்ந்திடுந் தருவே
தாழ்விலா தோங்கிடுந் தன்மய குருவே. ராமா

29. லங்காதி பன்விழ ரணக்களஞ் சென்று
சிங்கா சனங்கொண்டோன் சேவிக்குங் குன்றே. ராமா

30. ராமலிங் காம்ருத மீந்தநற் றியாகி
ராமா நந்தசிவ ராஜாமா யோகி. ராமா

31. நவநவக் காட்சிகள் நலமுட னளித்த
சிவசொரூ பாநந்தன் சிந்தையுட் களித்த. ராமா

நிச்சலராமாநந்தன் நீள்கழல்கள் வாழி

அக்ஷரமாலிகை

